கற்பனை : வி. ரூபஸ்

# வி. ஐ. பி. பயாஸ்கோப்!

'இன்றைய சூழ்நிலையில்
தங்களுக்குப் பிடித்த திரைப்படம் எது?' —என்று
பிரபல பிரமுகர்களைக் கேட்டபோது...

- ஜெ. ஜெயலலிதா — தண்ணீர்... தண்ணீர்...., செங்கோட்டை
- மு. கருணாநிதி — மகனே, நீ வாழ்க!
- ஸ்டாலின் — பாலம்
- ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் — விதி
- ஜி.கே.வாசன் — அன்னை ஓர் ஆலயம்.
- ராமதாஸ் — பாகப்பிரிவினை
- வை.கோ. — பாயும் புலி
- நெடுமாறன் — சிறைச்சாலை
- தேவாரம் — திக்குத் தெரியாத காட்டில்
- வீரப்பன் — எவனா இருந்தா எனக்கென்ன?
- வாஜ்பாய் — நாம் இருவர்
- முஷாரஃப் — காஷ்மீர் காதலி
- ரஜினிகாந்த் — புரியாத புதிர்
- கிருஷ்ணசாமி — நானே ராஜா நானே மந்திரி
- சுப்ரமணிய சாமி — கனம் கோர்ட்டார் அவர்களே...
- நல்லக்கண்ணு — வறுமையின் நிறம் சிவப்பு
- விடுதலைப் புலி பிரபாகரன் — அமைதிப்படை
- கலாநிதி மாறன் — சூரியன்
- மு.க. அழகிரி — அண்ணன் என்னடா தம்பி என்னடா
- ரோஜா — செல்வமணி — தேன் நிலவு
- ப. சிதம்பரம் — ஒரு கை ஓசை


கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com

புதிய ஈ மெயில் முகவரிகள் :

எடிடோரியல் : kalki@kalkiweekly.com

சந்தா : subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் : info@kalkiweekly.com




**கௌசி**

# தொடரும் பழி வாங்கல்?

**"பொய் வழக்குப் போட்டதாக பின்னர் போலீஸ் மீதே வழக்குப் போட வேண்டும். ஆளுங்கட்சியின் அதிகார துஷ்பிரயோகங்களை இப்படித்தான் எதிர் கொண்டாக வேண்டும்"**

நக்கீரன் நிருபர் சிவசுப்பிரமணியன் மீது பல வழக்குகளை தமிழக அரசு பதிவு செய்து, ஜாமீனில் வெளி வராதபடி ஒரு வருடமாக சிறையில் வைத்திருக்கும் நிலை ஒரு பக்கம். மறுபக்கம் ஆசிரியர் கோபால் மீதும் பல வழக்குகள், விசாரணை, அலைக்கழிப்பு. இந்த நிலையில் நக்கீரன் நிருபர் பிரகாஷ் மீது ஒன்பது கிரிமினல் பிரிவுகளில் வழக்கு பதிவு செய்யப்பட்டு அவர் கைது செய்யப்பட்டுள்ளார். அதில் மூன்று பிரிவுகள் உடனடியாக ஜாமீனில் வெளிவர முடியாத பிரிவுகள்.

"சில இதழ்களுக்கு முன்னர் 'நீலப் படத்தில் அ.தி.மு.க மகளிர் அணியினர்' என்ற கட்டுரை வெளியிட்டிருந்தோம். யாரைப் பற்றியெல்லாம் எழுதியிருந்தோமோ, அவர்களுடைய பதிலையும் கட்டுரையில் வாங்கிப் போட்டிருந்தோம். இந்தக் கட்டுரையைப் பார்த்த அ.தி.மு.க மேலிடம் சம்பந்தப்பட்ட கட்சிப் பிரமுகர்களைக் கட்சியைவிட்டு நீக்க முடிவு செய்தது. உடனே லோக்கல் கட்சிப் பிரமுகர்கள் 'அது பொய்ச் செய்தி' என்று கூறி வாதிட்டனர். அதன் விளைவுதான் இந்த வழக்கு. இது தவிர, சமீப காலங்களில் தொடர்ந்து அதிமுக ஆட்சியின் ஊழல்களை அம்பலப்படுத்த முயன்று வருகிறோம். மேலும், இலவச மின்சாரம் ரத்தாகும் என்று முதன்முதலாக ஆதாரபூர்வமாக செய்தி வெளியிட்டோம். இவையெல்லாம் ஆளுங்கட்சியினரை எரிச்சலடைய வைத்து, இது போன்ற வழக்கைப் போடத் தூண்டியிருக்கிறது" என்கிறார் நக்கீரன் இணை ஆசிரியர் காமராஜ்.

எஸ்.டி.டி பூத் ஊழியரை மிரட்டியதாகவும் நிருபர் பிரகாஷ் மீது வழக்கு பதிவு செய்யப்பட்டிருக்கிறது. தவிர, தன்னை மானபங்கப்படுத்த முயன்றதாகவும், பணம் கேட்டு மிரட்டியதாகவும் தனிப்பட்ட புகாரை ஆளுங்கட்சி பெண் பிரமுகர் ஒருவர் போலீஸில் கொடுத்துள்ளார். அதைத் தொடர்ந்து கைது செய்யப்பட்டிருக்கிறார் பிரகாஷ்.

இது போன்ற விவகாரங்



• பிரகாஷ்

களில் மறுப்பு வெளியிடுவதும், பாதிக்கப்பட்டவர் பத்திரிகையின் மீது மான நஷ்ட வழக்குப் போடுவதும், பிரஸ் கவுன்ஸிலில் புகார் கொடுப்பதும்தான் நடைமுறை. "ஆனால் பத்திரிகையாளர் மீது இப்படித் தனிப்பட்ட முறையில் புகார் பதிவு செய்து நடவடிக்கை எடுப்பது என்பது அதிகார துஷ்பிரயோகம்'' என்கிறார் காமராஜ்.



• விஜயன்

''வழக்கமாக பாதிக்கப்பட்டவர், பதிப்பிப்பவர் மற்றும் ஆசிரியர் மீதுதான் நடவடிக்கை எடுப்பார். இப்போது நேரடியாக நிருபரின் மேலேயே குற்றம் சாட்டப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது'' என்கிறார் அவர்.

''இது மிக ஆபத்தான போக்கு'' என்று சொல்கிறார்கள் மூத்த பத்திரிகையாளர்கள்.

"கட்டுரையில் எழுதப்பட்டது பொய் என்று பாதிக்கப்பட்டவர் வழக்குத் தொடர்ந்தால் தங்களிடமிருக்கும் ஆதாரங்களைக் காட்டி பத்திரிகை வழக்கை சந்திக்கும். அது பின் நீதி மன்ற முடிவாக இருக்கும். ஆனால் எழுதப்பட்ட விஷயத்திற்குப் பழி வாங்கும் நடவடிக்கையில் இறங்கினால் வழக்கைச் சந்திக்க வேண்டியதுதான். பத்திரிகையாளர் தரப்பில் நியாயம் இருக்கும் பட்சத்தில், பொய் வழக்குப் போட்டதாக பின்னர் போலீஸ் மீதே வழக்குப் போட வேண்டும். ஆளுங்கட்சியின் அதிகார துஷ்பிரயோகங்களை இப்படித்தான் எதிர் கொண்டாக வேண்டும்'' என்கிறார் ஸீனியர் வழக்கறிஞர் விஜயன்.

• வல்லிக்கண்ணன்



## மானாவாரிப் பூக்கள்

"நாட்டிற்காக, இலக்கியத்திற்காக வாழ்க்கை முழுமையையும் அர்ப்பணித்தவர்களை பாரதி காலத்தில் பார்க்க முடிந்தது. நிகழ் காலத்தில் அப்படி யாரேனும் இருக்கிறார்கள் என்றால் நம் கண் முன்னர் வாழ்ந்து காட்டிக் கொண்டிருக்கிறார் வல்லிக்கண்ணன். இந்த எண்பத்து இரண்டு வயதிலும் எழுதிக்கொண்டு, ஊர்தோறும் இலக்கியப் பயணம் செய்துவரும் வல்லிக்கண்ணன் எங்கே தமது இலக்கியப்பணிக்கு இடையூறு வந்துவிடுமோ என அஞ்சி, திருமணத்தையே தவிர்த்து, எதையுமே எதிர்பார்க்காமல் வாழ்ந்து வருபவர். அவரது உழைப்பு வீணாகி, விடவில்லை. இன்று அவரைத் தேடி ஆதித்தனார் நினைவு 'மூத்த தமிழறிஞர் விருது' வந்து சேர்ந்திருக்கிறது" என்று பாராட்டினார் எழுத்தாளர் மேலாண்மை பொன்னுச்சாமி. தினத்தந்தி நிறுவனர் சி.பா. ஆதித்தனாரின் 98வது பிறந்த நாள் விழாவில் வழங்கப்பட்ட மற்றொரு விருதான 'இலக்கியப் பரிசு' மேலாண்மைப் பொன்னுச்சாமிக்கு. அவரது 'மானாவாரிப்பூ' என்ற சிறுகதை நூலுக்கு வழங்கப்பட்டது. விருது பெறும் ஒரு சக எழுத்தாளரை அவர் கண் எதிரேயே வாழ்த்துவது தமிழ்ச் சூழலில் மானாவாரிப் பூ போல அபூர்வம்!



• மேலாண்மை பொன்னுச்சாமி

— ஸ்ரீ

# நீங்கள் கேட்டவை-தராசு

# ரஜினியைப் பாராட்டலாமா?

❐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ஜி.ஜி. சரவணன்,
52, மேல வீதி,
திரு இந்தளூர்,
மயிலாடுதுறை - 609 001.

✱ ரூ. 50/- பரிசு பெறுபவர்:
கு.ப. இரகுநாதன்,
5, (ப.எண்.3) யாதவத் தெரு,
பூவிருந்தவல்லி,
சென்னை - 600 056.

● ஜெ. ரஞ்சிதமணி,
கோவை - 45.

*? லாட்டரிச் சீட்டு, அதிர்ஷ்டம் ஆகியவற்றை நம்புவோர் அதிகரித்து வருகிறார்களே...?*

! தப்பு! லாட்டரிச்சீட்டு, அதிர்ஷ்டம் ஆகியவற்றை நம்பி ஏமாறுகிறவர்கள் அதிகரித்து வருகிறார்கள் என்பதே சரி. லேட்டஸ்டாக கிரிக்கெட் பெட்டிங்.

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

*? 'சந்தன வீரப்பனை மூலிகை சக்தியால் மட்டுமே பிடிக்க முடியும். படை பலத்துடன் போராடுவது வீண்..' என்று பிரபல மூலிகை சித்தர் ஞானசித்தன் கூறியுள்ளது பற்றி...?*

! தாராளமாய்ப் பிடிக்கட்டும். யார் வேண்டாமென்றார்கள்! அப்படியே மார்க்கெட்டில் உலவும் போலி மூலிகை டாக்டர்கள், சித்தர்களையும் பிடித்துப் போடட்டும்.

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? சமீபத்தில் தாங்கள் மிகவும் டென்ஷனாக இருந்தது எப்போது...?*

! ரேஷன் அரிசி கியூவில் நின்றபோதுதான். அங்கே அரிசி வாங்குவதற்குள் மறுபடி விலை ஏறிவிடுமோ என்று ஒரே டென்ஷன் போங்க!

● வி. கவிதா ராஜேஸ்வரி,
எசனை.

*? இளங்கோவனைப் போல் சோ.பாவால் செயல்பட முடியுமா? தமிழ்நாடு காங்கிரஸ் கட்சிக்கு வயதான தலைவர் பொருத்தமா...?*

! இருவரும் ஈகோ இல்லாமல் செயல்பட்டால் உட்கட்சிப் பூசலைச் சமாளித்து விடலாம். காங்கிரஸுக்கு வயது ஒரு இஷ்யூவே அல்ல.

● உஷா, சென்னை — 4.

*? 'பாபா' திரைப்படத்தால் தியேட்டர் அதிபர்கள் நஷ்டம் அடையக் கூடாது என்று, அவர்களுக்கு உரிய தொகையை ரஜினி திருப்பித் தந்து இன்ப அதிர்ச்சியை ஏற்படுத்தியது பாராட்டுக்குரிய விஷயம் தானே?*

! நிச்சயமாகப் பாராட்டப்பட வேண்டியதுதான். அதே சமயம் படம் எதிர்பார்த்த அளவு வெற்றி பெறவில்லை என்பதும் உறுதியாகிறது. திரைப்படப் பொருளாதாரத்தின் அளவுகோல்கள் தப்பானவை என்பதும் புரிகிறது.

● க.நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

*? ரேஷனில் வினியோகிக்கும் அரிசிக்கு மானியம் அளிப்பதால் ஏற்படும் நிதிச் சுமையைக் குறைக்கவே ரேஷன் அரிசி*


• சளைத்தவர்கள்...


• ...அல்ல!


• தாராள பாபா!


• வாலைப் பிடிப்பவர்!


• உயர்ந்த ஒருங்கிணைப்பு


• வேண்டாதவர்!


• ஒரு ஜாம் தேவை!

யின் விலை உயர்த்தப்பட்டுள்ளதாக முதல்வர் ஜெயலலிதா கூறியுள்ளாரே...?

! மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் மக்கள் ஆட்சியில் சில அடிப்படையான அம்சங்களில் மானியங்கள் இருந்தே ஆக வேண்டும். அரசின் செலவுகளைக் குறைக்க வேறு எத்தனையோ வழிகள் உள்ளன. தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடித்தால் மாடு ஒருநாள் பொறுமை இழந்து உதைக்காமல் விடாது.

● எஸ். பத்மசுந்தரி,
மதுரை - 14.

? பொதுச் சேவை செய்வதற்குப் பெரிதும் தேவை பணமா? மனமா?

! மனம் – தன்னலமற்ற மனம் இருந்தால், பணம் தன்னால் வரும்.

● பா. அச்சுதன்,
சென்னை - 30.

? மறக்க முடியாத நிகழ்ச்சி...?

! அக்டோபர் இரண்டு பொதிகையில் கண்ட 'பிஞ்சுகள் வழங்கும் பஞ்சரத்தினம்!' பன்னிரண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகள் இசைக் குழுவினர். தியாகராஜரின் பஞ்சரத்தின கீர்த்தனைகளை வெகு அழகாக, ஒருங்கிணைந்து, பேப்பர் பார்க்காமல் பாடினார்கள். ஒருங்கிணைப்பாளர் சுலோசனா பட்டாபிராமனுக்கு ஒரு 'பலே, பேஷ்' போடலாம். திருவையாறில் ஆராதனையின் போது, வித்வான்கள் இந்த மாதிரி பயிற்சி செய்து சிரத்தையாய்ப் பாடலாமே என்று எண்ணாமல் இருக்க முடியவில்லை.

● ஆர். அப்துல் சலாம்,
திருச்சி - 21.

? இப்போதுள்ள சூழ்நிலையில் குஜராத்தில் மோடியின் ரத யாத்திரை அவசியம்தானா...?

! மோடியே தேவையில்லை என்னும்போது அவருடைய ரத யாத்திரை எப்படி அவசியமானதாகும்!

● ஜி.ஜி.சரவணன்,
மயிலாடுதுறை. ❑

? மும்பை தொடர் குண்டு வெடிப்பு வழக்கில் முக்கியக் குற்றவாளியான அபு சலாமை இந்தியாவுக்குக் கொண்டுவர முடியாமல் போவதற்கு, போர்சு



## உதவி தேவை!

அமரர் கல்கி, 'சில்லறை சங்கதிகள் பிரைவேட் லிமிடெட்' (குமுதினி எழுதியது) 'அப்பாவும் மகனும்' (பொ.திரிகூட சுந்தரம் பிள்ளை) போன்ற பல நூல்களுக்கு முன்னுரை எழுதிச் சிறப்பித்துள்ளார். இது போன்ற பழைய நூல்களை வைத்திருப்பவர்கள், அமரர் கல்கியின் முன்னுரைகளை மட்டும் 'ஜெராக்ஸ்' பிரதி எடுத்து உடனே அனுப்பினால், அடுத்து வரவிருக்கும் 'கல்கியின் முன்னுரைகள்' தொகுப்புக்குப் பேருதவியாக இருக்கும்.

சுப்ர. பாலன் (தொகுப்பாளர்)
மே/பா. கல்கி வார இதழ்.

**களுடன் நமக்கு ஒப்பந்தம் இல்லாதது தானே காரணம்?**

! ஒப்பந்தம் இல்லாததால்தான் அங்கே போய் ஒளிய முயற்சி செய்கிறார்கள்! சர்வதேச பயங்கரவாதம் என்பது கருதி, ஒப்பந்தமின்றியே சலாமை விசாரணைக் கைதியாய் அனுப்பி வைக்கலாம். உலக நாடுகள், குறிப்பாக அமெரிக்க – வற்புறுத்திச் சொன்னால் இது நடந்துவிடும்.

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84.

**? "நான் பாடியதால்தான் எம்.ஜி.ஆர். முதல்வரானார். தமிழ் சினிமாவின் தற்போதைய காலத்துக்கு ஏற்றவாறு இப்போதும் என்னால் மிகச் சிறப்பாகப் பாட முடியும்; ஆனால் யாரும் எனக்கு வாய்ப்புக் கொடுப்பதில்லை" என்று டி.எம்.எஸ். வேதனைப்படுகிறாரே...?**

! முதல் கருத்து ஆணவத்தின் வெளிப்பாடு; ரொம்ப ரொம்பத் தப்பு! இரண்டாவது கருத்து, ஓய்வு பெறுவதை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் இல்லாததால் ஏற்படும் விரக்தியின் வெளிப்பாடு. கொஞ்சம் போலத் தப்பு.

● கு.ப. இரகுநாதன், சென்னை - 56. *

**? 'பந்த்' அறிவித்து ஊரைக் கலவர பூமியாக மாற்றுவதைவிட, ஒரு நாள் ஊதியத்தை குஜராத் கோயிலில் இறந்தோர் குடும்பங்களுக்குக் கொடுத்து உதவலாம் அல்லவா...?**

! அதைத்தான் மக்களின் வரிப் பணத்திலிருந்து ஆட்சியில் இருப்போர் எடுத்துக் கொடுத்துவிடுகிறார்களே. அதைவிட முக்கியம், அரசியல்வாதிகள், குஜராத் கோயில் சம்பவம் போன்றவை நேரும் சூழலை உருவாக்கி நாட்டைக் கெடுக்காமல் இருப்பதுதான்.

● மைக்கேல் சாமுவேல், மும்பை - 17

**? பாகிஸ்தானின் எல்லை மீறிய தொல்லைகளை நாம் எப்படித்தான் எதிர் கொள்வது...?**

! நமது பாதுகாப்பு கருதி, எல்லை கடந்து பாகிஸ்தான் பகுதியில் தாக்கும் உரிமை நமக்கு இருப்பதாக நிதி அமைச்சர் ஜஸ்வந்த் சிங் அமெரிக்காவில் பேசியிருக்கிறார். ஆனால் இதிலும் (அணு ஆயுதப் போர் உட்பட) பல அபாயங்கள் உள்ளன. பேச்சு வார்த்தை மூலம் சமாதானத்துக்கும் காஷ்மீர், பிரச்னையின் தீர்வுக்கும் வழி வகுப்பதே விவேகம். 'பகை நடுவினில் அன்புருவான நம் பரமன் வாழ்கின்றான்'_ பாரதியார்.

● ஆர். வஸந்தா, திருவனந்தபுரம்.

**? செப்டெம்பர் 26ல் நடந்த பந்தின்போது ஆமதாபாத்தில் கோத்ரா நிகழ்ச்சிக்குப் பிறகு நடந்தது போன்ற கலவரங்கள் கொலைகள் நடக்கவில்லை. இதற்காக முதல்வர் மோடியைப் பாராட்டலாம் அல்லவா..?**

! பாராட்டலாம்; அதே சமயம், 'கோத்ரா சம்பவத்துக்குப் பிறகு அந்த ஊரில் படு பயங்கரமான கொலைகள் ஏன் நடந்தன? எப்படி அனுமதிக்கப்பட்டன' என்ற கேள்வியும் 'இப்போது மட்டும் நடக்காமல் போனது ஏன்' என்ற கேள்வியும் எழுகின்றனவே!



## அன்பான வேண்டுகோள்

சிவானந்த குருகுலத்தில் இருக்கும் சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இந்த வருடம் தீபாவளி திருநாளை மனமகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்களிடம் உதவிக்கரம் நீட்டுகிறது.

பொதுமக்கள் அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும் இக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக்கொள்ளப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாகவோ, அல்லது புத்தாடைகள், பட்டாசு, இனிப்பு, எண்ணெய், சீயக்காய், அரிசி, கோதுமை போன்ற தானிய வகைகளை நன்கொடை கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடைத் தொகையினை காசோலையாகவோ / டிராப்டாகவோ 'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்' என்ற பெயரில் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

**அனுப்ப வேண்டிய முகவரி :**

நிர்வாகி,
'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்'
நெ. 20 கம்பர் தெரு.
கிழக்கு தாம்பரம், சென்னை – 600 059.
Phone: 2391078,2392444

**சென்னையில் நன்கொடை கொடுக்க வேண்டிய முகவரி :**

திரு. ரத்தன் பிரகாஷ் மல்ஹோத்ரா
ஆ/எ. பிரகாஷ் டிரேடிங் கம்பெனி,
நெ.156, தம்பு செட்டி தெரு,
சென்னை – 600 001.
Phone: 5342428, 5342803, 5342587

குருகுலம், காட்டாங்கொளத்தூர். 04114 - 452345 (STD)954114 - 452345, 451815 (Local Call)

**பின்குறிப்பு : காசோலையாகவோ / டிராப்டாகவோ 'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்' என்ற பெயரில் தான் அனுப்ப வேண்டும் என்பதை கேட்டுக் கொள்கிறோம்.**

**E-mail : sivanand@md2.vsnl.net.in**
**Visit our website at:www.sivanandagurukul.org**

ஜெயஸ்ரீ ராஜ்

# சலசல சல்மான்!

''சமூகத்துக்கு விரோதமாக எதையாவது செய்து கொண்டே இருக்க வேண்டுமென்ற உணர்வு இவர்களுக்கு இருந்து கொண்டே இருக்கும்.''

மான் என்றால் புள்ளிகள் இருந்தால்தானே அழகு? அதனால்தான் சல்மானும் உடம்பெல்லாம் புள்ளிகள் குத்திக் கொண்டிருக்கிறார்; அதற்கென்ன... 'கறுப்புதான் அவருக்குப் பிடிச்ச கலரு' என்பதால் அவை கரும் புள்ளிகளாகக் காட்சியளிக்கின்றன.

'சிங்காரா' மானினத்தை வேட்டையாடியபோது முதல் புள்ளி நம் கண்களுக்குப் புலப்பட்டது; சிங்காரி ஐஸ்வர்யாவை வேட்டை நாயாகத் துரத்தியபோது அடுத்த புள்ளி வெளிப்பட்டது; 'சோரி சோரி சுப்கே சுப்கே'யில் அண்டர் வர்ல்டுடன் தேட்டை போட்ட போது, பிரிதொரு புள்ளி தென்பட்டது; பத்திரிகையாளர்களிடமே தன் சேட்டையைக் காண்பித்தபோது மற்றொரு புள்ளி வெளிச்சமிடப்பட்டது; உலக அழகி நடிக்கும் 'செட்'டுகளிலெல்லாம் போய் கலாட்டா செய்து அவரைப் பல படங்களிலிருந்து இயக்குனர்கள் கழட்டி விடச் செய்த போது பற்பல புள்ளிகள் தெரிய வர ஆரம்பித்தன. இப்போது, குடித்துவிட்டு வேகமாகக் காரோட்டி வந்து, பாந்த்ரா ஹில் ரோடில் பேக்கரி கடை வாசலில் தூங்கிக் கொண்டிருந்த சிலரில் ஒருவரைக் கொன்று, மற்றவர்களைக் காயப்படுத்திவிட்டு தலைமறைவானதில், இனி இடமே இல்லை என்று நினைக்குமளவுக்கு உடல் முழுவதும் கரும்புள்ளிகளாக்கிக் கொண்டிருக்கிறாரே சல்மான்?

சம்பவம் நடந்த சனிக்கிழமைக்கு ஒரு நாள் முன்புதான், வெள்ளியன்று பிரபல ஆங்கில தினசரி ஒன்றில், சல்மானைப் பற்றி ஐஸ்வர்யா அளித்திருந்த 'மனம் திறந்த' பேட்டி வெளியாகியிருந்தது.

பேட்டியில் ஐஸ்வர்யா கூறியிருந்தது இதுதான். ''என் பெற்றோரை எதிர்த்துக் கொண்டு நான் சல்மானைக் காதலித்தது உண்மை; ஆனால் அவரது மோசமான நடவடிக்கைகளால் என்னை அவர் இழந்துவிட்டார். என் இணை நடிகர்கள் அபிஷேக், ஷாருக் போன்றவர்களுடனெல்லாம் சம்பந்தப்படுத்தி ஆபாசமாகப் பேசுவார்; கடைசியில் அவர் எனக்கு துரோகம் செய்ததை அவர் வாயாலேயே ஒப்புக் கொண்டபின் நான் அவருடன் ஒரேயடியாக முறித்துக்கொண்டு விட்டேன்.

''ஆனாலும் விடாமல் ஃபோன் செய்து தொல்லைப் படுத்துவார்; நேரில் வந்து மிரட்டுவார்; அடித்துத் துன்புறுத்துவார். எத்தனையோ முறை நான் வெளியே தெரியாத ரணங்களுடன் ஷூட்டிங்கிற்குச் சென்றிருக்கிறேன். அண்மையில் நைகாவில் நடந்த மிர்ஜாவின் ஷூட்டிங்கில் வந்து என்னை 'வா' என்றார். நான் மறுத்ததும் தன்னைத்தானே அடித்துக் கொள்ள ஆரம்பித்துவிட்டார். பயந்து போன மிர்ஜா ஷூட்டிங்கை கான்சல் செய்துவிட்டார். இப்போது எனக்கு பதிலாக அதில் ராணி முகர்ஜி நடிக்கிறார்.''

இந்தப் பேட்டி பெரும் பரபரப்பை ஏற்படுத்தியதில் (அரசல்புரசலாக தெரிந்ததுதானென்றாலும்) வியப்பில்லை. மறுநாள் காலையே, டி.வி சேனல்களில், சல்மான் மாயமாய் மறைந்த பரபரப்பு!

அதிகாலை இரண்டரை மணிக்கு, சல்மானின் டயோடா லாண்ட் க்ருஸர் புண்ணியத்தில், நூருல்லா

ஷரீஃப், நூறென்ன... அதில் பாதி வயதைக்கூட எட்டாமலே, 38ல் முக்தி அடைந்தார். பலருக்குப் படுகாயம். இவர்கள் மறுபடியும் பேக்கரி வேலைக்குத் திரும்ப முடியுமா என்பதே கேள்விக் குறி.

காரோட்டிய சல்மானும், பின்சீட்டில் இருந்த இசைக் கலைஞர் கமாய் கானும் உடனே ஓட்டமெடுத்தனர். சிறிது நேரத்துக்குப் பின் அங்கே வந்த சல்மானின் சகோதரன் செபிஹேய்ல் கான், காரிலிருந்து 'மியூசிக் சிஸ்டத்தை' எடுத்துக் கொண்டு ஓடிவிட்டார்.

சல்மானின் மெய்க்காப்பாளர்தான், பாந்த்ரா போலீசில் ரிப்போர்ட் கொடுத்திருக்கிறார். எட்டு மணி நேரத்துக்குப் பின், அல்மேடா பார்க்கில், ஒரு நண்பர் இல்லத்தில் சல்மான் கைது செய்யப்பட்டு, ரூ.950/- ஜாமீனில் விடுவிக்கவும்பட்டார். பின்னிருக்கையிலிருந்த கமால்கானை இன்னும் பிடிக்க முடியவில்லை. பிடிபட்டாலும், சல்மானின் அண்ணியின் தங்கையை மணக்க விருப்பவர், என்னத்தைப் பாதகமாகச் சொல்லி விடப் போகிறார்?

சல்மான் மீதான வழக்கு, IPC 304 A பிரிவைச் சார்ந்தது. டிரைவருக்கு யாரையும் திட்டமிட்டுக் கொல்லும் எண்ணமில்லை; தண்டனையாக அதிக பட்சம் இரண்டிலிருந்து மூன்று வருடம் வரை கம்பி எண்ணச் சொல்லலாம். டிரைவிங் லைசென்ஸ் வாங்காமலேயே கார் ஓட்டி, கொலை செய்திருப்பதால், தண்டனை அதிகமாகும் என்கிறார்கள்.

அடிக்கடி குற்றம் செய்வதால் சல்மான் பற்றி மனோதத்துவ நிபுணர்களின் ஆலோசனையைக் கேட்க வேண்டியதாகியிருக்கின்றது.

''சிலரை 'சோஷியோ - பத்' என்போம். சமூகத்துக்கு விரோதமாக எதையாவது செய்து கொண்டே இருக்க வேண்டுமென்ற உணர்வு இவர்களுக்கு இருந்து கொண்டே இருக்கும்; சிறு வயதில் கிடைக்கும் பணமும் புகழும், இந்த எண்ணங்களுக்கு ரூபம் போட்டு, திமிரை வளர்க்கும்; வீட்டில் கண்டிப்பு இல்லாமல் இருந்தால், இவர்கள் 'இம்'மென்றால் வெடித்து விடும் தீப்பிழம்பாகி விடுவார்கள் - 'இம்பல்ஸ் கண்ட்ரோல் டிஸ்ஸாடர்' என்று இதைச் சொல்வோம்; இவையனைத்துமே சல்மானுக்குப் பொருந்தும்'' என்கிறார்கள்.



• ஐஸ்வர்யா



• சல்மான்கான்

முப்பத்தேழு வயதான சல்மான், இருபத்தேழு வயதிலேயே 'மைனே ப்யார் கியா'வைத் தொடர்ந்து புகழேணி உச்சிக்குச் சென்றவர். சுபாஷ் காய் போன்ற பாலிவுட் பெருந்தலைகளுடனேயே வம்பு வலித்தவர். ரிஷி கபூரின் பிள்ளையைச் சண்டைக்கு இழுத்து அடித்தவர். உலக அழகியே கிட்டியும், அவர் கை நழுவிய நிலையில் வரிசையாக அரைடஜன் ஃபிளாப்புகளைத் தந்தவர். என்னவோ, மாரி கோல்ட் எனும் ஹாலிவுட் படத்தில் நடிக்கப் போவதாக வதந்தி... பேசாமல் அங்கே 'பாக்' பண்ணிவிட்டால் இங்கே வம்பு தும்பாவது குறையும்!

# தீபாவளி, நவராத்திரி தள்ளுபடி!

## வருடத்திற்கு மூன்று தள்ளுபடி விற்பனை!

நடமாடும் நந்தவனங்கள் வந்து போகும் சென்னையின் அடையாரிலுள்ள Gokul Arcadeக்குள் நுழைந்தோம். நம்மை வியக்கும் அளவுக்கு பலவித Designகளுடன் கடையின் முகப்பில் புடவை தொங்க வைத்திருந்த காட்சியைப் பார்த்தோம். **'சாந்திமணி சாரீஸ்'** என்று அழகான நீல கலரில் Board நம்மை அழைத்தது. அந்த ஷோரூமுக்குள் நம்மை வரவேற்ற **திருமதி. சாந்திமணி.**

புடவை வியாபாரத்தில் 10 வருடங்களாக அனுபவம் தனக்கு இருப்பதால்தான் வெற்றிகரமாக கடை ஆரம்பித்து ஐந்தாவது ஆண்டை நோக்கி அடி எடுத்து வைக்கிறோம். இப்போதெல்லாம் எல்லா மாதத்திலும் மக்கள் கூட்டம் புடவை கடைகளில் அலை மோதுகிறது. வருடத்திற்கு மூன்று (அ) நான்கு முறை தள்ளுபடி விற்பனை செய்கிறோம். வருடாந்திர கணக்கு தள்ளுபடி, ஆடி மாத, நவராத்திரி மற்றும் தீபாவளி போன்ற நேரங்களில் தள்ளுபடி விற்பனை நடைபெறும். பண்டிகை கால நாட்களில் விசேஷ தினம் வரும் மாதங்களில் மக்கள் கைகளில் காசு புரளும் மாதங்களாகும். வாடிக்கையாளர்களுடைய ஆதரவு இருப்பதால்தான் எங்களால் தள்ளுபடி விற்பனை செய்ய முடிகிறது. சென்னையில் வேறு எந்த புடவை கடை களிலும் எங்களை போன்று வருடத்துக்கு மூன்று (அ) நான்கு முறை தள்ளுபடி விற்பனை செய்வதில்லை.

வளர்ந்து வரும் விஞ்ஞான காலத்தில் எல்லாம் மாறி இருந்தாலும் என்றும் நம்மாலும் யாராலும் மாற்ற முடியாத நம்முடைய பண்பாட்டின் சின்னமானது பட்டு புடவை எந்தக் காலத்திலும் எல்லோரும் ஏற்றுக்கொண்டது ஒன்று உண்டு என்றால் அது பட்டு புடவைதான். இன்றைக்கு எல்லா மத திருமண வைபவங்களின் முக்கிய பொருட்களில் பட்டுப் புடவை ஒன்றாகிவிட்டது.

இந்த வருட நவராத்திரி மற்றும் தீபாவளிக்கு புதிய வரவான புடவை Silk Cotton. இதில் அலை அலையாய் ரகங்களும், நிறங்களும் பார்த்தாலே பரவசத்தில் மனதை கிள்ளும் டிசைன்களில் கிடைக்கும். இது பட்டு புடவைக்கு இணையான தோற்றம் தரும். ஆம்! ஆனால் விலையோ மிக குறைவு. கட்டம், புட்டா, வேல்தாரி, கோர்வை, பாய்மடி என்று எல்லாவித Designகளிலும், பேத்தி முதல் பாட்டி வரை உள்ளவர்களை கவர்ந்திழுக்கும் வண்ணம் இருக்கும். இதில் சல்வார்செட், பாவாடை முதலியவைகளிலும் கிடைக்கும்.



**எங்களிடம் அனைத்து**
**மாநில காட்டன் புடவைகள்,**
**ஒரிசா காட்டன், மைசூர் சில்க்,**
**ஒரிஜினல் கத்வால், காஞ்சி காட்டன்,**
**பாலிகாட், ஸ்பன் காட்டன்,**
**மெர்ஸ்ரைஸ்டு, ஒரிசா சில்க்,**
**மங்களகிரி, பட்டுப் புடவைகள்,**

**பாவஞ்சி பாவாடைகள், வேஷ்டிகள், டவல், சுடிதார் மெடிரியல் போன்றவை எங்களிடம் தரமான நியாயமான விலையில் கிடைக்கும்.**

**பாவஞ்சி பாவாடைகள், Chudidar material, Blouses, 6,9,10,10½ கஜம் புடவைகளும் உள்ளன.**

எங்கள் கடையில் உள்ள புடவைகளில் இருக்கும் Designகள் எங்கள் சொந்தத் தறியில் செய்து தருகிறோம். வாடிக்கையாளர்கள் விருப்பத்திற் கேற்ப பல வகையான டிசைன் களிலும் புடவை செய்து தருகிறோம். இன்றைக்கு பெண்கள் அதிகமாக வேலைக்குச் செல்வ தால் உடுத்தும் Cotton சேலைக்கு கஞ்சி போட்டு துவைக்க போதிய நேரம் அவர்களிடம் இல்லை. நாங்கள் Cotton சேலைக்கு கஞ்சி போட்டு புதிய பொலிவுடன் புடவையை தருகிறோம். Embrodiry வேலைப்பாடும், Blouse தைத்து தருகிறோம்.

ஊக்கமும்தான் முக்கிய காரணம்.

நாங்கள் இதோடு மட்டு மல்லாமல் பள்ளிகளுக்கான Uniform, Hospital Uniform தனியார் நிறுவனத்திற்கான Uniform போன்ற வற்றை சப்ளை செய்கிறோம்.

எங்களிடம் ஒருமுறை வாங்க வரும் வாடிக்கையாளர்கள் மறுபடியும் வேறு கடைக்குச் சென்று வாங்குவதில்லை



எனது வாடிக்கையாளர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் இந்தியாவில் விளையாட்டு துறையில் பிரபலமானவர்கள், பிரபல முன்னணி கதாநாயகிகள், கல்விதுறை உயர் அதிகாரிகள், நீதிபதிகள், பிரபல பரத நாட்டிய கலைஞர்கள், மேடை கச்சேரி செய்பவர்கள் போன்றவர்கள், சொல்லப் போனால் அடையாறில் குறிப் பிடத்தக்க பல துறைகளில் சேர்ந்த பிரபல மானவர்கள் எங்கள் வாடிக்கையாளர்கள் என்று சொன்னால் மிகையாகாது. சாந்திமணி சாரீஸ் அடையாறில் கைத்தறி உலகம் என்று போற்றப்படுவதற்கு எங்கள் வாடிக்கையாளறர்கள் ஆதரவும், என்று உறுதியுடன் சொல்கிறார் சாந்திமணி. ஏனென்றால் எங்களின் கடையில் தரமும் நியாயமான விலையும், அது தவிர வீட்டு சூழ்நிலையில் இருக்கும் அனுபவம் போன்றது. ஆம் நாம் வெளியில் வரும்போது வீட்டை விட்டு வருவது போன்ற எண்ணம் ஏற்படுகிறது.

---

**❖ ரூ.100/- மாதாந்திர புடவை சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பயனடைவீர்**

**❖ வாடிக்கையாளரின் விருப்பத்திற்கேற்ப ஆர்டரின் பேரில் புடவைகள் நெய்து தரப்படும்.**



## திருவருள் பொழியும்

# திருவண்ணாமலையில் பௌர்ணமி தினத்தில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

பேரன்புடையீர்! நமஸ்காரம்.

பஞ்சபூதத் தலங்களில், அக்னி தத்துவமாக விளங்கும் திருவண்ணாமலை, நினைக்க முக்தி தரும் புண்ணிய க்ஷேத்திரம். கிரியே சிவமாகவும், சிவமே கிரியாகவும் விளங்குவதால் இங்கு கிரிவலம் வருவது சிவபெருமான் உறையும் கைலாயத்தையே வலம் வருவதற்கு ஒப்பாகும். ஏராளமான சித்தர்கள், ஞானிகள், முனிவர்கள், ரிஷிகள் வாழ்ந்து, தவமியற்றி, வரம் பெற்று, மோட்சம் அடைந்த புனித புண்ணிய க்ஷேத்திரம் திருவண்ணாமலை. இங்கு பௌர்ணமி காலத்தில் கிரிவலம் வரும் பக்தர்களுக்கும், சாதுக்கள், ஊனமுற்றோர், சன்யாசிகள், ஏழை எளிய மக்கள், பக்தர்கள் ஆகியோருக்கு அன்னம் அளிப்பது மகத்தான புண்ணியத்தை நமக்குத் தருகிறது.

தடுத்தாட் கொள்வது, கிரக நிலைகளை மாற்றுவது, ஊழ்வினைகளை நீக்குவது, முக்தி தருவது, ஆயுளை நீடிப்பது, நோய்களைக் குணப்படுத்துவது போன்ற சிவ லீலைகள் நிகழ்ந்த இவ்விடத்தில், அன்னதானத்தின் மூலம் புண்ணியம் பெறுவதும், மோக்ஷம் அடைய முயல்வதும் உயர்ந்த லட்சியமாகும்.

**★ மனச்சாந்தி பெற ★ திருமணம் கைகூட ★ நோய்நொடிகள் தீர ★ எண்ணங்கள் வெற்றி பெற ★ சந்தான பாக்யம் பெற ★ பிரச்சனைகள் எளிதில் தீர ★ கணவன் மனைவி ஒற்றுமை ஏற்பட ★ தொழிலில் மேன்மை பெற ★ பிரிந்தவர்கள் ஒன்று சேர ★ கடன் தொல்லைகளிலிருந்து விடுபட ★ நினைத்த காரியம் நிறைவேற ★ உங்களுக்காக நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கிறோம்.**

★ அன்னதானம் செய்ய சிறிய தொகையும் ஏற்றுக் கொள்ளப்படும். ★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும். ★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும். ★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 மற்றும் ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். அன்னதானப் பணிக்காக நன்கொடை வழங்கும் அன்பர்கள் நேரில் வந்து கலந்து கொள்ளலாம். கிரிப்பிரதட்சிணம் செய்து கோரிய பலனையும் பெற்றுக் கொள்ளலாம்.

நன்கொடைகளை **SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


**ஸ்ரீ அன்னலக்ஷ்மி அன்னதான ஸேவா டிரஸ்ட்**

**SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST**

M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA

☎: 4900303, 4900603 Fax: (044)4916316 E-mail: gopuradarisanam@yahoo.com

காஷ்மீர் தேர்தல்

வன்முறைத் தாக்குதல்...

எல்லை கடந்து வரும் பயங்கரவாதம்

ஜனநாயகத்தின் வெற்றி



# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## அட, ஆர்.எஸ்.எஸ்!

பெட்ரோலிய துறையைத் தனியார்மயமாக்குவதில் உறுதியாய் இருக்கிறார் பிரதமர். இந்த முடிவுக்குத் துணைப் பிரதமரின் ஆதரவும் இருப்பதாகத் தெரிகிறது. மத்திய அமைச்சரவையில் சில முக்கிய அமைச்சர்கள் எதிர்த்ததையும் சரி, அமைச்சரவையைப் பெருமளவுக்கு 'ரிமோட் கன்ட்ரோல்' செய்துவரும் ஆர்.எஸ்.எஸ். அமைப்பு கடுமையாகக் கண்டனம் செய்ததையும் சரி... பிரதமர் பொருட்படுத்துவதாக இல்லை. எதிர்ப்புக் குரல் கேட்டால் அடங்கிப் போகும் பழக்கம் உள்ளவர்; குறிப்பாக ஆர்.எஸ்.எஸ்ஸின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொள்ள விரும்பாதவர், இந்த விஷயத்தில் மட்டும் விட்டுக் கொடுக்காது பிடிவாதமாய் இருப்பது வருத்தத்துக்குரிய விந்தை.

அரசின் திட்டம் என்ன..? பெட்ரோலிய துறை தனியார்மயமாகிவிட்டால் டீசல், மண்ணெண்ணெய் போன்றவற்றுக்கான அரசு மானியச் செலவு இல்லாது போய்விடும். இதன் மூலம் மிச்சமாகக் கூடிய தொகையுடன் தனியார்மயமாதல் மூலம் கிட்டும் வருமானமும் பொருளாதாரம் ஸ்திரப்பட உதவும் என்று அரசு எதிர்பார்க்கிறது.



2002 அக்டோபர் 13
சித்ரபானு புரட்டாசி 27
மலர் : 61
இதழ் : 11




ஆனால், இன்று நாட்டின் நிதிநிலைமை மிக மோசமாய் இருப்பதால், தனியார்மயமாதல் மூலம் கிடைக்கும் வருமானம் மீண்டும் முதலீடாகாமல் பட்ஜெட் பற்றாக்குறையை ஈடு செய்யவே பயனாகும்.

மானியங்கள் முற்றிலும் ஒழிக்கப்பட்டால், வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள லட்சோப லட்சம் மக்கள் தாங்க முடியாத துயரத்துக்கு ஆளாவார்கள்.

இவை மத்திய அரசுக்குத் தெரியாத விஷயங்கள் அல்ல; ஆனால் உலக வங்கியிடம் ஏராளமாகக் கடன் வாங்கி, உலக வர்த்தக ஒப்பந்தத்திலும் கையெழுத்துப் போட்டுவிட்டதால், வேறு வழியின்றி இவ்வமைப்புகளின் ஆணைக்குக் கீழ்ப்படிய வேண்டியிருக்கிறது. இவ்வாணைகள் இந்திய பொருளாதாரத்தின் நெளிவு சுளிவுகளைக் கணக்கில் கொண்டு பிறப்பிக்கப்பட்டவை அல்ல; உலகளாவிய சந்தைப் பொருளாதாரத்தின் கோட்பாடுகளுக்கு ஏற்ப அமைக்கப்படுகிறவை. தனிமனிதர்களை நுகர்வோராகவே பார்த்தும் எடைபோட்டும் அணுகும் மேலைநாட்டுப் பொருளாதாரத்தைச் சார்ந்தவை.

இந்த அணுகுமுறையினால் நம் நாட்டு ஏழைகளுக்கு எந்தவித நன்மையும் விளையாது. குறிப்பாக கிராமப் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்படும். விவசாயமும், விவசாயம் சார்ந்த தொழில்களும் நலிவுறும்.

இது போதாதென்று, தமிழக நிதியமைச்சர் பொன்னையன், விவசாயத் துறையில் அயல்நாட்டு முதலீடு புக வேண்டும்; பெருக வேண்டும் என்று வேறு கருத்து தெரிவித்துள்ளார். பெரிய பெரிய தனியார் விவசாய நிறுவனங்களோ, உணவு உற்பத்தி நிறுவனங்களோ, இந்திய விவசாயத் துறைக்குள் புகுந்து டாலர்களை முதலீடு செய்தால், நமது சிறு விவசாயிகளின் கதி என்னவாகும் என்று நினைத்துப் பார்க்க வேண்டும்.

நூற்றுக்கணக்கான ஏக்கர்களை வளைத்துப் போடுகிற அயல்நாட்டுத் தனியார் நிறுவனத்திடம் அவர்கள் தங்கள் சிறு நிலத்தை விற்கிற கட்டாயம் ஏற்படும். மேலைநாட்டு முதலீடில் விவசாயம் இயந்திரமயமாகி, சிறு விவசாயிகளுக்கு அறுவடை, நடவு காலத்தில் கூட வேலை கிடைக்காது போய்விடும். கிராமப் பொருளாதாரமும் தன்னிறைவும் அடியோடு குலைந்து போய்விடும். சிறு விவசாயிகள் கொஞ்ச நஞ்சம் சாகுபடி செய்தாலும் அதற்கு நல்ல விலை கிடைக்காமல், பெரிய 'கார்பரேட்' விவசாயிகள் வைப்பதே விலை என்றாகிவிடும்.

பருவமழை பொய்ப்பதாலும் தண்ணீர்ப் பிரச்னையினாலும் கிராமங்களை விட்டு வெளியேறி,




பலர் நகரங்களில் குடியேறிவிட்டனர். இதனால் நகரங்களில் நெரிசல் அதிகமாகி, சேரிகள் உருவாகி மக்களின் வாழ்க்கைத் தரம் குறைந்து கொண்டு வருகிறது. விவசாயத்தில் அந்நிய முதலீடு அனுமதிக்கப்பட்டால், இந்த வீழ்ச்சியின் வேகம் மேலும் அதிகரிக்கும்!

ஆர்.எஸ்.எஸ்ஸின் இதர பல கொள்கைகள் கண்மூடித்தனமானவையாகவும் காந்திய சிந்தனைக்கு விரோதமானவையாகவும்தான் இருக்கின்றன. மத ஒற்றுமை, சமத்துவம், சகோதரத்துவம் போன்றவற்றை அவ்வமைப்பினர் மதிப்பதாகக் கூற முடியாது. ஆனால், கிராமப் பொருளாதாரத்தைப் பொருத்த மட்டில் அவர்களது கொள்கை காந்திய சிந்தனையைத் தழுவியிருக்கிறது. கிராமங்களை மையப்படுத்தி, அவற்றுக்குத் தன்னிறைவு தேடித்தரும் பொருளாதார அணுகுமுறையையே வலியுறுத்துகிறார்கள். ஐ.எம்.எஃபின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து 'பொருளாதார புரட்சிகளை' நிகழ்த்த முயன்ற இந்தோனேஷியா, தாய்லாந்து, கொரியா போன்ற நாடுகள் இன்று திணறி, திண்டாடுவதைச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

இதையெல்லாம் எடைபோடாமல் கண்மூடித்தனமாக அயல்நாட்டு முதலீட்டை ஆதரிக்கும் அமைச்சர்களை, அமைச்சரவையிலிருந்தே நீக்கும்படி கூறுகிறது ஆர்.எஸ்.எஸ்! அதன் அதிகார வரம்புக்கு உட்படாத விஷயம் இது. பிரதமர் உடனே இதற்குக் கட்டுப்படப் போவதும் இல்லை.

ஆனால், கிராமத்தை மையப்படுத்தும் காந்திய பொருளாதாரம் குறித்து, மத்திய அரசும் வாஜ்பாயும் யோசிக்கத்தான் வேண்டும். அதிநவீன தொழில்நுட்பம் சார்ந்த சில தொழில்களில் அந்நிய முதலீடு அனுமதிப்பது அறிவுடைமை. அதே சமயம் நமது விவசாயக் குடிமக்களின் வேலை வாய்ப்பும் வாழ்க்கை முறையும் பாதிக்கப்பட அனுமதிக்கலாகாது. ஆண்டு முழுவதும் அவர்கள் வேலை வாய்ப்பு பெறுகிற வகையில், கிராமங்களைச் சுற்றி விவசாயம் சார்ந்த தொழில்கள் பெருக வழிவகை செய்ய வேண்டும்.

இந்த முயற்சிகளில், ஒரு மின்திட்டம் நிறுவுவதைப் போலவோ, அணைக்கட்டு கட்டுவது போலவோ பிரும்மாண்டம் இருக்காது; மக்களை பிரமிக்க வைக்காது. ஆனால், காலப் போக்கில் கிராமங்களில் தன்னிறைவு ஏற்படுத்தி, அடிமட்ட மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும். அதன் மூலம் நாட்டின் பொருளாதாரத்தையும் மேம்படுத்தும்.

இதுவரை எந்த அரசும் செய்ய முன்வராத இந்த நல்ல காரியத்தை, இன்றைய வாஜ்பாய் அரசு முதன்முதலில் நிகழ்த்தி வழிகாட்டலாமே! ○

## சினிபூ

மதுரை இஸ்மாயில் புரத்துக்காரன் நான். படிப்பும் பெரிசா ஒண்ணு மில்லை. நல்லா பாட்டுப் படிப்பேன். தமாஷா பேசிக் காட்டுவேன். தத்தக்கா பித்தக்கானு ஆடினா, அம் புட்டு பேரும் சிரிப்பாங்க. நமக்குத் தெரிஞ்சது அம் புட்டுதான்.

எனக்கு வாய்ப்பு கொடுத்து நல்லபடியா ஆளாக்கினாரு ராஜ்கிரண் ஸாரு. 'எப்படியோ ஊரறிஞ்ச நடிகனாயிட் டம்டா'னு ஒரே தெனா வெட்டு. ஆனா அந்த நினைப்புக்கு வேட்டு வைச் சது ஒரு சம்பவம்.

'தாய்க்குலமே, தாய்க் குலமே' படத்துக்காக, நேபாளம் போயிருந்தேன். படப்பிடிப்பு முடிஞ்சு திரும்பி வரும்போது, டெல்லி விமான நிலையத் திலே என்னை மடக்கிட் டாங்க. அப்பதான், வேலூர் ஜெயில்லேயிருந்து விடு தலைப் புலிகள் தப்பி ஓடி யிருந்தாங்க. உடனே மொட் டைத் தலைக்கும், முழங் காலுக்கும் கெட்டியா ஒரு முடிச்சு போட்டு, தீவிர வாதியா இருக்குமோன்னு சந்தேகப்பட ஆரம்பிச் சுட்டாங்க.

எனக்கு ஹிந்தி புரியலை. அவங்களுக்கு நான் பேசற இங்லிஷ் புரியலை.

"ஐயா, நமக்கு வீட்டுல சமையலுக்குக் கரைக்கிற புளிதான் தெரியும். வேறெது வும் தெரியாது"னு துண் டைப் போட்டு தாண்டி னேன். இன்னும் பலமா சந்தேகப்பட ஆரம்பிச் சுட்டாங்க.



* வடிவேலு

அந்த சமயம் மண்டை யிலே சின்னதா ஜீரோ வாட்ஸ் பல்பு எரிஞ்சது. 'காதலன்' படம் இந்தியிலே 'ஹம்ஸே ஹை முகாபுலா' என்ற பெயரில் வெளியாகி, சூப்பர் ஹிட் ஆகியிருந்த சமயம் அது. உடனே பக்கத்துலே இருந்த புக் ஸ்டாலுக்கு ஓடிப் போய், சினிமா புஸ்தகமெல்லாம் எடுத்துக்காட்டி "நல்லா பார்த்துக்க சாமி. இது நான்தேங்"னு காட்டினேன். அப்ப கொஞ்சம் நம்புனா மாதிரி தோணுச்சு.

மண்டையிலே இன் னொரு அறுபது வாட்ஸ் பல்பு எரிஞ்சது. 'டேக் இட் ஈஸி பாலிஸி..' பாட்டைப் பாடி, டான்ஸும் ஆடி டண்டணக்கா டண்டணக் கானு ரகளை பண் ணிட்டேன்.

"நைஸ் ஷோ! ஸாரி ஸார்"னு சொல்லி சிரிச்சிக்கிட்டே விட்டுட் டாங்க.

# அறுபது வாட்ஸ் பல்பு!

சினிமினி

லதா சேகர்

# ஃபீஸ் வாங்க மறுக்கும் மருத்துவர்!

"ஒவ்வொரு மாதமும் சுமார் ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள மருந்து மாத்திரைகள் வீணாகப் போகின்றன. எந்த மருந்துக்கடையிலும் ஆறு மாதக் கெடு மிஞ்சியிருக்கிற அல்லது எக்ஸ்பையரி டேட் நெருங்கிவிட்ட மருந்தை வாங்குவதில்லை. அதனால் பழைய ஸ்டாக்குகள் சாக்கடையில், சமுத்திரத்தில் கரைக்கப்படுகின்றன. உலகம் பூராவுமே இதே நிலைதான்.

"லட்சக்கணக்கான ஏழை மக்களுக்கு மருந்து வாங்கக் கையில் காசில்லை. டாக்டர்கள் சாம்பிளுக்கென வரும் மருந்து மாத்திரைகளைக் கொடுத்து உதவலாம். ஆனால் நேரமின்மை, சோம்பல், அலட்சியம் காரணமாக, பல டாக்டர்கள் இதைச் செய்ய முன்வருவதில்லை. இந்த மருந்து விரயத்தைத் தடுப்பதற்கு ஒரு குழு கண்டிப்பாக அமைக்க வேண்டும். சுகாதார அமைச்சர், மருந்து கம்பெனி நிர்வாகி, டிரக் கண்ட்ரோலர், பத்திரிகை ஆசிரியர், சாரிடபிள் டிரஸ்ட்... என குழு அமைத்து தீர்வு காணத்தான் வேண்டும்" என்கிறார் பெங்களூர் மல்லேஸ்வரத்தில் 'ஸ்ரீரமணா ஃப்ரீ க்ளினிக் ஃபார் புவர்' என்ற மருத்துவமனை நடத்தி வரும் டாக்டர் ராஜாராம்.

பெங்களூருக்கு கச்சேரி செய்யவரும் பல வித்வான்களுக்கு திடீரென்று உடல் நலக் குறைவு ஏற்பட்டால் ராஜாராமை நாடுகிறார்கள். மாலி, வீணை துரைசாமி ஐயங்கார், மகாராஜபுரம், பித்துக்குளி முருகதாஸ், ஆண்டவன் ஸ்வாமிகள்... ஜெயேந்திரர் என இவரிடம் சிகிச்சை பெற்றவர்களின் பட்டியல் கொஞ்சம் நீளம்.

வீட்டு வாயிலில் எப்போதுமே ஏழை எளியோரின் க்யூ. இலவச மருந்து மாத்திரைகளும் இவரே தந்துவிடுகிறார். அதற்காக மருந்து கம்பெனிகள் மற்றும் ஃபார்மஸிகளுக்கு ஓடுகிறார். தம் வீட்டிற்கு வரும் ஏழைகளுக்கு மட்டுமில்லாமல் முதியோர் இல்லம், அனாதை இல்லங்கள், ஏழை மாணவர்களின் விடுதிகள் என அங்கும் மருந்துகளை அனுப்புகிறார். நீரிழிவு நோயுற்ற குழந்தைகளுக்கு, சிறப்பு மருத்துவம் பார்க்கிறார். இன்சுலின், சிரிஞ்சுகள், ப்ளட் டெஸ்ட் என பாதிப்புற்ற குழந்தைகளுக்கு இலவசமாகச் செய்கிறார். இதற்காக ரோட்டரி விருதும் கிடைத்திருக்கிறது.

ஜீவனபீமாநகரிலிருக்கும் சுமார் இருநூறு ஊனமுற்ற குழந்தைகளுக்கு வாரமிருமுறை போய் வைத்தியம் பார்க்கிறார். இதற்காக ஒத்துழைப்பும் ஆதரவும் கோரி பல கம்பெனிகளையும் நாடுகிறார் ராஜாராம். எப்போதுமே எல்லாருமே பாஸிட்டிவ் பதில் தருவதில்லை என்பது கசப்பான உண்மை!

ஆன்மிகம், இலக்கியம், சமூக சேவை, மனிதாபிமானம் என பன்முகங்கள் டாக்டர் ராஜாராமிற்கு. ஒவ்வொரு ஞாயிறும் இவருடைய வீட்டில் குடும்பக் கச்சேரி நடக்கிறது. இவருடைய மகள் ஹரிக்ருபா வாய்ப்பாட்டு, தாய் வீணை, டாக்டர் மிருதங்கம் என இன்னிசைக் கச்சேரி நடக்கிறது.

இசையும் ஒரு இலவச மருந்துதானே!






# அல்லயன்ஸ்



# நூற்றாண்டு விழா

## நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்

18.10.2002 **நாரத கான சபா**, 314, T T K சாலை, சென்னை - 18

**மாலை 6.00 மணி**

### பங்கேற்பவர்கள்

**சோ, கவிஞர் வாலி, எம். கோபாலகிருஷ்ணன், திலகவதி IPS, சிவகுமார் (நடிகர்), Dr. U. ஸ்ரீநிவாஸராகவன், லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி**

### நூற்றாண்டு வெளியீடுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூஜ்யஸ்ரீ மஹா ஸ்வாமிகள் வரலாறு - சம்பமூர்த்தி ஸாஸ்திரிகள், பி.என். பரசுராமன் | | | ரூ. 500 /- |
| 2. | நம்மவர் செய்த விந்தைகள் | - 100 | என். ஸ்ரீநிவாஸன் | ரூ. 100 /- |
| 3. | அவர்கள் செய்த விந்தைகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 4. | உலக மகா கொடுங்கோலர்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 5. | உலகப் புகழ் பெற்ற சொற்பொழிவுகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 6. | விந்தை உயிரினங்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 7. | அரண்மனை ரகஸியங்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 8. | உலகப் புகழ் பெற்ற கட்டடங்கள் | - 100 | " | ரூ. 100 /- |
| 9. | நம்ப முடியாத உண்மைகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 10. | வியப்பூட்டும் உண்மைகள் | - 100 | " | ரூ. 100 /- |
| 11. | தாவர உலகிலே ! | - 100 | " | ரூ. 100 /- |
| 12. | விந்தைத் தாவரங்களும் மூலிகைத் தாவரங்களும் | - 100 | " | ரூ. 100 /- |
| 13. | யார் என்ன சொன்னார்கள் ? | - 100 | " | ரூ. 100 /- |
| 14. | நீருலகிலே ! | - 100 | " | ரூ. 100 /- |
| 15. | பாலூட்டிகள் வரிசையிலே ! | - 100 | " | ரூ. 100 /- |
| 16. | தமிழ் வளர்த்த பெருமக்கள் (இவை 100 தலைப்புகள் வரை வெளிவர உள்ளது.) | - 100 | " | ரூ. 100 /- |
| 17. | கு.ப.ரா. எழுத்துக்கள் (எட்டு தொகுதிகள்) (அல்லயன்ஸ் கு.ப.ரா. நூற்றாண்டு வெளியீடு) | | கு.ப.ரா. | ரூ. 700 /- |

### எங்களை வளர்த்தவர்களையும், வளர்த்து வளர்ந்தவர்களையும் பாராட்டுதல்

1. ராஜாஜி, 2. சோ, 3. எம். ராதாகிருஷ்ணபிள்ளை, 4. கி.வா.ஜ., 5. த.நா. குமாரசாமி, 6. கா.ஸ்ரீ.ஸ்ரீ., 7. எஸ்.வி.வி., 8. பி.ஸ்ரீ., 9. த.நா. சேனாபதி, 10. கு.ப.ரா., 11. தேவன், 12. என். ஸ்ரீநிவாஸன், 13. பி.என். பரசுராமன், 14. சிவன், 15. இந்தியன் வங்கி.

**விழா அரங்கில் மாலை 5.00 மணி முதல் அல்லயன்ஸ் புத்தகங்கள் கண்காட்சி**

**சிறப்புத் தள்ளுபடி 20%**

(விழா அரங்கில் மட்டும்தான்)

நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குபவர் : சுதாங்கன்

**அனைவரும் வருக !**

## ரிஷபன்

# ரிக்ஷா நண்பர்

**"வயசானவன்னு இரக்கப்பட்டுத்தான் நீ என்னை அட்டெண்ட் பண்றியா?"**

சித்திரை வீதி வங்கி வாசலில் ரிக்ஷா சத்தம் கேட்டால் இரண்டு அர்த்தம். ஒன்று, இன்று பென்ஷன் தினம். அடுத்தது கிழவர் பாட்டியுடன் ஆஜர்.

கணக்குப் பிசகாத நியதி. பாட்டி வாசலில் காத்திருப்பாள். ரிக்ஷாவில் தான் அமர்ந்திருப்பாள்.

"அவங்களை ஏன் சிரமப் படுத்தணும்." கிழவர் மெலிதாகச் சிரிப்பார்.

"பென்ஷன் பணத்துக்குச் சொந்தக்காரி அவதான். நான் ஜஸ்ட் பேரர்..."

இந்த வயசிலும் பிசகாத ஆங்கிலம். இரண்டாயிரத்து முந்நூறில் இரண்டாயிரம் மட்டும் மாதா மாதம் பெற்றுக் கொள்வார்.

''நூறு ரூபாய்க்கு ஒன் ருபீ காயின் ப்ளீஸ்..."

பாக்கெட் ரெடியாக எடுத்து வைத்திருப்பேன்.

"தேங்க்ஸ்!"

நிதானமாய் எண்ணி, தொகை சரி என்று உணர்ந்ததும் இன்னொரு "தேங்க்ஸ்."

வியட்நாம் வீடு சிவாஜி போல, வேறு வம்பு எதுவுமின்றி ஸ்டைலாய் திரும்பிப் போவார்.

எழுபத்தைந்து வயது. ரிடையரான மறு மாதம் முதல் அதே ரிக்ஷா. ரிக்ஷாக்காரனும் கிழம். இன்னும் ரிடையர் ஆகாத கிழம்.

"பத்து ரூபா அவனுக்கு..."

''உங்க வயசு எழுபத்தைந்தா?"

"இதே ஜாஸ்தி. போதும். ஐயாம் ஹேப்பி. எப்ப வேணா ரெடி'' என்பார் அலட்டாமல்.

பணம் தருவதற்குள் அந்த ஐந்து நிமிட இடைவெளியில் ஒவ்வொரு மாதமும் நிகழ்கிற சம்பாஷணையின் தொகுப்பு. இடைவெளி விட்டு நிகழ்கிற உணர்வின்றி விட்டுப் போன இடத்திலிருந்து தொடரும்.

''என்ன பண்ணுவீங்க. இரண்டாயிரத்துல?"

''மருமகள் கையில ஆயிரம்... அப்புறம் எங்க மெடிசின்ஸ் ஐந்நூறு... பர்த்டே... மேரேஜ் டே.... தீபாவளி, பொங்கல், கார்த்திகை.. இப்படி ஃபங்ஷனுக்கு ஆசிர்வாதம்..."

படபடவென்று பதில் வரும்.

"ஒரு ரூபா சில்லறை."

"வாசல்ல கீரைக்காரி... கட்டு மூணு ரூபாய். தினமும் பாட்டிக்குக் கீரை வேணும்."

கேலியாய்க் கண் சிமிட்டுவார்.

மடிப்புக் கலையாத லாண்டரி டிரஸ். தற்செயலாக ஒரு தரம் கோவில் மணல் வெளியில் பார்க்க, அப்போதும் அதே பளீர் டிரஸ்.

"ரிக்ஷாதான் சகிக்கலை. ஆணி துருத்திண்டு. எப்ப டிரஸ்ஸைக் கிழிக்குமோ. ஆட்டோல வரலாமே..."





என்றேன் ஒரு தரம்.

என்னை நேராகப் பார்த்தார்.

"ஸாரி... ஜென்டில்மேன்... பத்துப் பதினைஞ்சு வருஷமா வரான். பொறுமையா வந்து நிதானமா கொண்டு விடறான். அவனை நிறுத்தற துங்கிறது 'பைனலாத்தான்.' அப்புறம் நோ மோர் பென்ஷன் விசிட்!"

"யூ வில் லிவ் லாங்."

இதற்குத்தான் அந்த பதில். எழுபத்தைந்து என்பது அதிகம் என்று. "எப்ப வேணா ரெடி."

எனக்கும் அவரைப் பிடித்திருந்தது. பிற வாடிக்கையாளர்களை மீறி அவர் வரும் தினம் சற்று முன்னுரிமை தருவேன். ஒரு ரூபாய் நாணயங்கள் நூறு எடுத்து வைப்பேன். அவர் திருப்தியுற்று நகரும் வரை லட்ச ரூபாய் டிபாசிட்காரன் கூட எனக்குப் பொருட்டில்லை. "என் மருமகளுக்கு பென்ஷன் பணம்னா ஒரு அலட்சியம்" என்று ஒரே ஒரு தரம் வாய் தவறிச் சொல்லிவிட்டதிலிருந்து அவர் மீது கூடுதலாய்க் கரிசனம்.

"நான் உன்னை ரொம்பவும் தொந்திரவு செய்கிறேனா?" என்றார் ஒரு தரம்.

தலை அப்படியே இலவசம்பஞ்சு போல. நீண்ட மூக்கு. உதடுகளில் பிடிவாதம். தங்க ஃபிரேமில் கண்ணாடி.

"நோ...நோ _ ஏன் கேட்கறீங்க?"

"சும்மா ஜஸ்ட் லைக் தட்."

பெஞ்சில் அமர்ந்திருப்பார். எதையும் கவனிக்காத மாதிரி அலட்சியத் தோற்றம். ஆனால் உள்ளூர நிமிடக் கணக்கு. அதிகபட்சம் ஐந்து நிமிடங்கள். பணத்துடன் வெளியேறி விட வேண்டும்.

"ரிக்ஷால உட்கார்றதுக்கு முன்னால அவ கையில கொடுத்துருவேன். அவ இஷ்டப்பட்டாதான் எனக்கே ரிக்ஷா சவாரி."

எத்தனை வயசானால் என்ன. மனைவியைக் கேலி செய்வது ஆண்களின் சுபாவம்.

"பீரோ நிறையப் பட்டுப் புடைவை. எப்ப கட்டிக்கன்னு வைச்சிருக்காளோ... வாரத்துக்கு ஒரு தடவை எடுத்து வாசனை பார்ப்பா. பைத்தியம்... என் டிரஸ்... ரெண்டே செட். பனியன், ஷர்ட், வேஷ்டி... கிழிஞ்சாதான் அடுத்தது."

நான் அவரருகில் வந்து நிற்பது உள்ளூர அவரைச் சந்தோஷப்படுத்தியிருக்க வேண்டும். அதே நிமிஷம் நான் கடமையிலிருந்து தவறி விடவும் கூடாது.

"நீ ஏன் இங்கே நிக்கறே?..."

"இன்னிக்கு எனக்கு வேற டூட்டி... கொஞ்சம் ஃப்ரீ... கேஷ் வந்ததும் உங்களை அனுப்பிட்டு..."



"ஏய்! நீ உருப்படுவியா, ஏல! உன் உடம்பு எப்படியிருக்கு, ஏய்! நீயெல்லாம் மனுஷனா!"

"எதுக்குய்யா என்னைத் திட்டறே?"

"திட்டறதா? கவர்ச்சியா டைட்டில் யோசிச்சிட்டு வரச் சொன்னீங்களே ஸார்!"

— நெல்லைராஜ்



"என்னோட ஞாபகமறதி வியாதி நாளுக்கு நாள் அதிகமாயிட்டே போகுதுன்னு நினைக்கிறேன் டாக்டர்..!"

"எதனால இப்படிச் சொல்றீங்க?"

"வேற ஒரு நல்ல டாக்டர்கிட்ட ட்ரீட்மெண்ட் எடுத்துக்கணும்னு நினைச்சாலும், மறந்து போய் மறுபடி மறுபடி உங்கக்கிட்டேயே வந்துடறேனே!"

"உங்களை எதுக்காக கட்சியை விட்டு நீக்கினாங்க?"



"எதிர்கட்சிக் காரங்களோட ஊழலை வெளிச்சம் போட்டு மக்களுக்குக் காட்ட டார்ச் வாங்கிய செலவு இருபத்தைந்து லட்சம்னு கணக்கு எழுதினேன்.

— சத்யா முருகவேல்

"நான் பார்த்துக் கறேன்..போ..!"

என் நண்பர் என்ற அடையாளம் வங்கியில் அவருக்கு. சற்றே வினோதம். இரண்டொரு வார்த்தைகள் பேசியதால் நானும் அவரும் நண்பர்கள் என்றாகிவிட முடியாது. ஆனாலும் இந்த விசித்திரப் பிணைப்பு அதன் போக்கில் தொடர்ந்தது.

அந்த மாதம் கிழவர் வரவில்லை. ரிக்ஷா சப்தம் கேட்ட பிரமையில் நான் வாசலுக்கு ஓடியது சற்று அதீதம். இல்லை. ஊருக்குப் போயிருக்கலாம். அடுத்த மாதம் சேர்த்து எடுக்கலாம். பிற அலுவல்கள் என்னை கவீகரிக்க கிழவரின் நினைவு பின்னுக்குப் போனது.

இரண்டு மாதங்களாக வராதது மனத்தில் உறுத்தியது. எடுத்து வைத்த ஒற்றை ரூபாய் நாணய பாக்கெட் பத்திரமாய் இருந்தது. 'வேண்டும்' என்று கேட்ட சகாவிடம் மறுத்து விட்டேன்.

கிழவர் நாளையே வரக்கூடும். தர இயலாமல் சங்கடப்பட முடியாது.

அவர்தான் வரவே இல்லை. என்னால் பொறுக்க முடியவில்லை. லெட்ஜரில் அட்ரஸ் பார்த்து, வீட்டுக்குக் கிளம்பிவிட்டேன்.

தெரு முனையில் திரும்பி விட்டேன். கோடியில் வடம் போக்கித் தெருவுக்குள் கடைசி வீடு. மதிலை ஒட்டிய வீடு.

"வயசானவன்னு இரக்கப்பட்டுத்தான் நீ என்னை அட்டெண்ட் பண்றியா?" என்றார் ஒரு தரம்.

"சேச்சே. எனக்கு எல்லாரும் கஸ்டமர்... வயசானது.. லேடீஸ்.. முடியாதது... இப்படி பேதம் இல்லே... ஈக்வல் ரைட்ஸ்.. ஃபர்ஸ்ட் கம்... ஃபர்ஸ்ட் ஸர்வ்டு.. பாலிசி...நீங்க டான்னு ஃபர்ஸ்ட் கஸ்டமரா வரீங்க ஒவ்வொரு தரமும்... ஸோ... முதல் கவனம்..!

"அதானே..!" கிழவர் முகத்தில் தெரிந்த நிம்மதி... ஞாபகம் வந்தது.

அவர் வீட்டுக்குள் போகவில்லை. திரும்பி விட்டேன். அதுவாக விபரம் தெரிகிற வரை நான் வாசலில் ரிக்ஷா எதிர்பார்த்தே மாதா மாதம் காத்திருக்கப் போகிறேன். ○

# வருகின்ற தீபாவளிக்கு உதவி செய்யுங்கள் !



**110- ஊனமுற்ற, அனாதைக் குழந்தைகளின் சார்பில் இனிய தீபாவளி நல்வாழ்த்துக்கள்.**



## இயன்றதை செய்வோம் ! இல்லாதவர்களுக்கு !!

Send your donations as DD / Cheque / MO in favour of

**The United Physically Handicapped School**

(An Institution for orphaned disabled children)

**96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore-641 107.**
**Tamil Nadu. INDIA Phone : 91-0422-667578, 667636.**

www.unitedhandicapped.org

* Donations are Tax exempt

Time's, as part of a humble mission.

ஆர். சி. ஜெயந்தன்

# படி... படி... தாய்மடி

"இங்கே புத்தகச் சுமை இல்லை, ஆனால் புலன்களுக்கு வேலை உண்டு."

சிவாலயம், பால் கோவா, பிரியாணி மூன்றுக்கும் புகழ்பெற்ற சங்கரன் கோவிலில் இப்போது தாய்த் தமிழ்ப் பள்ளியும் ரொம்பவே பிரபலம்.

"மழையே மழையே வா! வா!
மகிழ்வை அள்ளித் தா! தா!
தாளில் கப்பல் விட வேண்டும்!
தரையை அதுபோய்த் தொட வேண்டும்!"

குழைவான மழலைத் தமிழில் குற்றால அருவி போல குளிர்ச்சியாய் நம் காதுகளில் இறங்கியது இந்த மழைப் பாடல். பள்ளிக் கட்டட நுழைவாயிலில் 'பிரம்புகளைப் பரணில் ஏற்றுவோம்; பிள்ளைகளை நாளும் போற்றுவோம்' என்ற வாசகம்.

• கலைப்பொருள் யாவும் எங்கள் கைவிரல் படைப்பு



தாளாளர் வே. சங்கர்ராம் வரவேற்று, வகுப்பறைகளுக்கு அழைத்துப் போனார். முதலில் நுழைந்தது 'மொட்டு' வகுப்பிற்குள். இரண்டரை வயது முதல் மூன்று வயது வரையான குழந்தைகள் அடங்கிய வகுப்பு. அந்த வகுப்பிலிருந்த குழந்தைகள் வட்டமாய் அமர்ந்து, வித்தியாசமாய் எதையோ செய்து கொண்டிருந்தார்கள். கூர்ந்து கவனித்தால், முக்கோணம், சதுரம், செவ்வகம், நட்சத்திரம் என, தரையில் ஆசிரியை வரைந்து கொடுத்த விதவிதமான உருவங்கள் மீது தென்னை ஈர்க்குக் குச்சிகளை ஆர்வமாய் அடுக்கிக் கொண்டிருந்தார்கள். இப்போது வகுப்பறை கைவினைக் கூடமாய் நம் கண்களுக்குத் தென்பட்டது. அறிமுகமற்ற நபராக நுழைந்த நம்மைக் கண்ட மாணவச் செல்வங்கள் ஆசிரியரின் அனுமதிக்குத்



• பாடச்சுமை இல்லை, பாவனை விளையாட்டு உண்டு



• ஓவியம் வரைந்து...



• அக்காவென்றழைத்து...!



• சங்கர்ராம்

கூட காத்திராமல் எழுந்து நின்று கை கூப்பினர். அடுத்து சிந்தாமல் சிதறாமல் "அய்யா, வணக்கம். வெற்றி நிச்சயம்" என்று ஒருசேரச் சொன்னார்கள். கொஞ்சலான பிஞ்சுக் குரல்கள் என்றாலும் ஒரு கணம் அதில் தன்னம்பிக்கை மின்னலாய் வெட்டியது.

அடுத்து நுழைந்தது 'மலர்' வகுப்பு. நான்கு வயதுக்குட்பட்ட குழந்தைகள் இங்கேயும் வட்டமாய் அமர்ந்திருந்தனர். எல்லோரது கையிலும் வெட்டப்பட்ட சின்னச் சின்ன துண்டுகளாய் வெண்டைக்காயும், முருங்கைக்காயும் இருந்தன. அந்தத் துண்டுகளின் ஒரு முனையை வண்ண மையில் ஒற்றி அவரவர் நோட்டுப் புத்தகத்தில் அச்சிட்டனர். ஒரு நொடியில் அந்த வகுப்பறை ஓவியக் கூடமாகி விட்டது.

அடுத்து முதல் வகுப்பு... ஆசிரியை "அப்பா" என்று சொன்னதும் எல்லா மாணவர்களும் எழுந்து நின்று மேலுதட்டின் ஓரங்களில் மீசையை முறுக்குவதுபோல் பாவனை செய்கிறார்கள். அடுத்து "அம்மா" என்கிறார். கூந்தல் வாரிவிடுவதுபோல பாவனை காட்டுகிறார்கள். "தாத்தா" என்றதும் கைத்தடியைக் கையில் பிடித்து ஊன்றி நடப்பது போல பாவனை... திடீரென ஆசிரியை மீண்டும் "தாத்தா" சொல்லிவிட இரண்டு மாணவர்கள் மட்டும் தவறுதலாக அப்பாவுக்கான பாவனையை செய்துவிட, அவர்களுக்கு ஆட்டத்திலிருந்து தற்காலிக விலக்கு. அவர்கள் விலக்கப்படும்போது வகுப்பறையே கொல்லென்று சிரித்து மகிழ்கிறது. அன்று முதல் வகுப்புத் தொடங்கியது பாவனை விளையாட்டோடுதான்.

இரண்டாம் வகுப்பில் நுழைந்தபோது வகுப்பறையே காலியாக இருந்தது! எங்கே போய்விட்டார்கள் மாணவ, மாணவிகள்? "எல்லோரும் திறந்த வெளி வகுப்புகளுக்குப் போய் இருக்கிறார்கள்" என்றார் அருகிலிருந்த சங்கர்ராம். இன்று மரங்களையும் செடிகளையும் பற்றிய பாடம் அவர்களுக்கு...

"இது முருங்கை மரம் என்று பாடப் புத்தகத்தில் காட்டுவதோடு நாங்கள் நின்றுவிடுவதில்லை. நேரடியாக திறந்த வெளிகளுக்கு மாணவர்களை அழைத்துச் சென்று பூத்துக் காய்த்துக் குலுங்கும் உயிருள்ள முருங்கை மரத்தையே காட்டி விடுகிறோம். சாலைப் போக்குவரத்து சமிக்ஞை விளக்குகள் பற்றி

**- நேரடி அனுபவம்**

சொல்லித் தந்துவிட்டு, பிறகு சாலை சந்திப்புகளுக்கு கூட்டிப் போய் நேரடியாகக் காட்டுகிறோம். இதுதான் திறந்தவெளி வகுப்பறை" என்று அவர் விளக்கம் தந்ததும், இப்படியொரு கல்வி நமக்குக் கிடைக்காமல் போய்விட்டதே என்ற ஏக்கம் தாக்கியது.

மூன்றாம் வகுப்பிற்குள் நுழைந்தபோது வியப்பில் விழிகள் வெளியே வந்துவிழுந்துவிடும் நிலை. அங்கே ஆங்கிலப் பாடம் பயிற்றுவித்துக் கொண்டிருந்தார் ஆசிரியை. நாம் விளங்காமல் விழிக்க... சங்கர் விளக்கினார். "நாங்கள் ஆங்கிலத்தின் எதிரிகளல்ல! ஆனால் ஆங்கில வழியில், கணக்கு, சமூக அறிவியல் ஆகிய பாடங்களைப் படிப்பதுதான் தவறு என்கிறோம். மூன்றாம் வகுப்பிலிருந்து நாங்களும், ஒரு மொழிப் பாடமாக ஆங்கிலத்தைக் கற்பிக்கிறோம். ஒரு மொழிப் பாடமாக ஆங்கிலம் கற்பது தவறல்ல. நான்காம் வகுப்பு முதலே எளிய ஆங்கில வார்த்தைகளைக் கொண்டு வாக்கியம் அமைக்கவே கற்றுக் கொடுத்து விடுகிறோம்...." என்றார்.

இன்னும் அடுக்கடுக்கான ஆச்சர்யங்களை சங்கரன்கோவில் தாய்த் தமிழ் பள்ளியில் பார்க்க முடிந்தது. மாணவர்களை, ஆசிரியர்கள் "வாங்க, போங்க" என்று மரியாதையுடன் அழைக்கிறார்கள். மாணவ மணிகளோ, ஆசிரியைகளை "அக்கா! அக்கா" என அன்பொழுக அழைக்கிறார்கள்.

இந்தப் பள்ளிகளில் டையோ, ஷூவோ, சாக்ஸோ அணியத் தேவையில்லை. ஆனால் காலணியும், சீருடையும் கட்டாயம் உண்டு.

"என்னுடைய முதல் மகனுக்கு மூன்று வயது ஆனதும், எங்கள் ஊரில் தமிழ் வழி மழலையர் பள்ளி இல்லாத சூழலில், ஆங்கிலப் பள்ளியில் கொண்டு போய்ச் சேர்த்தேன். ஓரிரு மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் என் மகன் பாடிய "ரெயின் ரெயின் கோ அவே" என்ற ஆங்கிலப்பாட்டு என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. மழைக்காக கழுதைகளுக்குக் கல்யாணம் செய்து வைக்கிற தமிழ்நாட்டில் இப்படியொரு பாட்டா? அதுவும் எங்க சங்கரன் கோவிலில் மழை பெய்து ரொம்ப காலமாச்சு. எந்த நேரமும் பனியும், மழையுமாக இருக்கிற ஐரோப்பிய நாடுகளில் பாடுகிற அதே பாட்டை இங்கேயும் பாடுவது தவறல்லவா?

"அப்போதுதான் தமிழகத்தின் வட மாவட்டங்களில், குறிப்பாக திருப்பூரில் தாய்த்தமிழ்ப் பள்ளியில் அதிக மாணவர்கள் படிப்பதைப் பற்றிக் கேள்விப்பட்டு நேரடியாக அங்கே சென்று பார்த்தேன். அந்தக் கணமே தாய்த் தமிழ் தொடக்கப் பள்ளியைத் தொடங்க வேண்டும் என்ற நம்பிக்கையும் உற்சாகமும் தொற்றிக் கொண்டது. கடந்த ஜூன் இரண்டாயிரமாவது ஆண்டு இந்தப் பள்ளியை நாற்பத்தைந்து மாணவர்களோடு தொடங்கினேன். இன்று நூற்று ஐந்து மாணவர்களோடு மூன்றாவது ஆண்டில் அடியெடுத்து வைத்திருக்கிறோம்" என்றவரை இடைமறித்து, "தாய்மொழியில் பயிற்று வைத்தல் என்பது ஆங்கிலப் பள்ளிகளுக்கு எதிராக இயக்கம் நடத்துவது மாதிரி தானே?" என்று தெரியாத் தனமாக கேட்டு வைக்க எரிமலையாகக் குமுறிவிடாமல்.... நிதானமாகப் பதில் தந்தார் சங்கர்ராம்.

"பிரான்ஸ், ஜெர்மனி, ஜப்பான், ரஷ்யா உள்ளிட்ட பல உலக நாடுகளில் தாய்மொழி மூலம்தான் கல்வி கற்பிக்கப்படுகிறது. இந்தியாவில், அதுவும் தமிழ்நாட்டில் மட்டும்தான்

## அண்ணாமலைக்குப் போட்டி!

'இந்திய தொலைக்காட்சிகளில் முதல் முறையாக...' என்ற சின்னத்திரை அறைகூவலுக்கு எடுத்துக்காட்டாகிவிட்டது ஸ்டார் விஜய். பின்னே? இத்தனை தில்லாக எல்லாத் தமிழ் தொலைக்காட்சிகளையும் முந்திக் கொண்டு தமிழில் முதல் கட்டணச் சேனலாக முடி சூட்டிக் கொண்டுவிட்டதே. கையோடு நிகழ்ச்சிகளை ஸ்டார் தரத்திற்கு வழங்க கங்கணம் கட்டிவிட்டதாம். குறிப்பாக, மெகா சீரியல்களில் சன் தொலைக்காட்சிக்கு ஈடு கொடுக்கும் விதமாக பல தொடர்களைத் தயாரித்து வருகிறது. அதில் ஒன்று, அண்ணாமலைக்குப் போட்டியாக ஒளிப்பரப்பாகி வரும் ஸ்ரீ ராமன் ஸ்ரீதேவி. இராமாயணக் காப்பியத்தை புதுவிதமாக உல்டா செய்து எடுத்திருக்கிறார்களாம்.

— ஜெ.ஜே

இந்த அர்த்தமற்ற மோகம். தாய்மொழிவழிக் கல்வி மூலம்தான் குழந்தைகளின் இயல்பான, மரபுரீதியான படைப்பாற்றலை வெளிக்கொண்டுவர முடியும் என்பது, உலகளாவிய குழந்தை உளவியல் நிபுணர்களின் அறிவியல் ஆராய்ச்சி முடிவு. தவிர, மூன்று முதல் பத்து வயது வரையான சிறார்களுக்கு 'மூளை ஏற்புத்திறன்' எவ்வளவு என்பதை அறியாமல் ஆங்கிலப் பள்ளிகள் கொடுக்கிற பாடச் சுமையும், ஆங்கில வழியும், உணர்ச்சிகளை வெளிப்படுத்த முடியாத எந்திரமாய் அவர்களை மாற்றி



விடும். எங்கள் தாய்த் தமிழ் பள்ளியில் மூன்று வயது குழந்தைக்கும் நான்கு வயதுக் குழந்தைக்கும் ஒரே புத்தகம்தான்.

"மற்றொன்று, குழந்தைகளை உளவியல் ரீதியாக அணுகாத வகுப்பறை அல்லது வகுப்புச்சிறைக் கல்விதான் ஆங்கில வழியில் பயிற்றுவிக்கப்படுகிறது. அதாவது 'குழந்தைகளின் உலகம்' குறித்து மெட்ரிகுலேஷன் பள்ளிகளுக்கு எந்த விழிப்புணர்வும் கிடையாது. தொலைக்காட்சி, திரைப்படம் ஆகியவற்றின் பாதிப்பு குழந்தைகளிடம் அதிகமாக இருக்கும் காலகட்டத்தில், ஆங்கிலப் பள்ளிகளின் வகுப்பறைக் கல்வி ஒரு போதும் எடுபடாது. எனவேதான் சலிப்பூட்டும் கல்வி முறையை தூக்கி எறிந்து விட்டு, ஒலி ஒளிக் காட்சி, விளையாட்டு, நாடகம், ஓவியம், திறந்தவெளி வகுப்பு என்று 'கற்றலில் இனிமை'யை கட்டாயமாக்கிவிட்டோம். இங்கே புத்தகச் சுமை இல்லை, ஆனால் புலன்களுக்கு வேலை உண்டு" என்கிறார் சங்கர்ராம்.

இந்தப் பள்ளியைத் தொடங்கப் போகிறேன் என்றபோது, 'பள்ளி நடத்துவது புண்ணியம்' என்று சொல்லி சங்கர்ராமின் தாத்தா குருசாமி முப்பதாயிரம் ரூபாய் கொடுத்து உதவினாராம். மனைவி முத்துலட்சுமியும் தமிழ்ப் பட்டதாரி என்பதால், பேருதவி புரிகிறார். பள்ளி ஆசிரியர்கள் மிகக் குறைந்த ஊதியம் பெற்றுக் கொண்டு அர்ப்பணிப்பு உணர்வோடு பணியாற்றுகிறார்கள்.

"பள்ளியை நடத்த, ஜாதி, மத வேறுபாடுகள் எதுவுமின்றி உள்ளூர்ப் பிரமுகர்களும், பொது நல அமைப்புகளும் உதவுகிறார்கள். இவர்களையெல்லாம் அன்னைத் தமிழென வணங்குகிறோம்'' என்று சொல்லும் சங்கர்ராம்,

"தமிழகம் முழுவதும் நூற்றுக்கும் அதிகமாகப் பெருகிவிட்ட தாய்த்தமிழ் பள்ளிகளுக்கு அரசு குறைந்த பட்ச மானியமாவது வழங்கினால் புதிய தலைமுறை செழிக்கும்" என்கிறார்.

படங்கள்: டிஜிட்டல் சண்முகம்

# மனம் உருகுதே...

**"ப்பா... நீ ஏதாவது பண்ணித் தொலைச்சுடாதே. எனக்கு இருக்கறது ஒரே புள்ள."**

"நாலு இட்லிக்கு மேலே கிடையாது. பசிக்கறதுக்கு சாப்பிடுடி.. சும்மா தின்னுண்டே இருக்காதே."

ரேவதி பெண்ணைப் பார்த்து உரத்த குரலில் கத்துவாள்.

"இன்னும் ஒரு இட்லி போடு, அதுக்கு மேல வேண்டாம்" என்று ராதாகிருஷ்ணன் பரிந்துகொண்டு வருவார்.

ஆனால், கூட மூன்று இட்லியை எப்படியாவது சுபத்ரா சாப்பிட்டு விடுவாள். அவளுக்குக் கோரமாக பசியெடுத்தது. நன்றாக ருசித்து சாப்பிடத் தெரிந்தது. "இன்னிக்கு என்ன சமையல்?" என்று காலையில் பல் தேய்த்து சமையலறைக்குள் காபிக்கு வரும்பொழுதே குழந்தை கேட்க ஆரம்பித்து விடுவாள்.

அம்மா பதில் சொல்லியே ஆக வேண்டும்.

"இன்னிக்கு இதைப் பண்ணேன்" என்று அவளுக்குப் பிடித்த விஷயமாக ஏதோ ஒன்று சொல்வாள். ரேவதியும் வேறு வழியில்லாமல் அதைச் செய்து கொடுப்பாள்.

ராஜாராமனுக்கும், சுபத்ராவுக்கும் சண்டை வருவதில்லை. அதேசமயம் அவர்கள் இரண்டு பேரும் ஒற்றுமையானவர்கள் என்றும் சொல்ல முடியாது.

"குழந்தையை பள்ளிக்கூடம் முடிஞ்சவுடனே கொஞ்சம் வாசல்ல நின்னு கூட்டிண்டு வாடா" என்று ரேவதி ராஜாராமனைக் கெஞ்சுவாள்.

"முடியாது. அவ பள்ளிக்கூடத்து வாசல்ல என்னால நிக்க முடியாது. அவளைத் தனியா வரச் சொல்லு. அவளை யார் என்ன பண்ணுவா?" என்று ராஜாராமன் மறுத்துவிடுவான்.

"அவனுக்கு. சாதம் போடுடி" என்று சுபத்ராவை, பிள்ளைக்கு சாதம் போடச் சொல்லி படுத்துக் கொண்டே விரட்டுவாள்.

"என்னால அவனுக்கு சாதம் போட முடியாது. அவன் ஏதாவது சிடுசிடும்பான். அவனையே எடுத்துப் போட்டுக்கச் சொல்லு" என்று சுபத்ரா மறுத்துவிடுவாள்.

குழந்தைகள் ஒற்றுமையின்றி இருப்பது பெற்றோர்களுக்கு வருத்தத்தை அளித்தது. வெவ்வேறு குணநலன்களில் வளருகிறார்களே என்ற கவலையும் இருந்தது.

அவன் பேசுவதை ஒரு முறை ராதாகிருஷ்ணன் ஒளிந்திருந்து பார்த்தார். இந்த முறை அவன் பூத்தொட்டியைக் கவிழ்த்து, அதன் மீது ஏறி, கையில் மூங்கில் குச்சியை மைக்போல் பிடித்தபடி "தோழர்களே, உங்களுக்கொன்று சொல்லிக் கொள்ள விரும்புகின்றேன்" என்று உரத்த குரலில் கத்திக் கொண்டிருந்தான். அவர் வந்ததும் திடுக்கிட்டுத் திரும்பினான். பூத்தொட்டி ஆட, மல்லாக்க விழுந்தான்.

ராதாகிருஷ்ணன் அவனையே உற்றுப் பார்த்தார்.

"இதை எங்கேயிருந்து கத்துண்ட?" என்று கேட்டார்.



"எல்லா இடத்துலயும் இதுதானேப்பா பண்றா?" என்று அவன் பதில் சொன்னான்.

"அப்போ நீ மேடையிலே ஏறி பேசணும்னு ஆசைப்படறியா?"

"இல்லைப்பா."

"அரசியல்வாதி ஆகணும்னு ஆசைப்படறியா?"

"இல்லைப்பா."

"அப்போ ஏன் பேசறே?"

"எனக்கென்னமோ அது மாதிரி இருக்கணும்னு தோணிச்சு. அதனால பண்றேன்."

"நீ பைத்தியம் பிடிச்சு அலையப் போறியோன்னு தோணறதுடா. உனக்கு ஸ்நேகிதிதானே கிடையாதா?" என்று கேட்க, அவன் "இல்லை" என்று பதில் சொன்னான்.

அதுவும் ராதாகிருஷ்ணனுக்குக் கவலையாக இருந்தது.

உலகத்தில் இருக்கிற எல்லாக் கவலைகளையும்விட, சட்டென்று ராதாகிருஷ்ணனுக்குத் தன் குழந்தைகளைப் பற்றிய கவலை பெரிதாயிற்று. வீடோ, உத்தியோகமோ முக்கியமில்லை. இவற்றை எங்கு வேண்டுமானாலும் தேடிக் கொள்ளலாம். ஆனால், வளரும் பிள்ளைகளுக்குச் சரியான வழிகாட்டி இல்லாவிட்டால், சரியான வளர்ப்பு முறை இல்லாவிட்டால், அவர்கள் பிற்காலத்தில் மிகப் பெரிய தொந்தரவாக உருவெடுப்பார்கள். அவர்களைப் பற்றிய கவலையே நோய்க்கும், வருத்தத்திற்கும் இன்னபிற வேதனைகளுக்கும் காரணமாகிவிடும். குழந்தைகளைக் காப்பாற்ற ஏதாவது செய்தாக வேண்டுமென்று உயிர் பிரிகிற நேரத்தில் கூட யோசிக்க வேண்டியிருக்கும்.

ராதாகிருஷ்ணன் குழந்தைகளோடு சங்கரய்யர் வீட்டு மாடிப்படியில் ஏறிக்கொண்டிருந்தபோது உள்ளிருந்து 'கும்'மென்று ஊதுவத்தி வாசனை அடித்தது. தசாங்கம் போல எதையோ கொளுத்தி வைத்திருக்க வேண்டும். சுகந்தமான அந்த வாசனை நெஞ்சு முழுக்க நிறைய, பக்தி உணர்வு தானாகத் தோன்றியது. இந்த வாசனைக்கு இந்த உணர்வு என்று மனம் கணக்குப் போட்டு வைத்திருக்கிறது. தசாங்கம் ஏற்றினால் பக்தி, மாமிசம் வறுத்தால் அருவெறுப்பு, மோர்க்குழம்பு கொதித்தால் பசி என்று மனம் எதையோ பிரித்துப் பிரித்து வைத்துக் கொண்டிருக்கிறது. நாம் அந்த உணர்வுக்குப் பலியாகிவிடுகிறோம்.

சங்கரய்யர் மிகச் சாமர்த்தியமாகத் தன் வீட்டு ஹாலை ஒரு கோவிலாக மாற்றி, தன் தோற்றத்தை ஒரு முனிவராக மாற்றி ஊரை ஏமாற்றிக் கொண்டிருக்கிறாரோ என்று சட்டென்று தோன்றியது.

'வேண்டாம்... வேண்டாம்... நிறுத்து. இந்த மாதிரி யோசித்துவிட்டு அடி வாங்கினாய். மறுபடியும் இப்படி

யோசிக்காதே' என்று மனம் வேகமாகப் பின்வாங்கியது.

குழந்தைகளோடு வராண்டாவிற்குப் போய், அங்கிருந்து ஹாலை எட்டிப் பார்த்து, "சங்கரய்யர் இருக்கிறாரா?" என்று குரல் கொடுக்க, பின்னாலிருந்து "இங்கே இருக்கிறேன்" என்று சங்கரய்யர் குரல் வந்தது. அவர்கள் அவசரமாகத் திரும்பிப் பார்த்தார்கள்.

மேல் மாடியிலிருந்து சங்கரய்யர் நிதானமாகக் கீழிறங்கி வந்துகொண்டிருந்தார். நாலு படி உயரத்தில் நின்று குழந்தைகளையும் அவரையும் உற்றுப் பார்த்தார்.

"அடாடா... இதுதான் உங்க குடும்பமா? இவாதான் குழந்தேளா? ரொம்ப சந்தோஷம். ரொம்ப நிறைவா இருக்கு."

"இது பையன். அது பொண்ணு." ரேவதி முன்னிறுத்தினாள்.

"சபாஷ், இரண்டும் இரண்டு சிங்கக் குட்டிகள்" என்று சொல்லிக் கீழிறங்கி வந்தார்.

குழந்தைகளை 'அருகே வா' என்று கூப்பிட, குழந்தைகள் ஆச்சரியத்துடன் அந்த தாடிவாலாவின் அருகே போய் வியப்போடு பார்த்தார்கள்.

அவர் குழந்தைகளை மெல்ல அணைத்துக் கொண்டார். உச்சியில் முத்தமிட்டார். குழந்தைகளின் கைகளைப் பக்கத்துக்கு ஒன்றாகப் பிடித்துக்கொண்டு ஹாலுக்குள் நுழைந்தார். உட்கார்ந்தார்.

சங்கரய்யர் குழந்தைகளை உற்றுப் பார்த்தார். தலை தடவினார். நிறையக் கேள்விகள் கேட்டார். அவர்கள் பதில் சொல்லும்போது ஆச்சரியத்துடன் "அடடே... இதெல்லாம் உனக்குத் தெரியுமா?" என்பதுபோல் உற்சாகப்படுத்தினார்.

"ரொம்ப கெட்டிக்காரியா இருக்கியே" என்று ராதாகிருஷ்ணன் மகளிடம் பேசினார்.

"அடிசக்கை... பிரமாதம்டா" என்று ராதாகிருஷ்ணனின் மகன் முதுகில் அடித்துக் கொண்டாடினார்.

"ரேவதி, அபாரமான குழந்தேள். ரொம்பப் பிரமாதமா வருவா. சில முகங்களைப் பார்த்தவுடனேயே தெரிஞ்சு போயிடும். கடவுளுடைய இருப்பின்னு. வரமா வர குழந்தேளை வந்து தொட்டவுடனேயே கண்டு பிடிச்சுடலாம். உன் இரண்டு குழந்தேளும் இரண்டு வரம். இவாளப் பத்தி ஏதாவது கவலை உனக்குள்ள இருந்தா, அதைத் துடைச்சு வெளிய போட்டுடு."

ரேவதி கைகூப்பினாள்.

தொலைவிலிருந்தே விழுந்து நமஸ்கரித்தாள்.

ராதாகிருஷ்ணன் முகத்தை அழுகையாக மாற்றிக் கொண்டு அவரையே பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால், உள்ளுக்குள் வேறு கேள்விகள் எழத்தான் செய்தன.

'உலகத்துல எல்லாப் பிறப்பும் வரம்தான். எந்தப் பிறப்பு வரம் இல்லை? எது தீயதுக்குன்னு பிறக்கறது? ஒருத்தர் வீட்டு குழந்தைகளை ரொம்ப அற்புதமான குழந்தைகள்னு கொண்டாடினா, அது பெத்தவாளுக்கு பெரிய மகிழ்ச்சியா இருக்கும். என்ன கேட்டாலும் கொடுத்துடற மனோநிலை வரும். பதிலுக்குப் பாராட்டணுமோன்னோ? உங்களை மாதிரி உண்டான்னு குழந்தேளைப் பெத்தவன் பாராட்டுவான். தன் குழந்தேளைப் பாராட்டினதாலேயே பதிலுக்குப் பாராட்டுவான்.'

எத்தனை அடக்கி வைத்தும் எதிர்மறையான சிந்தனைகள் நகர்வதை ராதாகிருஷ்ணனால் தடுத்து நிறுத்த முடியவில்லை.

'டேய்... நீ மறுபடியும் செருப்படி படப் போறடா' என்று மூன்றாவதாக ஒரு குரல் அவரைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்தது. ஆனால், எதிர்மறைகள் தொடர்ந்தன.

**"என்ன டாக்டர் இது? பல்லைப் பிடுங்க நூறு ரூபா ஃபீஸ்னு சொல்லிட்டு இப்ப இருநூறு ரூபாய்க்கு பில் தர்றீங்க?"**

**"சொத்தைப் பல்லைப் பிடுங்கத்தான் நூறு ரூபா; நான் அதுக்குப் பக்கத்துல இருந்த நல்ல பல்லைத் தவறுதலா பிடுங்கியிருக்கேனே!"**

**- அம்பை தேவா**

"ரேவதி, பொண்ணு குண்டா இருக்காளேன்னு பயப்படாதே. நான் சின்ன வயசுல ரொம்ப ஒல்லியா இருந்தேன். துனியூண்டு இருந்தேன். எங்கம்மாவே என்னை பூனைக் குட்டின்னுதான் கூப்பிடுவா. இப்போ யாராவது என்னை பூனைக்குட்டின்னு கூப்பிடுவாளா? ஏண்டா... நீ சொல்லு. என்னைப் பார்த்தா எப்படியிருக்கு? என்னை யாரு, என்னன்னு கூப்பிடுவா?"

"யானைக்குட்டின்னு கூப்பிடுவா" பளிச்சென்று பிள்ளை பதில் சொன்னான்.

ராதாகிருஷ்ணன் தலையில் அடித்துக் கொண்டார்.

"ச்சு... தப்பு" ரேவதி அங்கிருந்து பிள்ளையை அதட்டினாள்.

"மனசுல இருக்கறதை பளிச்சுனு குழந்தை வெளிய சொல்றான். அதனாலதான் இவனை வரம்னு சொல்றேன். நிறையப் பேர் உள்ள இருக்கறது வெளிய சொல்ல மாட்டேங்

கறாளே. உள்ளே ஒண்ணு வைச்சுண்டு வெளியே பேசறாளே. இவன் இப்படிப் பட்டுனு சொன்னது சரி. என்னை இப்பவும் எல்லாரும் யானைக் குட்டின்னுதான் சொல்றா. அதுவும் எங்காத்து மாமி இருக்காளே அவ குட்டின்னுகூட சொல்றதில்லை. யானை வருது அப்படின்னுதான் சொல்றா."

அவர் பேச்சுக்கு அங்கிருந்த ருக்மணி, சங்கரய்யரின் மனைவி, அந்தக் குழந்தைகள் எல்லோரும் சிரித்தார்கள்.

**ம**ௌனம் சற்று நேரம் சும்மா இருந்தது. சங்கரய்யரையே பார்த்துக் கொண்டிருந்தது.

"ராஜாராமன் ரொம்பப் பேசறான். நீங்க கொஞ்சம் அவனைப் பார்த்து புத்திமதி சொல்லணும்."

ரேவதி தொலைவிலிருந்து சொன்னாள்.

"பேசறானா? பேசட்டுமே. பேசினா நல்லதுதானே?"

"இல்லை. தனக்குத்தானே பேசறான். கண்ணாடி முன்னாடி நின்னு பேசறான். சுவத்துக்கிட்ட நின்னு பேசறான்; மொட்டை மாடிக்குப் போய் குறுக்க, நெடுக்க நின்னு பேசறான். பன்னெண்டாவது படிக்கற பையன் இப்படி தனக்குத் தானே பேசினா வெளிய இருக்கறவா சிரிக்க மாட்டாளா? நாலஞ்சு பேர் சொல்லி சிரிக்கவும் செய்தா, அப்படியும் அவனுக்கு அந்த புத்தி மாற மாட்டேங்கறது. உள்ளே இருக்கறதையெல்லாம் வெளியே கொட்டறான். பூட்டி வைச்சுக்க மாட்டேங்கறான்!"



"கொட்டட்டுமே. ஒண்ணும் தப்பில்லை. ஏண்டா அப்படிப் பண்ற?"

ராஜாராமனைப் பார்த்து சங்கரய்யர் கேட்க, அவன் மலங்க மலங்க விழித்தான்.

"நாலாபக்கமும் நாலாவிதமா புத்தி ஓடறதா?" என்று மறுபடியும் கேட்க 'ஆம்' என்று தலையசைத்தான்.

"புத்தியை ஒரு நிலைப்படுத்தறதுக்கு உனக்கொரு சின்ன உபாயம் சொல்லித் தரேன். கேட்டுப்பியா? இப்போ உன் புத்தி எங்க இருக்கு. எங்கிட்ட இருக்கா, வேற எங்கேயாவது மேயறதா?"

"உங்கக்கிட்டதான் இருக்கு" அவன் அடிக்குரலில் பதில் சொன்னான்.

"நாம உட்கார்ந்துக்கலாம்."

அவர் அந்தப் பிள்ளையை எதிரே உட்கார வைத்தார். தன்னுடைய வலப்பக்கம் ராதா கிருஷ்ணனின் மகள் சுபத்ராவை இருத்திக் கொண்டார்.

"ஏதாவது குடிக்கத் தரட்டுமா?"

ருக்மணி கேட்க "அவாளுக்குக் கொடேன். குழந்தைகளுக்கு நான் அப்புறமா கொடுத்துக்கறேன்" என்று சொல்ல, ருக்மணி உள்ளே போனாள்.

**ரா**தாகிருஷ்ணனும் ரேவதியும் சுவரோரம் போய் அமர்ந்து கொண்டார்கள்.

ரேவதிக்கு, தன் பிள்ளையை சங்கரய்யர் ஆசிர்வதிக்கிறார் என்பதே சந்தோஷமாக இருந்தது.

'ப்பா... நீ ஏதாவது பண்ணித் தொலைச்சுடாத. எனக்கு இருக்கறது ஒரே புள்ள.'

ராதாகிருஷ்ணனின் உள்ளுக்குள்ளே குரல் ஓடிற்று.

'நீ சும்மா இரேன். சனியனே.'

மறுபடியும் மனத்தை ராதாகிருஷ்ணன் கடிந்துகொண்டார். மிகவும் அப்பாவிபோல் முகத்தை வைத்துக்கொண்டு, ஒன்றுமே அறியாதவர்போல் ஒரு தோற்றத்தை ஏற்படுத்திக் கொண்டு ராதாகிருஷ்ணன் பார்த்துக் கொண்டிருந்தார்.

சங்கரய்யர் வினாடிநேரம் அவரைப் பார்த்துச் சிரித்தார்.

அந்தச் சிரிப்பு பகீரென்ற ஒரு பய உணர்வை ராதாகிருஷ்ணனுக்கு ஏற்படுத்தியது.

அவர் முகம் இன்னும் அப்பாவியாக மாறியது.

"மூச்சை இழுத்து வெளிய விடு. இரண்டு மூக்காலயும் இழுத்து விட்டியோன்னோ, இப்போ வலது மூக்கால மூச்சை இழுத்து இடது மூக்காலே விடு. ஆங்... இப்படிப் பொத்திக்கோ. இப்போ இடது மூக்காலே மூச்சை இழுத்து வலது மூக்காலே விடு. எட்டு எண்ணுற வரைக்கும் மூச்சை இழுக்கணும். பதினாறு எண்ணுகிற வரைக்கும் மூச்சை விடணும். அதாவது வேகமா மூச்சை இழுத்து மெல்ல விடணும். அதேபோல இடது நாசியில வேகமா எட்டு வரைக்கும் எண்ணி மூச்சை இழுத்து, மெல்ல பதினாறு தடவை எண்ணிக் கையோட வெளிய விடணும். மூச்சை நிறுத்தாதே. இழுத்து வெளியவிடு. இந்தப் பக்கமா இழுத்து வெளிய விடு. இப்போ எப்படி



ஜம்மென்று உட்கார்ந்துகொண்டு மாருதியார் என்ன செய்கிறார்?
பார்க்க... 74ம் பக்கம்...

இருக்கு?"

பத்துமுறை அவன் செய்தபிறகு, "என்னமோ உள்ளே கனமா இருக்கு" என்று அவன் சொன்னான்.

"இப்போ கண்ணை மூடிக்கோ. கண்ணை மூடிண்டு பேசாம உன்னுக்குள்ளேயே பார்த்துண்டிரு. நான் இப்போ பாட்டு பாடப் போறேன். உன் தங்கை பாடப்போறா. உங்க அப்பா, அம்மா எல்லாரும் பாடப் போறா. எங்காத்து மாமி பாடப் போறா, கேட்கறயா? பாட்டை மெல்ல கேட்டுண்டிருக்கியா?"

அவன் சரியென்று தலையசைத்தான்.

அவர் "சம்போ சிவ சம்போ" என்று பாட ஆரம்பித்தார். திரும்பத் திரும்ப அந்த இரண்டு வார்த்தைகளையும் பாட்டாகப் பாடி எல்லோரையும் பாட வைத்தார்.

அந்த ஹால் முழுவதும் கனமான குரல்கள் பரவிப் பின்னி உயர்ந்து கிளம்பின.

அவன் மெல்ல அந்தப் பாட்டை அனுபவிப்பது சகலருக்கும் தெரிந்தது.

அவன் தம்மை மறந்து அந்தப் பாட்டில் மூழ்கிப் போவது மற்றவர்களாலும் உணர முடிந்தது.

சங்கரய்யர் அவன் உச்சந் தலையை தடவி விட்டார். வகிடு முழுவதும் நீவிவிட்டார். பின் தலையைத் தடவினார். கழுத்தைத் தடவினார். முதுகைத் தடவினார். எட்டி நடுமுதுகுக்குக் கைகளைக் கொண்டு போய் மெல்ல விரல்களை அசைத்து சில வருடல்களை ஏற்படுத்தினார். அவன் மார்பில் மெல்லத் தட்டினார்.

அவன் பரவச நிலைக்கு தள்ளப்பட்டான். தன் இரண்டு கைகளையும் இரண்டு பக்கமும் விரித்து இறைவனிடம் கையேந்துவது போல் நின்றான். பிறகு இன்னும் மேலே தூக்கி இறைவனைப் பார்த்துவிட்டது போல் பரவச நிலையில் இருந்தான். இன்னும் தூக்கி மெல்ல வாய்விட்டுச் சிரித்தான்.

அவன் கண்களுக்கு முன்னே ஏதோ நடந்து கொண்டிருந்தது. ஏதோ ஒரு விஷயத்தை அவன் பார்த்துக் கொண்டிருப்பதுபோல் தெரிந்தது.

ரேவதி பயந்தாள். ராதா கிருஷ்ணன் 'என்னது இது. ஏன் இப்படி பண்றார்?' என்று கலவரமானார். அருகில் உட்கார்ந்த சுபத்ரா மட்டும் 'அண்ணா ரொம்ப அழகா இருக்கான்' என்று நினைத்துக் கொண்டாள். அது தொடர்ந்து கொண்டேயிருந்தது.

திடீரென்று ராதாகிருஷ்ணன் மகன் ராஜாராமன் பிளிறலாய்க் கத்தினான்.

பாட்டு நிறுத்தப்பட்டது. அவன் உடம்பு மெல்ல நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் மெல்லக் கண் விழித்து சங்கரய்யரைப் பார்த்தான். சிரித்தான். அந்தப் பார்வை ராஜாராமனின் பார்வையாக இல்லை. வேறு யாரோ பார்ப்பதுபோல் இருந்தது.

சுபத்ரா மெல்ல பயந்தாள். அவள் மீது சங்கரய்யர் கைவைத்துத் தடுத்தார். அவரைப் பார்த்து மறுபடியும் ராஜாராமன் சிரித்தான்.

"நீர்தான் ஓய்...நீர்தான்...நீர்தான்" என்று மறுபடி மறுபடி சொன்னான்.

"என்னது?" ரொம்ப அமைதியாக சங்கரய்யர் கேட்டார்.

"அவர்தான் நீர். நீர்தான் அவர்."

ராஜாராமன் கரகரப்பான குரலில் பதில் சொன்னான். அதுவரை அந்தக் குரலில் அவன் பேசியதில்லை.

(தொடரும்)

சுவடுகள் : 40

# மேடைகள் இப்படித்தான்!

திருப்பூர் கிருஷ்ணன்

**கா**யிதேமில்லத் கல்லூரியில், மாணவர்களுக்கான நாடகப் போட்டி. நீதிபதிகள் நானும், டில்லி கணேஷும், நடிகை காந்திமதியும். நாடகங்களைப் பார்த்துவிட்டு இறுதியில் முடிவை அறிவிக்க மேடையேறினோம். அப்போது தன்னிச்சையாக மேடையைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டார் காந்திமதி. அது அவர் பழக்கம். நாடக நடிகர்கள் பலரும் அப்படித்தான். அவர்களுக்கு மேடை மீது அத்தனை பக்தி. நான் காந்திமதியின் மேடை மரியாதையை மெச்சியபோது அவர் என்னிடம் சொன்னார். ''தம்பி. கடவுள் மட்டும் நாடக மேடைங்கற ஒண்ணைப் படைக்கலைன்னா எனக்கு ஒரு முகமே இருந்திருக்காதே!'

மேடையில் அசத்தியம் பேசத் துணியும் போது, மேடை அவ்விதம் பேசியவர்கள் வாழ்வைக் கவிழ்த்து விடுகிறது. பொய் வாக்குறுதிகளைக் கொடுத்து ஆட்சிக்கு வந்தாலும், ஆட்சி அதிக நாள் நிலைப்பதில்லை. தாங்கள் பேசும் மேடைகள் தங்களைக் கண்காணித்துக் கொண்டிருப்பதை ஆட்சியாளர்கள் அறிவதில்லை.

**மூ**ப்பனார் தலைமையில் ந. பிச்சமூர்த்தி புத்தக வெளியீட்டு விழா. இடம் பாரதியார் இல்லம். ஞானக்கூத்தன், 'மூ' ராஜகோபால், விருட்சம் ஆசிரியர் அழகியசிங்கர், தமிழ் ஸிஃபி டாட் காம் இதழாசிரியர் ஆர். வெங்கடேஷ், செந்தூரம் ஜெகதீஷ், பா. ராகவன் என என் நண்பர்கள் பலர் விழாவின் பின்னணியில் இருந்தார்கள். முக்கியமான பேச்சாளர் லட்சுமி கிருஷ்ணமூர்த்தி. தீரர் சத்தியமூர்த்தியின் புதல்வி. நான் அவர் பேச்சைக் கேட்கவென்றே கூட்டத்திற்குச் சென்றேன்.



• துணிச்சல் லட்சுமி

• படம் : கிளிக் ரவி

ந.பிச்சமூர்த்தியும் மூப்பனாரும் ஒரே ஊர்க்காரர்கள் என்பதால் மூப்பனாரைத் தலைமை தாங்கச் சொல்லியிருந்தார்கள். மூப்பனார் வந்த காரணத்தாலேயே கட்சித் தொண்டர் கூட்டம் அலைமோதியது. தொண்டர்களுக்குத் தங்கள் தலைவரைப் பற்றித்தான் அக்கறையே தவிர, இலக்கியத்தைப் பற்றி அக்கறையில்லை. லட்சுமி கிருஷ்ணமூர்த்தி, 'திரு மூப்பனார் அவர்களே!' என்று பேச்சை ஆரம்பித்தார். அந்த மூப்பனார் என்ற ஒரு வார்த்தைக்கு எழுந்த கைத்தட்டலால் பாரதியார் இல்லம் கிடுகிடுத்தது. பார்த்தார் லட்சுமிகிருஷ்ணமூர்த்தி. 'நான் இப்படி ஆரவாரமாகக் கைதட்டும்படியாக இப்போது என்ன கருத்தைச் சொல்லிவிட்டேன்! மூப்பனார் என்று உங்கள் தலைவர் பெயரை மட்டும்தானே சொன்னேன்? அதற்கு ஏன் இத்தனை ஆரவாரம்? உங்கள் தலைவர் சமூக சேவை செய்யச் சொன்னாரே, அதைச் செய்கிறீர்களா? கிராமங்களுக்குப் போய்ப் பணிபுரியச் சொன்னாரே,

அதைச் செய்கிறீர்களா? இங்கே உட்கார்ந்து வெறுமே அவர் பெயரைச் சொன்னதற்கே கைதட்டிக் கொண்டிருக்கிறீர்கள். இப்படித் தானே காமராஜ் சொன்னதையெல்லாம் செய்யாமல் அவர் பெயரைச் சொன்னதும் கைதட்டிக் கைதட்டி அவரைக் கவிழ்த்தீர்கள். எனக்கு வெட்கமாக இருக்கிறது. இனி மேல் மூப்பனார் பெயரைச் சொன்னால் கைதட்டாதீர்கள். நான் உருப்படியாக ஏதாவது கருத்துச் சொன்னால் மட்டும் கைதட்டுங்கள்' என்று கர்ஜித்தார். அர்த்த மற்று ஆரவாரம் செய்து கொண்டிருந்த கட்சிக் கூட்டம் பெட்டிப் பாம்பாய் அடங்கியது. மூப்பனார் சந்தோஷமாக லட்சுமி கிருஷ்ணமூர்த்தி பேச்சைக் கேட்டு மகிழ்ந்தார். பெரும் கூட்டத்தைப் பார்த்தும் அஞ்சாமல், தமது கருத்தைச் சொன்ன லட்சுமி கிருஷ்ணமூர்த்தியின் மேடைத் துணிச்சல் வியக்க வைத்தது.

உலகப் பல்கலைக் கழகம் என்ற அமைப்பு மூலம் கவிஞர் கிருஷ்ண ஸ்ரீனிவாஸ் ஏராளமான பேருக்கு கௌரவ டாக்டர் பட்டங்களை வாரி வழங்கிக் கொண்டிருந்தார். கல்லூரியில் கஷ்டப்பட்டுப் படித்து பி.எச்.டி. கல்வி மூலம் டாக்டர் பட்டம் வாங்கும் சிரமங்கள் இல்லாததால், சிலர் இந்த டாக்டர் பட்டத்தை ஊக்குவித்தார்கள். துக்ளக் போன்ற பத்திரிகைகள் இப்போக்கைக் கண்டனம் செய்தன. நா.பா. இவ்விதம் டாக்டர் பட்டம் வழங்குவதைக் கடுமையாகக் கண்டித்து எழுதினார். இதனிடையே நா.பா.வுக்கு ஒரு கடிதம் வந்தது. தி.ஜா. வுக்கும் நா.பா.வுக்கும் அவர் டாக்டர் பட்டம் வழங்குவதாக! பிறகு தி.ஜா. எனக்கு ஒரு கடிதம் எழுதினார், மாபெரும் அறிஞர்களுக்கு வழங்க வேண்டிய டாக்டர் பட்டத்தை, மிகச் சராசரி இலக்கியவாதியான தாம் பெறுவது நியாயமல்ல என்று தோன்றியதால் அதைப் பெற மறுத்துவிட்டதாக. நான் ந.பா.விடம் தி.ஜா. கடிதத்தைக் காண்பித்து, "நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டேன். " விழாவுக்குச் செல்லலாம் என்றிருக்கிறேன்!'' என்றார் அவர் சிரித்தவாறே. நா.பா.வும் நானுமாக நியூ உட்லண்ட்ஸ் உணவகத்தில் நடைபெற்ற டாக்டர் பட்ட விழாவுக்குச் சென்றோம். நா.பா. மேடையேறிப் பேசும்போது 'நவராத்திரி சுண்டல் கடலையை விடவும் டாக்டர் பட்டம் மலிந்துவிட்டது' என்று சொல்லி, தமது பேச்சை ஆரம்பித்தார். சென்சஸ் அதிகாரிகளிடம் கேட்டு ஜனத்தொகை முழுவதற்குமான முகவரிகள் வாங்கி எல்லோருக்குமே டாக்டர் பட்டங்களைத் தபாலில் அனுப்பிவிடலாமே என்று ஆலோசனை சொன்னார். எந்த மரியாதையும் இல்லாத உலகப் பல்கலைக் கழக டாக்டர் பட்டத்தைத் தமக்கு அன்போடு வழங்கி அவமானப்படுத்திய கிருஷ்ண ஸ்ரீனிவாஸுக்குத் தமது பணிவான கண்டனங்களைத் தெரிவித்துக் கொண்டார். அதன் பிறகு மேடைக்கு வந்த கிருஷ்ண ஸ்ரீனிவாஸ், "நா.பா.வுக்கான டாக்டர் பட்டம் இலக்கியத்திற்காக அல்ல என்றும் இந்த மேடையிலேயே தம்மைத் தாக்கிய இதுபோன்ற அவரது துணிச்சலுக்காகத்தான் என்றும் கூறிக் கைதட்டல்களை அள்ளிக் கொண்டார்!

(தொடரும்)

"சுபாலிகிட்ட மாமூல போட்டுக் கொடுக்கும்படி கேட்டிருக்கக் கூடாது!''

"ஏன்?''

"திருடப் போறப்ப ஒரு நாள் என்கூட வாங்க. தொழில்ல இருக்கிற ரிஸ்க் புரியும்ங்கறான்!''



"புது மானேஜர் அபார திறமைசாலி!''

"அப்படியா?''

"ஒருத்தர் குறட்டைய வச்சு அவர் தூங்கி எவ்வளவு நேரமாகுதுன்னு கரெக்டா சொல்லிருவார்!''

- அம்பை தேவா



## காதில் விழுந்தவை

# யார் இந்த தேசபந்து?


• பி.சி. கணேசன்

இப்போது கோட்டை வட்டாரத்திலும், ஆளுங் கட்சி வட்டாரத்திலும் பரவலாக அடிபடும் பெயர் தேசபந்து! யார் இந்த தேசபந்து? ஜெயலலிதாவின் முதல் அமைச்சரவையில் (199196) பங்கு பெற்ற அழகு திருநாவுக்கரசிடம் உதவியாளராகப் பணியாற்றியவர். தி.மு.க ஆட்சியின்போது, போயஸ் தோட்டத்துடன் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தவர். இரண்டாம் முறையாக அம்மா பொறுப்பேற்றவுடன் பசையுள்ள மீன் இலாகாவை வைத்திருந்த நைனார் நாகேந்திரனுக்கு உதவியாளராக நியமிக்கப்பட்டார். "பெயருக்குத்தான் உதவியாளர்; மற்றபடி நீட்டிய இடத்தில் அமைச்சரின் கையெழுத்தைப் பெறக் கூடியவர்" என்று சொல்கிறது கோட்டை வட்டாரம். இப்போது நைனார் நாகேந்திரனுக்கு, தொழில்துறையும் கொடுக்கப்பட்டு விட்டதால் தேசபந்து மிகவும் பிஸி. அம்மாவின் கருணையைப் பெற இவரைத்தான் பிடிக்கிறார்கள் கட்சிக்காரர்கள். பல ஜூனியர் அமைச்சர்கள் தேசபந்துவோடு பகல் உணவு சாப்பிட, ஆர்வமாக இருக்கிறார்கள். அம்மாவிடம் ஓடிவரும் மாற்றுக்கட்சி பிரமுகர்களை 'டீல்' செய்வதும் இவர்தானாம். "போயஸ் தோட்டத்தில் ஆட்சி செலுத்துபவர் இணைச் செயலாளர் நடராஜன் என்றால். கோட்டையில் கோலோச்சுபவர் தேசபந்துதான்" என்று அடித்துச் சொல்கிறார்கள்.

● மத்திய அரசின் புத்தகப் பதிப்புத் துறை பத்தாண்டுகளுக்கு முன்னர், அறிஞர் அண்ணாவின் வாழ்க்கை வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதித் தருமாறு எழுத்தாளர் பி.சி. கணேசனைக் கொண்டது. அதன்படி அவரும் எழுதிக் கொடுத்தார். "ஆனால் புத்தகம் பதிப்பிக்கப்படவில்லை. துவக்க காலத்தில் அண்ணா, பிராமணரல்லாதார் இயக்கத்தில் தீவிரமாகப் பங்கு கொண்டதைப் பற்றி விலாவரியாக குறிப்பிட்டதுதான் என்று காரணம் சொன்னது மத்திய அரசு. 'அந்தப் பகுதியைச் சுருக்கித் தர முடியுமா?' என்றும் கேட்டது. ஆனால் வரலாற்றைச் சொல்லித்தானே ஆக வேண்டும் என்றுதான் ஒதுங்கிக் கொண்டேன்" என்று சொல்கிறார் பி.சி. கணேசன். இப்போது பத்து வருடங்களுக்குப் பிறகு மீண்டும் புத்தகப் பதிப்புத்துறை, சுருக்கித் தருமாறு கேட்கிறதாம். "அண்ணாவின் கண்ணோட்டம் பின்னர் ஓரளவுக்கு மாறினாலும் ஆரம்பக் கால அரசியல் வரலாற்றை உள்ளபடி சொல்லித்தானே ஆக வேண்டும்" என்று மீண்டும் வலியுறுத்தியிருக்கிறார் கணேசன். விடாக் கண்டன்; கொடாக் கண்டன்!

● "எங்கள் காங்கிரஸ் உறுப்பினர்கள் கலாட்டா செய்ய மாட்டார்கள். அவர்களையும் 'கவனித்துக் கொள்ளுங்கள்'" என்று 'கராத்தே' தியாகராஜனிடம் புதுத் தலைவர் சொல்லியிருப்பதாக மாநகராட்சியில் பரபரப்பாகச் சொல்கிறார்கள்.

- சஞ்சயன்

# இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்

# ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

குழந்தை இல்லாத தம்பதிகள் பிள்ளைவரம் வேண்டி இனி எங்கேயும் அலைய வேண்டாம். குழந்தை பெறாமைக்கு குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி. ஹோமியோ-சித்தா-ஆயுர்வேத முக்கூட்டு மருத்து வத்தின் மூலம் ஆண் மலட்டுத் தன்மையும், பெண் மலட்டுத் தன்மையும் அறவே நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள் டாக்டர் **ஏ.அர்ஜுனா, டாக்டர் வி.ஏ.ஆண்டாள்.** இவர்கள் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறார்கள். திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னையில் வட பழனி 100 அடி சாலையிலும் வெற்றிகரமாக சிகிச்சை நிலையங்கள் நடத்தி வருகிறார்கள்.

குழந்தைப் பெற்றுக் கொள்ள சிகிச்சைக்கு வரும் தம்பதிகளை டாக்டர் **ஏ.அர்ஜுனா** முதலில் கணவனின் உயிரணு உற்பத்தியை விந்து பரிசோதனையின் மூலம் குறைபாடுகளைக் கண்டறிகிறார். பிறகு மனைவியின் குறைபாடுகளை சில பரிசோதனைகளின் மூலம் தெரிந்து கொண்டு ஆண் மலட்டுத்தன்மை, பெண் மலட்டுத்தன்மை நீங்கி குழந்தை பெற முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளிக்கிறார்.

"சென்னை கோடம்பாக்கத்தில் சம்பத் என்பவர் சிகிச்சைக்கு வரும்போது அவரது விந்து பரிசோதனையில் டோட்டல் கவுண்ட் 70 மில்லியனும், மொட்டிலிட்டி 70%ம் இருந்தது. 2 மாத சிகிச்சைக்குப்பின் டோட்டல் கவுண்ட் 142 மில்லியனும், மொட்டிலிட்டி 80% உயர்ந்துள்ளது.

இது முக்கூட்டு மருத்துவத்தில் ஒரு சாதனையாகும்.

கோவை பெரியநாயக்கன் பாளையத்தைச் சேர்ந்த லோகநாதனுக்கு அறவே உயிரணு இல்லை. அவருக்கு ஒரே மாத முக்கூட்டு மருந்தில் கவுண்ட் 110 மில்லியன், மொட்டிலிட்டி 20% உற்பத்தி ஆகியுள்ளது.

உயிரணு குறைவாக இருந்த கேரள மாநிலம் பாலக்காட்டைச் சேர்ந்த சேதுமாதவனுக்கு 16.6.2000ல் கவுண்ட் 20மில்லியன், மொட்டிலிட்டி 50% இருந்தது. 13.7.2001ல் கவுண்ட் 60மில்லியன், மொட்டிலிட்டு 50% என்று முன்னேற்றம் கண்டது.

மகாராஷ்டிர மாநிலம் நியூ பாம்பே வாஷி பகுதியைச் சேர்ந்த ஜெயராமனுக்கு உயிரணு குறைவாக இருந்தது. 28.12.2000ல் இருந்த கவுண்ட் 45 மில்லியன், மொட்டிலிட்டி 50% ஒரே மாதத்திற்குள் 26.1.2001ல் கவுண்ட் 92மில்லியன், மொட்டிலிட்டி 30% என்று உயர்ந்தது.

சென்னையைச் சேர்ந்த, உயிரணு குறைவாக இருந்த ரகுவுக்கு 6.5.2000ல் கவுண்ட் 29 மில்லியன், 50% மொட்டிலிட்டி இருந்தது. எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் அவருக்கு 20.8.2000ல் கவுண்ட் 160 மில்லியன் உயர்ந்தது.



• உலகப் புகழ்பெற்ற மருத்துவத் திலகம் டாக்டர் A. அர்ஜுனாவுடன் திருவண்ணாமலை மாவட்டத்தில், உயிரணு உற்பத்தியாகி குழந்தை பெற்ற கிருஷ்ணன் - ஜெகதாம்பாள் தம்பதியர்.

### ஆண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்திருந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந்

அண்மையில் குழந்தை பெற்றவர்கள், குழந்தைபேறு உண்டானவர்கள்
பெரம்பலூர் மாவட்டம் உடையார்பாளையத்தில் எங்களது முக்கூட்டு சிகிச்சையால் மலட்டுத்தன்மை நீங்கி கிருஷ்ணமூர்த்தி - சுஜலட்சுமி தம்பதியருக்கு குழந்தை பிறந்துள்ளது.
துபாயில் திருமதி நாசர்பாய் முக்கூட்டு மருந்து சாப்பிட்டதில் தற்போது அவருக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது. பிறந்து 6 மாதம் ஆகிறது. தகவல் சொன்னவர் துபாயில் இருந்து வந்த, முகமது அலி. இவர் தஞ்சை மாவட்டம் வடக்கு மாகுடி நகரைச் சேர்ந்தவர். தஞ்சாவூர் மாவட்டம் அகரமாங்குடி காமராஜ் தம்பதியருக்கு மாத முக்கூட்டு சிகிச்சையில் பெண் குழந்தை பிறந்துள்ளது.

தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், தன்னைவிட வயது முதிர்ந்த பெண்களிடம் தாம்பத்திய உறவு கொண்டாலும் அவர்களால் புத்திர பாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது. அவர்களுக்கு முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்கிறோம்.

### பெண் மலட்டுத் தன்மைக்கான காரணங்கள்:

பெண்களில் கருப்பை ஓவரி வளர்ச்சியே இல்லாமல் இருப்பவர்களுக்கு வளர்ச்சியடைச் செய்கிறோம். வீட்டு விலக்கு ஒழுங்கில்லாதவர்களுக்கு ஒழுங்கு படுத்துகிறோம். சிலருக்கு வீட்டு விலக்கின் போது வரும் சூதக வயிற்றுவலியால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையை முக்கூட்டு மருந்துகளால் நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்கு கருமுட்டை உற்பத்தி இருக்காது. இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருமுட்டை உண்டாக்கி கருவுறச் செய்கிறோம். பெண்களிடமுள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது, அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி கருத்தரிக்க செய்கிறோம்.

திருவண்ணாமலை நகரத்தைச் சேர்ந்த ஒரு தம்பதிக்கு மூன்று மாத மருந்து சாப்பிட்டதில் தற்போது அந்தப் பெண் ஐந்து மாத கர்ப்பவதியாக இருக்கிறார்.

சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, அவர்களுக்கு முக்கூட்டு சிகிச்சையளித்ததில், கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துள்ளது.

பெங்களூரைச் சேர்ந்த ஜி.பி. மோகனவேலு கீதாஞ்சலி தம்பதிக்கு எங்களது முக்கூட்டு சிகிச்சையால் ஆண், பெண் குழந்தைகள் பிறந்துள்ளன. மதுரையைச் சேர்ந்த ஒரு மாவட்ட அரசு அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் இரண்டு மாத சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்து எங்கள் முக்கூட்டு சிகிச்சையினால் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர்பேட்டையில் சந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.

❍ தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் - வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா ஒன்பது மாதம் கர்ப்பமடைந்துள்ளார்.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல் நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு என்றார்'' டாக்டர் அர்ஜுனா. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திரபாக்கியம் அடைய **டாக்டர் ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி **டாக்டர். வி.ஏ.ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா** ஹோமியோபதி - சித்தா - ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம்: எண் 65 நெற்குன்றம் பாதை, (டி.எஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை - 600 026. போன் : 4833464 எஸ்டிடி.044

செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் -

வீடு : நெ. 30, பிராமணர் தெரு, ஈஸ்வரன் கோயில் அருகில், வந்தவாசி.

திருவண்ணாமலை மாவட்டம் - 604 408

புதிய தொலைபேசி எண்கள் 225208, 226180

STD 04183

செஞ்சியைச் சேர்ந்த முருகன் - தமிழரசிக்கு ஒரே மாத முக்கூட்டு மருந்தினால் உயிரணு உற்பத்தி ஆகி, கருக்குழாய் அடைப்பு நீங்கியதால் கடந்த 20.8.02ல் ஆண் குழந்தை (சுகப்பிரசவத்தில்) பிறந்துள்ளது.

எங்களிடம் சிகிச்சைக்காக கல்கத்தாவிலிருந்து வந்த சுரேஷ் - பரணி தம்பதியர் ஒரு மாத மருந்து சாப்பிட்டதில், கடந்த ஜூலை மாதம் திருமதி சுரேஷ் கர்ப்பம் தரித்துள்ளார்.

ADVT

விஷுவல்தாசன்

# என் மன வானில்

**நமக்கோ சிரிப்பதா, அழுவதா, இருக்கையை விட்டு எழுவதா எனக் குழப்பம்.**

**கா**வியக் காதல் தொடங்கி குடலைப் புரட்டும் விடலைக் காதல் வரை, எதையும் விட்டு வைக்கவில்லை தமிழ் சினிமா.

இதை மனத்தில் வைத்து, மலையாளத்திலிருந்து வருகை தந்திருக்கும் இயக்குனர் வினயன், வாய் பேச முடியாத ஊமைகள் காதலிப்பதாகக் கதையைத் தொடங்குகிறார். அடடே! கையசைப்பு, கண் அசைவு, பரஸ்பரம் தவறாகப் புரிந்துகொள்ளுதல் என்று ஊமைக் காதலை கவித்துவம் ததும்பக் காட்டப் போகிறார் என்று எதிர்பார்த்தால் அதில் இடி.

வாழையடி வாழையாக நாம் பார்த்து வெறுத்துப் போன அதே பழைய பஞ்சாங்கமாக, காதலர்கள் ஊரை விட்டு ஓடிப் போக, பின்னாலேயே வில்லன்கள் துரத்திக்கொண்டு ஓடுகிறார்கள். இறுதியில் காதலி மலை முகட்டிலிருந்து விழுந்து தற்கொலை செய்து கொள்ள முயல்கிறாள். அதைத் தடுக்க காதலன் 'பே...பே...' என்று கத்தியபடி பின்னால் ஓடிவர, நமக்கோ சிரிப்பதா, அழுவதா, இருக்கையை விட்டு எழுவதா எனக் குழப்பம். ஏற்கெனவே, கதையில் கண்ணீரின் விழுக்காடு அதிகமிருக்க, நாடோடிக் கும்பல் ஒன்று, அவர்களைக் கொடுமைப் படுத்தும் போலீஸ் என்று அழுகாச்சியின் ஆட்சி படத்தில் அதிகம். ஆனால் கண்களில் சொட்டுக் கண்ணீர் வரக் காணோம்.

தவிர, தமிழ் சினிமா கிட்டத்தட்ட மறந்தே போய்விட்ட பலாத்காரக் காட்சிகளை, சீக்வென்ஸுக்கு ஒன்றாக அமைத்திருக்கும் வக்கிரம் கண்டிக்கத்தக்கது.

ஆக்ஷன் காமெடி என்ற பெயரில் துரத்தல், அடித்தல், பயந்து அலறுதல் என்று சமீபத்தில் பல படங்களில் பார்த்து, போரடித்த அதே காட்சிகள், அதே நடிகர்கள், ஏன் லொகேஷன்களும்கூட அதே...

வடிவேலுவை, கூன் முதுகுக்காரராக அறிமுகப்படுத்தியதும் ஏதோ அவரது பின்னணியில் சோகமும், தன்னம்பிக்கையும் கலந்த ஒரு சூப்பர் நகைச்சுவைப் பாத்திரம் ஒளிந்திருக்கும் என்று நினைத்தால் புஸ்! வடிவேலுவும் அவரது கூட்டணியும் அடிக்கும் வெட்டி வாய் அரட்டை செவி நரம்புகளுக்குக் கேடு. (காரணம்... படுமட்டமான வசனம்!)



வழக்கம் போல பின்னணி இசையில் இளையராஜா பிரமாதப்படுத்தி விடுகிறார்... படத்தில் என்னதான் உருப்படி என்றால், அறிமுக நாயகன் ஜெயசூர்யா நடிப்புதான்.

● ஜஸ்ட் பாஸ்

உப்புப் பெறாத நாட்டு நடப்புக்களைக் கூட பின்னணியாக வைத்து சினிமா எடுப்பதில் முதலிடம் ஹாலிவுட்டுக்கு. அத்திப் பூத்த மாதிரி கோலிவுட்டிலும் இந்த அபூர்வம் நிகழ்வதுண்டு. என்றாலும் எடுத்துக் கொண்ட பின்னணி ஊறுகாய் மாதிரி ஓரங்கட்டப்படும்.

இந்தப் படத்தில் நாவரசுவின் ராகிங் படுகொலை தான் பின்னணி. ஆச்சர்யம்! அதற்குப் போதிய முக்கியத்துவம் கொடுத்து கதை பண்ணி இருக்கிறார் புதிய இயக்குனர் ஜவஹர்.

பிராந்திக் கடைக்கு காந்தியின் பெயர் வைத்தவர்களைக் கண்டித்த குற்றத்திற்காக (?) காவல் நிலையத்தில் அடிவாங்கும் அஹிம்சாவாதியான மாறன், பல படுகொலைகளை, படு காஷுவலாகச் செய்கிறார். ஏன் என்பது தான் சோகக் கதை. கலெக்டர் அலுவலகத்திற்கு, பழைய ஸ்கூட்டரில் வேலைக்குப் போய்வரும் ஓர் எளிய குமாஸ்தாவாக, பாசமும் பொறுப்பும் மிக்க, மிடில்கிளாஸ் குடும்பத் தலைவராக, தோற்றம், நடிப்பு இரண்டிலும், எளிமையும், இயல்புமாய் மிளிர்கிறார் மாறன் சத்தியராஜ்.

இரண்டாவது பாதியில் 'அப்பா' கெட்அப்புகளை உதறிவிட்டு, முண்டா பனியன், மொட்டைத் தலை சகிதம், செயற்கையான பார்வைகளால் மிரட்டியபடி நடித்திருப்பது, அவரது பாத்திரப் படைப்போடு ஒட்டாத சித்திரிப்பு. திரைக்கு மறுபிரவேசம் செய்திருக்கும் சீதா பார்த்திபனுக்கு அமைதியான அம்மா பாத்திரம். மகனின் சடலத்தைப் பார்த்துவிட்டு, கதறி மூர்ச்சையாகும் காட்சியில் கண்களைக் குளமாக்கிவிடுகிறார்.

மாறனின் மகனாக அறிமுகமாகியிருக்கும் மணிவண்ணனின் மகன் ரகுவண்ணன், தமது பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார். அவரது தோற்றமும்கூட பாத்திரத்தோடு கச்சிதமாய்ப் பொருந்திப் போய்விடுகிறது.

மற்றொரு அறிமுகமான ஆல்பர்ட், தமிழ் சினிமா உருவகப்படுத்தி வரும் வழக்கமான கல்லூரி வளாக வில்லன்களை நினைவுபடுத்தினாலும், உடல் மொழியில் இவர் காட்டுகிற வேகமும், நளினமும் 'அட! யார் இந்த ஆள்?' என்று கேட்க வைக்கின்றது.

படத்தின் முடிவில் யாரும் யூகித்து விட முடியாத திருப்பத்தை வைத்திருக்கும் இயக்குனர், இரண்டாவது படத்தில் கமர்ஷியல் அம்சங்களின் விகிதத்தைக் குறைத்துக் கொண்டால் இன்னும் கவனிக்கப்படுவார்.

● அபவ் ஆவரெஜ்



# மாறன்

**மொட்டைத் தலை சகிதம், செயற்கையான பார்வைகளால் மிரட்டியபடி நடித்திருப்பது, அவரது பாத்திரப் படைப்போடு ஒட்டாத சித்திரிப்பு.**

13.10.2002 கல்கி

# சிவகாமியின் சபதம்

பன்னிரண்டாம் அத்தியாயம்

## மூன்று உள்ளங்கள்

காஞ்சி மாநகரின் வடக்குக் கோட்டை வாசல் வழியாக வாதாபிச் சக்கரவர்த்தி அந்நகருக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தபோது, தெற்குக் கோட்டை வாசல் வழியாகக் குமார சக்கரவர்த்தி வெளியேறிக் கொண்டிருந்தார்.

அவருக்கு முன்னால் முப்பதினாயிரம் பல்லவ வீரர்கள் அடங்கிய காலாட்படையும், ஐயாயிரம் போர்க் குதிரைகளும், நூறு போர் யானைகளும் மற்றும் சேனைப் பரிவாரங்களும் நகரிலிருந்து வெளியேறி, கோட்டைக்குச் சற்று தூரத்தில் அணி வகுத்துப் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன.

இடிந்து தகர்ந்து, பாதி தூர்ந்து போயிருந்த அகழியின் மேல், அவசரமாக, அமைத்த பாலத்தின் மீது கண்ணபிரான் ஓட்டிய ரதம் விரைந்து சென்றபோது, அதன் சக்கரங்கள் கடகட சடசடவென்று சப்தம் செய்தன.

ரதத்தில் மாமல்லரும் பரஞ்சோதியும் வீற்றிருந்தார்கள்.

அகழிப் பாலத்தை ரதம் கடந்து அக்கரை சென்றதும், பாலம் அகற்றப்பட்டது. உடனே, கோட்டை வாசல் கதவுகள் தடார் தடார் என்று சாத்தப்பட்டன. அக் கதவுகளின் தாழ்களைப் போடும் 'லொடக்' 'லொடக்' என்ற சப்தமும், பூட்டுக்கள் பூட்டப்படும் 'டடக்', 'டடக்' என்ற சப்தமும், ரதச் சக்கரங்களின் 'கடகட, சடசட' என்ற சப்தத்துடன் கலந்துகொண்டன.

அச் சமயம் அந்த ரதத்தில்

**அமரர் கல்கி**

வீற்றிருந்த மூன்று பேரின் இருதயங்களுங்கூடப் 'படக்' 'படக்' என்று அடித்துக்கொண்டிருந்தன.

மாமல்லர் புறப்படுவதற்கு முன்னால் தமது அன்னை புவனமகாதேவியிடம் விடை பெற்றுக் கொள்வதற்காகச் சென்றார். அப்போது அந்த வீர மாதரசியின் கண்கள் கலங்கியிருந்தன. அவளுடைய உள்ளமும் கலக்கமடைந்திருந்ததாகத் தோன்றியது. துர்விநீதனைத் தண்டிப்பதற்காகப் புள்ளலூர்ப் போர்க்களத்துக்கு மாமல்லர் புறப்பட்ட போது, புவனமகாதேவி இத்தகைய மனக்கலக்கத்தைக் காட்டவில்லை. அச்சமயம் முக மலர்ச்சியுடனும் பெருமிதத்துடனும் வீரமகனை ஆசிர்வதித்து வாழ்த்தி அனுப்பினாள்.

"அம்மா! இது என்ன, ஏன் கலங்குகிறீர்கள்? போர்க்களம் எனக்குப் புதியதா? யுத்தந்தான் புதியதா?" என்று மாமல்லர் கேட்டதற்குச் சக்கரவர்த்தினி, "குழந்தாய்! அதைக் குறித்தெல்லாம் நான் கவலைப்படவில்லை. உன்னுடைய தந்தையின் காரியந்தான் என்னை வருத்துகிறது. தசரதர் செய்ததைக் காட்டிலும் கொடுமையான காரியத்தை உன் தந்தை செய்கிறார். தசரதர் இராமனைக் காட்டுக்கு அனுப்புவதோடு நின்றார். உன் தந்தையோ இராமனைக் காட்டுக்கு அனுப்பி விட்டு, அதே சமயத்தில் இராவணனையும் விருந்தாளியாக வரவேற்கப் போகிறார்!" என்றாள்.

இதைக் கேட்ட மாமல்லரின் முகத்தில் சென்ற சில காலமாகக் காணப் படாத குறுநகை மலர்ந்தது.

"தாயே! நான் இராமன் அல்ல; இராமனாயிருந்தால், சீதையையும் கூட்டிக் கொண்டல்லவா காட்டுக்குப் போக வேண்டும்? என் தந்தையும் தசரதர் இல்லை. ஏனென்றால் கைகேயி வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அவர் என்னை வனத்துக்கு அனுப்பவில்லை. புலிகேசியோ நிச்சயமாக இராவணன் இல்லை. இராவணன் சுத்த வீரன், அம்மா! போர்க்களத்தில் சகலமும் போய்த் தன்னந்தனியாக நின்ற போதும் சரணாகதி அடைய மறுத்து உயிரை விட்டான். அந்த மகாவீரன் எங்கே, இந்தக் கோழைப் புலிகேசி எங்கே? நூறு காத தூரம் படையெடுத்து வந்துவிட்டு யுத்தம் செய்யாமலே அல்லவா இவன் திரும்பிப் போகப் போகிறான்?" என்றார் மாமல்லர்.

'குமாரா! நீ என்னதான் சொன்னாலும் மொத்தத்தில் என் மனத்தில் அமைதியில்லை. பல்லவ குலத்தின் தீரா விரோதியுடன் உன் தந்தை சிநேகம் கொண்டாடுவது எனக்குப் பிடிக்கவில்லை; இந்தச் சமயத்தில் நீ காஞ்சியை விட்டுப் போவதும் எனக்குச் சம்மதமாயில்லை. இதனாலெல்லாம் என்ன விபரீதம் வருமோ என்னவோ என்று என் மனம் சஞ்சலமடைகிறது!" என்றாள் பல்லவ சாம்ராஜ்ய சக்கரவர்த்தினி.

மேற்கண்டவாறு அன்று காலையில் அன்னை கூறிய வார்த்தைகள் மாமல்லருடைய மனத்தில் ஆழமாய்ப் பதிந்து கிடந்தன. இன்னதென்று சொல்ல முடியாத சோர்வு அவருடைய உள்ளத்தில் குடி கொண்டிருந்தது. பெருமுயற்சி செய்து அந்தச் சோர்வைப் போக்கிக் கொள்ள முயன்றார். வரப் போகும் யுத்தத்தையும் பாண்டியனைத் தாக்கி அவனைத் தண்டிக்கப் போவதையும் நினைத்துக்கொண்டார். அதனோடு மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கும் ஆயனர் மகளையும் எண்ணிக் கொண்டார். தாம் போகின்ற மார்க்கத்தை விட்டுக் கொஞ்சம் விலகிச் சென்றால், சிவகாமியைப் பார்த்து விட்டுப் போகலாம். ஆனால், அது உசிதமாகாது என்று அவருடைய

மனமே சொல்லிற்று. புலிகேசியைப் புறங்காட்டி ஓடச் செய்துவிட்டுத் திரும்பி அவளிடம் வருவதாக அல்லவா அன்றைக்குச் சொல்லிக் கொண்டு விடைபெற்றோம்! பாண்டியனையாவது போர்க்களத்தில் புறங்கண்ட பிறகுதான் சிவகாமியைச் சந்திக்க வேண்டும். இவ்வாறான பற்பல எண்ணங்கள் அலை மேல் அலை எறிந்து மாமல்லரின் உள்ளத்தை அலைத்துக் கொண்டிருந்தன.



ளபதி பரஞ்சோதியும் வழக்கத்தைக் காட்டிலும் அதிகக் கடுமையாகத் தம்முடைய முகத்தை வைத்துக் கொண்டிருந்தார். ஒரு பெரிய பொறுப்பு உணர்ச்சியானது அவருடைய மனத்தில் பெரும் பாரமாய் அமர்ந்து அதை அமுக்கிக் கொண்டிருந்தது.

அன்று காலையில் சக்கரவர்த்தி அவரை அந்தரங்கமாக அழைத்து, "தம்பி! உன்னை நம்பித்தான் மாமல்லனை இப்போது போர்க்களத்துக்கு அனுப்புகிறேன். அவனுடைய இப்போதைய மனநிலையில் முன்பின் யோசனையில்லாமல் முரட்டுத்தனமாகக் காரியம் செய்வான். அவனுக்கு யாதோர் அபாயமும் நேரிடாதபடி நீதான் பார்த்துக் கொள்ள வேணும். இந்தப் புராதன பல்லவ குலம் நீடிப்பதற்கு அவன் ஒருவன்தான் இருக்கிறான். தளபதி! பாண்டிய நாட்டு மறவர்கள் மகாவீரர்கள். அவர்களையும் கங்க நாட்டார்கள் என்று நினைத்து விடாதே. எளிதாக அவர்களைப் புறங்காண முடியாது. ஆகையால், சர்வ ஜாக்கிரதையாகவே நீ இந்த யுத்தத்தை நடத்த வேணும்" என்று சொன்னார்.

மீண்டும் அவர், "மாமல்லனை நீ போர்க்களத்தில் வேல்கள் அம்புகளிடமிருந்து மட்டும் காப்பாற்றினால் போதாது" என்று கூறிவிட்டு, மர்மமான புன்னகையுடன், "மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கிறாளே, சிற்பியின் மகள் சிவகாமி, அவளுடைய கண்ணாகிய கூரிய அம்பிலிருந்தும் காப்பாற்ற வேண்டும், தெரிகிறதா? முன் தடவை துர்விநீதனைத் தொடர்ந்து போனபோது ஏற்பட்டதைப் போல் இந்தத் தடவை ஏற்பட்டு விடக் கூடாது. போகும் காரியத்தை முடித்து விட்டு நேரே காஞ்சிக்குத் திரும்பி வந்து சேர வேண்டும்" என்றார்.

பரஞ்சோதி விடைபெற்றுக் கொண்டு புறப்பட யத்தனித்த போது, கடைசியாகச் சக்கரவர்த்தி அவரை மறுபடியும் அருகில் அழைத்து, "தளபதி! நான் மண்டபப்பட்டுக் கிராமத்தைப் பற்றிச் சொன்னது திருவெண்காட்டுக்குப் பொருந்தாது. பாண்டியனைத் துரத்தியடித்த பிறகு உனக்கு விருப்பமாயிருந்தால் திருவெண்காட்டுக்குச் சென்று உன் தாயாரையும் மாமனையும் பார்த்துவிட்டு வா!" என்று அருமையுடன் கூறினார்.

சக்கரவர்த்தி கூறிய ஒவ்வொரு விஷயமும் பரஞ்சோதியின் பொறுப்பு உணர்ச்சியை அதிகப்படுத்துவதாகவே இருந்தது. ஆகா! மகேந்திர பல்லவர் எப்பேர்ப்பட்ட அபூர்வமான மனிதர்! அவருடைய அன்பையும் நம்பிக்கையையும் இவ்வளவு தூரம் பெறுவதற்குத் தான் என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும்! ஆனால் அவ்வளவு அன்புக்கும் நம்பிக்கைக்கும் தான் பாத்திரமாக வேண்டுமே! மாமல்லரைப் பத்திரமாய்க் காஞ்சிக்குக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமே? 'திருவெண்காட்டுக்குப் போய் விட்டு வா!' என்று சக்கரவர்த்தி கூறியது அவருடைய பெருந்தன்மைக்கு உகந்தது. ஆனால், அதற்கு இந்தச் சந்தர்ப்பம் தகுதியானதா? தன்னை இத்தகைய போர்க் கோலத்திலே பார்த்தால், தாயும் மாமனும் என்ன நினைப்பார்கள்? உமையாள் ஏற்கெனவே நாணம் அதிகம் உள்ளவள். தன்னை அணுகுவதற்கே

இப்போது பயப்படுவாளோ என்னவோ? - இவ்வாறெல்லாம் தளபதி பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்.

ரதத்தின் முனையில் அமர்ந்திருந்த கண்ணபிரானுடைய மனக்கண்ணின் முன்னால் அடிக்கடி ஒரு காட்சி வந்து கொண்டிருந்தது.

விடை பெற்றுக் கொள்ள வேண்டிய சமயம் வந்தபோது கண்ணபிரான் தன் எட்டு மாதக் குழந்தையின் முகத்தோடு முகம் வைத்து "போய் வரட்டுமா, கண்ணே!" என்று கொஞ்சினான். அந்தக் குழந்தை அர்த்தம் ஒன்றுமில்லாமலும் அகாரணமாகவும் புன்னகை புரிந்ததுடன் தன் இரண்டு இளந்தளிர்க் கரங்களையும் நீட்டிக் கண்ணபிரானுடைய நீண்ட இரு காதுகளையும் பிடித்துக்கொண்டது. மேற்படி நினைவு வந்தபோதெல்லாம் குழந்தையின் தளிர்க்கரங்கள் அவன் காதைப் பிடித்த இடங்களில் அவனுக்கு என்னவோ செய்தது. மறுபடியும் அந்த மதுரமான ஸ்பரிச இன்பத்தை எப்போது அடையப் போகிறாமோ என்று அவன் மனம் ஏங்கிற்று.

அதோடு கடைசியாக அவன் புறப்பட்டபோது கமலி கூறிய மொழிகளும் அவனுக்கு அடிக்கடி நினைவு வந்து கொண்டிருந்தன. முன்னெல்லாம், "யுத்தத்துக்கு எப்போது புறப்படுகிறாய்?" என்று கேட்டுக் கொண்டிருந்தவள், கண்ணபிரான் உண்மையாகப் புறப்படும் சமயம் வந்தபோது, "கண்ணா, மகேந்திர பல்லவருக்கு இப்படி ஏன் புத்தி கெட்டுப் போய்விட்டது? வாதாபிச் சக்கரவர்த்தியை விருந்தாளியாக வரவேற்பதாம்! பாண்டிய ராஜாவோடு சண்டை போடுவதற்கு மாமல்லரை அனுப்புவதாமே? என் மனம் ஏனோ தத்தளிக்கிறது! கண்ணா! எது எப்படியானாலும் என் தங்கை சிவகாமியை மறந்துவிடாதே! மாமல்லருக்கு நினைவூட்டு!" என்றாள்.


வ்விதமாக, அந்த ரதத்தில் இருந்த மூன்று பேருடைய உள்ளங்களும் வெவ்வேறு சிந்தனைகளில் ஆழ்ந்தபோதிலும் பதைபதைப்பிலும் பரபரப்பிலும் வருங்காலத்தில் என்ன நேருமோ என்ற கவலையிலும் ஒன்றுபட்டிருந்தன. எனவே, அவர்களுடைய இருதயத் துடிப்புகள் ஒரே ஸ்வரத்தில், ஒரே தாளத்தில் சப்தித்தன.

## பதின்மூன்றாம் அத்தியாயம்

# இராஜோபசாரம்

வாதாபிச் சக்கரவர்த்தி காஞ்சிக்கு விஜயம் செய்ததிலிருந்து ஏழு தினங்கள் ஒரே திருவிழாக் கொண்டாட்டமாயிருந்தது.

ஒவ்வொரு நாளும் நகரின் ஒவ்வொரு பகுதிக்கு இரண்டு சக்கரவர்த்திகளும் விஜயம் செய்தார்கள். தினம் ஒரு கோயிலுக்குச் சென்றார்கள். ஒரு நாள் காஞ்சியின் கல்விக் கழகங்களையெல்லாம் பார்வையிட்டார்கள். ஒருநாள் சிற்பக் கலை மண்டபங்களையும் சித்திர சாலைகளையும் பார்த்தார்கள். ஒருநாள் பௌத்த விஹாரங்களுக்கும் இன்னொரு தினம் ஜைனர்களின் கோயில்களுக்கும் சென்றார்கள். ஒருநாள் இரு சக்கரவர்த்திகளும் பட்டத்து யானை மீது



அம்பாரியில் அமர்ந்து நகர் முழுவதும் பவனி வந்தார்கள்.

பழகப் பழக இரண்டு சக்கரவர்த்திகளுக்குள்ளேயும் சிநேகம் முதிர்ந்து வந்ததாகத் தோன்றியது. இந்தச் சிநேகத்தின் பயனாக வருங்காலத்தில் இரண்டு சாம்ராஜ்யங்களும் பெரு நன்மையடைப் போகின்றன என்று மகேந்திர பல்லவர் எதிர்பார்த்ததுடன் அதைப் புலிகேசியிடமும் தெரி

யப்படுத்தினார். தமக்குச் சமண மதத்தினிடமோ புத்த சமயத்தினிடமோ எள்ளளவும் துவேஷம் கிடையாதென்றும், சைவ சமயமானது மற்ற எல்லாச் சமயங்களையும் சம நோக்குடன் பார்க்க இடந் தருகிறதென்றும், அதனால்தான் தாம் சைவ சமயத்தைச் சார்ந்ததாகவும், சமணர்களும் பௌத்தர்களும் அநாவசியமான விரோத பாவம் தம் பேரில் கொண்டிருப்பதாகவும் மகேந்திர பல்லவர் கூறினார். புலிகேசி தமக்கும் தீவிர மதப் பற்றோ, மதத் துவேஷமோ கிடையாதென்றும், இராஜ்ய காரணங்களை முன்னிட்டே சமண முனிவர்களுக்கு அதிகமாக இடங் கொடுத்து வந்ததாகவும் தெரிவித்தார்.

சமய போதனையில் ஈடுபட்ட குருமார்கள் இராஜ்ய விஷயங்களில் தலையிடவே கூடாதென்றும், தலையிடுவதால் அவர்களுக்கும் சமயத்துக்கும் நாட்டுக்குமே தீமைதான் என்றும் மகேந்திரர் கூறினார். அதை வாதாபிச் சக்கரவர்த்தியும் ஒப்புக்கொண்டார்.

மகேந்திர பல்லவர், "உண்மையான சமய பக்தியுள்ள மகான்களாயிருந்தால் இராஜாங்க விஷயங்களில் தலையிடவே மாட்டார்கள்" என்று சொல்லி, திருநாவுக்கரசர் பெருமானுடைய வாழ்க்கை உதாரணத்தை எடுத்துக் காட்டினார். அந்த மகானைத் தாம் பார்க்க முடியுமா என்று புலிகேசி கேட்டதற்கு, "யுத்தக் குழப்பங்களின்போது அந்தப் பெரியார் இங்கே இருக்க வேண்டாம் என்று நானே அவரைத் தீர்த்த யாத்திரைக்கு அனுப்பி விட்டேன். இப்போது எங்கே இருக்கிறார் என்றே தெரியவில்லை" என்று மகேந்திரர் தெரிவித்தார். புலிகேசி அப்போது "பல்லவ நாட்டு மகா சிற்பியைக் கூட நான் பார்க்க முடியாதோ?" என்று கேட்க, மகேந்திர பல்லவர், "யாரைச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார்.

"ஆயனர் என்பவரைத்தான்!" என்றார் புலிகேசி.

"அவரைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று மிக்க வியப்புடன் மகேந்திர பல்லவர் கேட்டார்.

"காட்டின் மத்தியில் உள்ள சிற்ப வீட்டை ஒருநாள் நான் பார்த்தேன். அதனுள் உயிருள்ள பிராணி எதுவும் இல்லை. ஆனால், உயிர்ச் சிலைகள் பல இருந்தன. அதிலும் வெகு வெகு அற்புதமான நடனச் சிலைகள் பல இருந்தன. அப்புறம் விசாரித்தேன். அந்த வீட்டில் ஆயனர் என்னும் மகாசிற்பியும், நாட்டியக் கலையில் வல்ல அவருடைய மகளும் வசித்ததாகவும், கோட்டை முற்றுகை காரணமாக அவர்கள் எங்கேயோ போய் விட்டதாகவும் தெரிந்தது. அவர்கள் தற்போது இருக்குமிடமும் தங்களுக்குத் தெரியாதோ?" என்று வாதாபிச் சக்கரவர்த்தி கேட்டார்.

"அவர்கள் இருக்குமிடமும் தெரியும். அவர்களை அழைத்து வர ஆளும் அனுப்பியிருக்கிறேன். நாளை கூடும் மகா சபைக்கு அவர்கள் வந்தாலும் வருவார்கள்" என்றார் காஞ்சிச் சக்கரவர்த்தி. அதைக் கேட்ட புலிகேசி மிக்க உற்சாகம் அடைந்தவராகக் காணப்பட்டார்.

வாதாபிச் சக்கரவர்த்தி காஞ்சி நகருக்குள் பிரவேசித்த எட்டாம் நாள், அவருக்கு பிரிவுபசாரம் நடத்துவதற்காகக் காஞ்சியின் பிரதான சபா மண்டபத்தில் பெரிய சபை கூடியது.

அந்த மகா சபையில் பல்லவ சாம்ராஜ்யத்தின் மந்திரிகள், அமைச்சர்கள், தனபதிகள், மண்டலத் தலைவர்கள், கோட்டத் தலைவர்கள், நகரத் தலைவர்கள், வர்த்தகச் செல்வர்கள் முதலியோர் வீற்றிருந்தனர். இன்னும் சைவ வைஷ்ணவ சமய குருமார்கள், வடமொழி வித்வான்கள், தமிழ் மொழிப் புலவர்கள், இரு பாஷைகளிலும் கவி பாடத் தெரிந்தவர்கள், சங்கீத வித்வான்கள், சிற்பிகள், சித்திரக்காரர்கள் முதலியோரும் வரிசைக் கிரமமாக வீற்றிருந்தார்கள்.

மேலே கூறப்பட்ட கூட்டத்தாருக்குள் பிரமுகர்கள் வாதாபிச் சக்கரவர்த்திக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்கள். வடமொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்ல புலவர்கள் அந்த

## அருள்வாக்கு

பண விஷயத்தில் பெரும்பாலும் நாம் கணக்காகவே இருக்கிறோம். இதை நமக்கு யாரும் சொல்லித் தர வேண்டியதில்லை. ஒரு வஸ்துவுக்கு அதன் விலையை விட ஒரு பைசா அதிகம் கொடுப்போமா? மாட்டோம். பணத்தில் கணக்காக இருப்பது உண்மை. ஆனாலும் பணத்தைக் கொடுத்துப் பல வஸ்துக்களை வாங்குகிறோமே, அவற்றில்தான் இத்தனை வஸ்துக்கள் நமக்குப் போதும் என்று கணக்காக இருக்க மாட்டேன் என்கிறோம்.



நாம் நிம்மதியாக உயிர் வாழ்வதற்குச் சொற்ப வஸ்துக்கள் போதும். இந்த வஸ்துக்களுக்குத் தேவைப்படும் பணத்தை மட்டுமே நாம் சம்பாதனம் செய்வதென்றால், இப்போது போல் ஆலாய்ப் பறக்கவே வேண்டாம். தேசம் விட்டு, கண்டம் விட்டு, எங்கெங்கோ போய் ஆசாரங்களை விட வேண்டாம். அநாவசியமான வஸ்துக்களுக்காகவே கணக்கில்லாமல் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. அதற்காக ஆத்ம விசாரத்துக்கும் ஈசுவர தியானத்துக்கும் பரோபகாரத்துக்கும் செலவிட வேண்டிய காலத்தை எல்லாமும் கணக்கில்லாமல் விரயம் செய்ய வேண்டியிருக்கிறது. இரண்டு தினுசில் கால விரயம்: முதலில் சம்பாதிப்பதில் கால விரயம், அப்புறம் வேண்டாத வஸ்துக்களைத் தேடித் தேடிப் போவதில் கால விரயம். நிகர விளைவாகவோ ஆத்ம சாந்தியைக் குலைத்துக் கொள்கிறோம். திருப்தியே இல்லாமல் ஆசை வேகத்திலும் பல சந்தர்ப்பங்களில் ஆசை நிறைவேறாத ஏமாற்றத்திலும் மொத்துப்பட்டு அவஸ்தைப்படுகிறோம்.

நாம் உயிர் வாழ இந்த வஸ்து அவசியம் தானா என்று பார்த்துக் கணக்காகச் செலவு செய்வதே உண்மையில் ''கணக்காயிருப்பதாகும்''. வேண்டாத வஸ்துக்களுக்குப் பேரம் பேசி அதற்கு ஒரு பைசாகூட அதிகம் கொடுக்கவில்லை என்பதால் கணக்காயிருந்ததாகாது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

மகத்தான சந்தர்ப்பத்துக்கேற்ற கவிதைகளைப் புனைந்து பாடினார்கள். இரண்டு சக்கரவர்த்திகளில் எவரையும் தாழ்த்தாமலும் ஒருவரையும் அதிகமாக உயர்த்தாமலும் சமமான புகழுரைகளை நிறைத்துப் புலவர்கள் பாடிய கவிகள், அவர்களுடைய கவித்திறத்தைக் காட்டிலும் அவர்களுடைய லௌகிக ஞானத்துக்கே சிறந்த உதாரணங்களாயிருந்தன.

பிறகு, சாம்ராஜ்யத்தின் சங்கீத வித்வான்கள் தங்களுடைய வித்வத்தைக் காட்டினார்கள். மகேந்திர பல்லவரால் புதிதாக அமைக்கப்பட்ட ஏழு நரம்புகள் உடைய 'பரிவாதினி' என்னும் வீணையைப் புலிகேசி பரிசிலனை செய்து மிகவும் மகிழ்ந்தார்.

இவ்வாறு நேரம் போய்க் கொண்டேயிருந்தது. ஆனாலும், மகேந்திர பல்லவர், வாதாபிச் சக்கரவர்த்தி இருவருமே கொஞ்சம் மன அமைதியின்றிப் பரபரப்பு உள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். மகேந்திர பல்லவரின் கண்கள் அடிக்கடி சபா மண்டபத்தின் வெளி வாசற்பக்கத்தை நோக்கிக் கொண்டிருந்தன.

கடைசியாக, அவர் உற்சாகமான குரலில், "அதோ வந்துவிட்டார்கள்!" என்று கூறியபோது, பக்கத்திலிருந்த வாதாபிச் சக்கரவர்த்தி, "யார்? ஆயனரும் அவர் மகளுந்தானே?" என்று வினவினார்.

அப்போது உண்மையாகவே அச்சபா மண்டபத்தின் வெளி வாசல் வழியாக ஆயனரும் சிவகாமியும் உள்ளே பிரவேசித்துக் கொண்டிருந்தார்கள்.

வாசற்படியைத் தாண்டும்போது சிவகாமியின் கால் வாசற்படியில் இடறிற்று. 'ஆஹா, இது என்ன அபசகுனம்?' என்று எண்ணமிட்டுக் கொண்டே சிவகாமி மானின் நடை பெற்ற மயிலைப் போலச் சபா மண்டபத்திற்குள் பிரவேசித்தாள்.

(தொடரும்)

சீதா ரவி **2**

# இந்திய சுட்டியும் மாலத்தீவு அகப்பையும்!

**"டாலரில் சம்பாதிக்கிறோம் என்று சந்தோஷப்படலாம். ஆனால் இங்கே அன்றாட வாழ்க்கை என்பது ரொம்பவும் சலிப்பூட்டுகிறது"**

"கடல் பரப்பு மனிதர்களை இணைக்கிறது. கடந்த காலத்தில், பருவக் காற்று நண்பர்களை எங்களிடம் அழைத்து வந்தது; வியாபாரப் பொருட்களையும் லாபத்தையும் வரவழைத்தது. இன்று... காற்றில் மிதக்கும் ஒலியலைகளும் மின் அலைகளும் கலாசாரத் தூது போகின்றன. இந்திய திரைப்பாடல்கள் மாலத் தீவுகளைக் கொள்ளை கொண்டு விட்டன..."

- இந்திய பிரதமருக்கு அளித்த சிறப்பு விருந்தில் பேசிய மாலத்தீவு அதிபர் கய்யூம், வாஜ்பாயின் கவிதையையும் தமது உரையில் மேற்கோளாக்கினார்:

"எல்லா இதயங்களிலும்
ஒரே கனல்
எல்லா இதழ்களிலும் ஒரே
பாடல்
எல்லா மனங்களிலும்
ஒரே குறிக்கோள்
எல்லா விழிகளிலும் ஒரே
கனவு"

- பிரதமர் அவர்களே! இவை உங்கள் கவிதை வரிகள். இன்று உலகம் முழுதுமே ஒரு வீடு; மானுடத்தை எதிர் நோக்குவது ஒரே எதிர்காலம். அனைவரும் இணைந்து உழைக்க வேண்டியதன் அவசியம் முன்னெப்போதைக் காட்டிலும் இப்போது அதிகமாயிருக்கிறது..."

இந்திய உதவியை மறைமுகமாகக் கோரி இப்படி உணர்வுபூர்வமாகவும் நாசூக்காகவும் கய்யூம் விண்ணப்பிக்க, மாலத் தீவுகளில் நடந்த அயலுறவுத் துறையின் பத்திரிகையாளர் சந்திப்புகளில் புள்ளி விவரங்கள் அள்ளி விடப்பட்டன.

பிரதமரோடு மாலத் தீவு சென்ற பின் பத்திரிகையாளர் சந்திப்பு எதற்கு? பொது நிகழ்ச்சிகளிலும் அதிகாரிகள் மட்டத்திலான பேச்சுவார்த்தைகளிலும் பார்வையாளர்களாகி, பத்திரிகையாளர்கள் செய்தி சேகரித்துக் கொள்ள முடியாதா? என்ற கேள்விகள் எழும்.

முடியாது, முடியாது, முடியாது என்று மூன்று காரணங்



• தலைநகர்: மாலே



• செல்லப் பிள்ளைகள்: தூர்தர்ஷன்



• கிருஷ்ணதேவராயா : ஜெம்போ ஜெட்

• கார்த்திகேயன் அலுவலகத்தில்





• கன்னியாகுமரி ரவி

கள் அளித்தாக வேண்டும்.

முதல் காரணம்: இந்திய நல்லுறவுக் குழு முழுதும் ஒரே தீவில் தங்க வசதி இல்லை. பத்திரிகையாளர்களை பாண்டோஸ் தீவிலும் பிரதமரை குறும்பா தீவிலும் தங்க வைத்துக் குறும்பு செய்து விட்டனர் அதிகாரிகள்! கய்யூம் சொன்னது போல் கடலலைகளால் எங்களை இணைக்க முடியவில்லை; பிரிக்கத்தான் முடிந்தது! அதிகாரபூர்வ மீடியா மட்டும் அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் சென்றுவர அமைச்சக அலுவலர்கள் கவனமாக ஏற்பாடு செய்திருந்தார்கள்.

இரண்டாவது காரணம்: சொந்த முயற்சியில் சென்று வரலாம் என்றால் நமது பிரதமரைக் காட்டிலும் நான்கு மடங்கு பாதுகாப்புக் கெடுபிடி மாலத் தீவு அதிபருக்கு. இந்திய அமைச்சகம் அளித்த அடையாள அட்டையுடன் மாலத் தீவு அரசின் அடையாள அட்டையையும் எப்போதும் அணிந்து செல்ல வேண்டும். அதிகாரபூர்வ அழைப்பிதழின்றி எங்கும் நுழைந்துவிட முடியாது.

மூன்றாவது காரணம்: தீவுகளுக்கிடையேயான படகுப் போக்குவரத்து கடலின் 'மூட்'ஐப் பொருத்தும் இந்திய பிரதமர் பங்கேற்ற நிகழ்ச்சிகளைப் பொருத்தும் மாறி மாறி நிர்ணயமாகிக் கொண்டிருந்தது.

ஆகவே, அயலுறவுத் துறையின் அதிகாரபூர்வ பிரதிநிதியான நிருபமா ராவ் அவ்வப்போது அளித்த குறிப்புகளைச் செய்தியாக்கி, சகல வசதிகளும் கொண்ட மீடியா சென்டரிலிருந்து 'ஏற்றுமதி' செய்தனர் பத்திரிகையாளர்கள்.

**மா**லத் தீவு பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இல்லாவிட்டாலும் பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் இருந்த நாடு. 1965 இல் அது சுதந்திர நாடான போது அதனை முதன் முதலில் அங்கீகரித்த நாடுகளுள் ஒன்று இந்தியா. விரைவிலேயே நமது தூதரகம் அங்கே செயல்பட ஆரம்பித்தது.

1988இல் சில இலங்கைத் தீவிரவாதிகள் அப்துல் கய்யூமின் ஆட்சியைக் கவிழ்த்து நாட்டைக் கைப்பற்ற முயன்ற போது, இரண்டே மணி நேரத்தில் இந்திய விமானப் படை அங்கே சென்றிறங்கி அந்த ஆட்சிக் கவிழ்ப்பை முறியடித்தது. அதன் பிறகு உறவுகள் மேலும் பலப்பட்டன. நாற்பது கோடி ரூபாயில் இந்திரா காந்தி நினைவு மருத்துவமனை, பத்து கோடி ரூபாயில் தொழில்நுட்பக் கல்வி நிலையம் என்று செலவைப் பார்க்காமல் மாலத் தீவுக்கு உதவி வருகிறோம். அண்டை நாட்டுடன் - அதுவும் இலங்கையை அடுத்துள்ள அண்டை நாட்டுடன் நல்லுறவு கொள்வது முக்கியம் என்பது ஒரு காரணம். நம் நாட்டிலிருந்து ஏராளமான பொருள்களை மாலத்தீவு இறக்குமதி செய்கிறது என்பது இன்னொரு காரணம்.

2001 ஆம் ஆண்டு மட்டும்

188.6 கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் இங்கிருந்து மாலத்தீவுக்கு ஏற்றுமதியாகியிருக்கின்றன.

மாலத் தீவு முன்னேற முன்னேற, அங்கே சுற்றுலாப் பயணிகள் செல்வது அதிகரிக்கும்; அயல்நாட்டுப் பயணிகளுக்குத் தேவையான பல்குத்தும் குச்சி முதல் பட்டர்ஸ்காட்ச் ஐஸ்க்ரீம் வரை அத்தனைப் பொருள்களும் அயல்நாடுகளிலிருந்துதான் வந்தாக வேண்டும். எனவே மாலத்தீவுக்கு நமது ஏற்றுமதி இன்னும் அதிகரிக்கும்.

இப்போது புரிகிறதல்லவா; இந்திய சட்டியிலிருந்து மாலத் தீவு அகப்பை கொண்டு ஏன் அள்ள முடிகிறதென்று!

இந்தியாவிலிருந்து மட்டுமின்றி பல்வேறு உலக நாடுகளிலிருந்தும் பொருள்கள் இறக்குமதியாகின்றன மாலத் தீவுக்கு. வெகு சமீபத்தில்தான் எரிவாயு உற்பத்தி தொழிற்சாலை, சிமெண்ட் தொழிற்சாலை, படகு கட்டும் தொழிலகம் போன்றவை ஒரு தொழிலகத் தீவில் நிறுவப்பட்டுள்ளன.

இந்நாடு சுயச்சார்பு பெறுவதற்கு இன்னும் வெகு காலம் ஆகும். பூகோள அமைப்பு காரணமாகவும், இயற்கை வளம் போதாமையாலும், பல விஷயங்களில் சுயச்சார்பு எய்துவது சாத்தியமே இல்லை.

இப்போது மாலத்தீவின் மொத்த மின்சாரத் தேவையும் டீசல் ஜெனரேடரிலிருந்துதான் பெறப் படுகிறது. கழிவுநீர் அகற்றும் தொழில் நுட்பமும், கடல்நீரைக் குடிநீராக மாற்றும் தொழில் நுட்பமும் ஐரோப்பிய நாடுகள் உதவியவை. கடலரிப்பிலிருந்து தீவுக்கரைகளைப் பாதுகாக்கும் தொழில்நுட்பம் ஜப்பான் வழங்கியது. பெரும்பாலான டூரிஸ்ட் ரிஸார்ட்கள் அயல்நாட்டினர் நிறுவி நிர்வகிப்பவை. அவற்றில் முக்கியப் பொறுப்பில் பணி செய்வோர் பிலிபைன்ஸ், இலங்கை, இந்திய இளைஞர்கள்.

பான்டோஸ் ரிசார்ட் சமையலறையில், கன்னியாகுமரி மாவட்டத்து மார்த்தாண்டம் என்ற ஊரிலிருந்து வந்துள்ள இளைஞர் ரவி, பிலிப்பீனோ உணவு சமைக்கிறார்! இந்த விடுதியில் வேலை பார்க்கும் பிலிப்பைன் நாட்டு இளைஞர்களின் வயிற்றை நிரப்ப 250 டாலர் மாதச் சம்பளம் பெறுகிறார் ரவி. நூறு டாலர் கூடுதல் அலவன்ஸ். ரவியின் அப்பாவும் இதே விடுதியில் வேலை பார்ப்பவர்தான்.

சென்னை வலசரவாக்கத்து அகிலா கிருஷ்ணன், கணவர், குழந்தைகளை இந்தியாவில் விட்டுவிட்டு காண்டிராக்ட் போட்டுக் கொண்டு தலைநகர் மாலே வந்துவிட்டார், பள்ளி ஆசிரியராகப் பணியாற்ற. பெரும்பாலான ஆசிரியர்கள், டாக்டர்கள், நர்சுகள், தமிழர்கள் அல்லது மலையாளிகளே!

இந்திய பத்திரிகையாளர்கள் குழுவுக்கென்று மீடியா கன்ட்ரோல் ரூமை நிறுவிய கார்த்திகேயன், 'ஆக்ஸஸ் மால்டீவ்ஸ்' என்ற ஐ.டி நிறுவனத்தின் மானேஜர்.

இவர்கள் எல்லோரும் மகிழ்ச்சியாக இருக்கிறார்களா...?

'டாலரில் சம்பாதிக்கிறோம் என்று சந்தோஷப்படலாம். ஆனால் இங்கே அன்றாட வாழ்க்கை என்பது ரொம்பவும் சலிப்பூட்டுகிறது' என்கிறார்கள் அனேகமாய் எல்லா இந்தியர்களும்.

இந்நாட்டில் உயர்கல்வி வசதி இல்லை என்பதால் குழந்தைகளை அழைத்து வர முடியாது. வேலைக்குப் போகாத பெண்களுக்கு இங்கே பொழுதுபோவது மிகவும் சிரமம். சுர்சிப் அகலமே உள்ள தீவில்தான் சுற்றி வர வேண்டும்.

இஸ்லாமிய நாடு என்பதால் ஹிந்து வழிபாட்டு முறைகளுக்கும் அவற்றையொட்டிய பொது நிகழ்ச்சிகளுக்கும் தடை நிலவுகிறது.

ஆனாலும் இத்தனை இந்தியர்கள் இங்கு பணிக்கு வருவது 'கிட்டேதானே இருக்கிறது' என்ற காரணத்தால். திருவனந்தபுரத்திலிருந்து இரண்டு மணி நேரத்துக்கும் குறைவான விமானப் பயணம்தான் மாலேவுக்கு.

டாலர் வருமானத்தால் ஈர்க்கப்பட்டு நம் நாட்டின் தொழிலாளர்கள் பலர் (குறிப்பாகக் கட்டடத் தொழில்) நமது தூதரகத்துக்குத் தெரிவிக்காமல், முறையான அனுமதியின்றி இங்கே வந்து மாட்டிக்கொண்டு வதைபடும் சோகக் கதைகளும் ஏராளம். காண்ட்ராக்ட் தொழிலாளியாக மாலத் தீவு செல்லுமுன் இந்திய தூதரகத்தை அணுகி விவரங்கள் அறிவது உதவும்.

மாலே பொருளாதாரத்தால் பயனடையும் ஊழியர்கள் 'போர் அடிக்கிறது' என்று அலுத்துக் கொள்ள, மாலே பொருளாதாரத்தை வளப்படுத்தும் மேலை நாட்டுச் சுற்றுலாப்

---

வியாபாரிகள் தங்கள் கடைகளில் லட்சுமி, சரஸ்வதி, சிவன், முருகன் படங்களையும் மற்றும் 'மாடர்ன் ஆர்ட்' படங்களையும் கூட மாட்டி வைக்கலாம். ஆனால் ஒரே ஒரு படம் மட்டும்தான் இருக்கக் கூடாது. அது என்ன? அதுதான் கலப்படம்.

- வாரியார் உரையிலிருந்து:
வயலூர் இராம. பார்த்திபன்

---

பயணிகளோ அலுக்காமல் சலிக்காமல் சமுத்திரக் கரையில் நடந்தும், உருண்டும், புரண்டும் பொழுதைப் போக்குகிறார்கள். கடல்நீருக் கடியில் கடை விரிக்கும் மீனுலகையும் பவழப் பாறைகளையும் காண 'டைவிங்', 'ஸ்னார் கெலிங்' என்று வித்தை பண்ணி மகிழ்கிறார்கள். படகுகளை வாடகைக்கு எடுத்துக் கொண்டு உடல் குலுங்கி எலும்பெல்லாம் கலகலத்துப் போகும்வரை கடலலைகளில் மிதந்து களிக்கிறார்கள். படகுகளுக்குப் பின்னால் மிதக்கும் பலகைகளில் நின்றபடி காற்று முகத்தில் அறைய, நீர்த் திவலைகள் முத்தமிட, சமுத்திர குமாரர்களாகவும் குமாரிகளாகவும் பவனி வருகிறார்கள்.

இத்தனைக்கும் பிறகு உடம்பில் மணலும் உவர்நீரும் சேர்ந்த பிசுக்கைச் சுத்தமாக்கிக் கொள்ள கடற்கரையோரத்திலேயே 'ஷவர்' வசதி இருக்கிறது; தங்கும் அறைகளின் வாசலில் படிக்கட்டையொட்டி மணலப்பிய கால்களைக் கழுவிக் கொள்வதற்கென்று குட்டைக் குழாய்கள் இருக்கின்றன.

அறைகளினுள்ளே இருக்கும் வசதிகள் பற்றியோ கேட்கவே வேண்டாம். படுத்தால் அணைத்துக் கொள்ளும் மெத்தைகள்; கழிவறை, குளியலறைகளின் நம்பமுடியாத சுத்தம்; கண்களை உறுத்தாத எளிய அலங்காரம். கடல் நீரின் நீலத்தைப் பிரதிபலிக்கும் பூத் துவாலைகள், சுவையான சத்தான உணவு என்று ராஜ உபசாரம்தான்.

தண்ணீரைக் கண்டு அஞ்சும் பயந்தாங்கொள்ளிகளும், நீச்சலுடையைக் கண்டு அதைக் காட்டிலும் அதிகமாக அஞ்சும் பந்தாம்பசலிகளும், மாலத் தீவுகளில் செய்யக் கூடியது வெகு குறைவு என்றுதான் முதலில் தோன்றும். இத்தகைய 'வேஸ்ட்' பிரகிருதிகள் சுத்தமான கடற்கரை மணலில் கால் புதைய புதைய நடக்கலாம். வெயில் காய்கிறபோது நீலப்பாவாடை அணிந்த குழந்தை போல் தவழ்ந்து வரும் அலைகள், கருத்த மழை மேகங்கள் சூழ்கிறபோது காதலில் நிரம்பிய பெண்ணின் இதயம்போல் குமுறி, ததும்பி, ஆர்ப்பரித்து, பெருமூச்செறிந்து, பரிதவிப்பதைக் கண்டு கண்டு வியக்கலாம்.

அதிகாலை நேரத்தில், 'மூலைக்கடலை, வானவளையம் முத்தமிட்டுத் தழுவி முகிழ்த்தல்' காணலாம். 'நீல நெக்கிடையில் நெஞ்சு செலுத்தி, நேரம் கழிவதறியாமல் சாலப் பலப் பல நற் பகற்கனவுகளில், மூழ்கலாம். பாரதியாரையும் கல்கியையும் ஷெல்லியையும் துணைக்கு அழைத்து வைத்துக்கொண்டு அசை போடலாம். 'அலை ஓயாதோ?' என்றும் 'அலை கடலும் ஓய்ந்திருக்க அகக்கடல்தான் பொங்குவதேன்' என்றும் பாடித் தீர்க்கலாம். கர்ண கொடூரமாகப் பாடினாலும் யாரும் காதைப் பொத்திக் கொண்டு ஓடிவிட முடியாது. எங்கே ஓடினாலும் கடைசியில் சமுத்திரத்திலேதானே போய் விழ வேண்டும்!

நமது பாட்டோடு போட்டி போடும் சுவாரஸ்யமான பறவைகளின் கானமும், அலையின் ஓசையும், காற்று வேகமாக வீசும் போது எழும் அதன் சோகப் பெருமூச்சும், இதயத்தில் களிப்பும் கனிவும் கலக்கமும் மாறி மாறி ஏற்படுத்துகிற புதுமையான அனுபவத்தை ரசிக்கலாம். மரக்கிளைகளில் அண்ணாந்து பார்க்க, குந்துமணி நிறத்தில் பிரகாசமான கரும்புள்ளிகளுடன் கிளிகள் அமர்ந்து மஞ்சள் மூக்குகளை உரசிக் கொஞ்சும் சிருங்காரத்தைக் கண்டு ரசிக்கலாம். மாலை இருள் கவியக் கவிய, வெண்மணல் பரப்பையொட்டி வளர்ந்துள்ள பன்னீர் மரங்களின் முத்து முத்தான மொட்டுகள், இதழ் விரித்து மிருதுவான சுகந்தத்தைக் காற்றில் தவழ விடுவதை முகர்ந்து கொண்டே நடக்கலாம்.

வெண்ணிலவின் வெள்ளிக் கிரணங்கள் கருநீல கடல்பரப்பில் களிவோடு ஒளிபொழிவதைக் கண்டு வியக்கலாம்.

*"தன்னையறிந்தின்புற வெண்ணிலாவே*
*- ஒரு*
*தந்திரம் நீ சொல்ல வேண்டும்*
*வெண்ணிலாவே"*

என்று ராமலிங்க சுவாமிகள் பாடிச் சென்ற வெண்ணிலாக்கன்னியை எண்ணி, கண் பனிக்கலாம்.

இந்தத் தீவுகளும் அலை வழங்கும் விடுமுறை களிப்பும், அதற்கான ஆயத்தங்களில் நிகழும் மனிதப் பரிமாற்றங்களும் கால, தேச, எல்லைகளைத் தகர்த்தும், வென்றும் நிற்கின்ற அழகை முழுமையாய் அனுபவிக்கலாம்.

அந்த நினைவுகளை வண்டி வண்டியாய் அள்ளிக்கொண்டு வீடு திரும்பலாம். மாலத் தீவுகளில் வாங்கக்கூடிய மிகச் சிறந்த நினைவுப் பரிசு இதுதான்.

படங்கள்: சீதா ரவி

(முற்றும்)

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்றுமில்லை

"என் பஞ்ச பிராணனும் பாண்டவர்கள்தான். நீ நேரிடையாய் என்னை துவேஷித்தால் என்ன!"

10

ஸ்வாதி நக்ஷத்திரத்திலே தன் பெண்ணைக் கல்யாணம் பண்ணி, கன்னிகா தானம் பண்ணிக் கொடுத்தால் ரொம்ப விசேஷமான பலன். ஒவ்வொரு தந்தையும் அதற்கு விரும்பிப் பிரார்த்திக்க வேண்டும்.

ஸ்வாதி அன்றைக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தால் பிறந்தகத்தையே மறந்து போய்விடுவாளாம் அந்தப் பெண். ஏன் மறந்துபோய்விடுவாள் என்றால், அவ்வளவு போக – பாக்கியங்களைப் புக்ககத்திலே பெற்று, சீரும் சிறப்புமாக அவள் இருப்பாளாம். ஒரு குறையும் அவளுக்கு ஏற்படாது.

ஸ்வாதி நக்ஷத்திரத்தன்று மழைத்துளி முத்துச் சிப்பியிலே விழுந்தால் முத்து உண்டாகிறது. ஜோதிட சாஸ்திர ரீதியாகவும், வேத ரீதியாகவும், ஸ்வாதி நக்ஷத்திர பெருமைகளைச் சொல்லி முடியாது.

எங்கு பார்த்தாலும் இந்த நக்ஷத்திரத்துக்குப் பெருமைதான். கெட்ட யோகங்கள் எதுவுமே கிடையாது. உத்தமமான நல்ல நக்ஷத்திரம் ஸ்வாதி.

ஸ்வாதி நக்ஷத்திரத்துக்கு அதிஷ்டான தேவதையாய் வாயு பகவான் இருக்கிறான்.

அந்த வாயுதேவதாத்மகமான மந்திரத்தைப் பற்றித்தான் சொல்லிக் கொண்டிருந்தேன்.

நரசிம்ஹனுடைய உயர்ந்ததான தன்மை, அவன் பலம் எங்கே இருக்கிறது? விஷ்ணுவினுடைய பலம் எங்கே என்று கேட்டு, வேதமே பதில் சொல்கிறது:

வாதா!

காற்றிலேதான் அவன் பலம் அமைந்திருக்கிறது.

மாதரிஷ்வா என்று பெயர் காற்றுக்கு.

மாதரி என்றால் ஆகாசம். ஆகாசத்திலே சஞ்சாரம் பண்ணுவதாலே காற்றுக்கு மாதரிஷ்வா என்று பெயர்.

அந்தக் காற்றினிடத்திலே – வாயுவினிடத்திலே – எம்பெருமான் வாஸம் பண்ணுகிறான்.

சூரியனிடத்திலே அவன் இருக்கிறான் என்று சொன்னேன். வாயுவிலே_ காற்றிலேயும் இருக்கிறான்.

அடுத்து, யக்ஞம் நடக்கிறது பாருங்கள்... அங்கேயும் அவனே இருக்கிறான்.

யக்ஞ வேதி, அந்தர் வேதி, பகிர் வேதி என்று சொல்லுவார்கள்.

ஆந்திர தேசத்திலே பார்த்தால் கோனசீமா என்று ஓர் இடம் – அது ஒரு மூலையிலே இருக்கிறது. கிழக்கு கோதாவரி மாவட்டத்திலே, உயர்ந்த கோதாவரி நதி வந்து சமுத்திரத்திலே சேர்கிற அந்த டெல்டா பிரதேசம் ரொம்ப அழகாக இருக்கும். ஐந்து



விதமாகப் பிரிந்திருக்கும் அந்த இடம், ரொம்பச் செழிப்பான இடம். தென்னந்தோப்புகளும், வாழை மரங்களும், உயர்ந்த ரீதியில் அங்கே இருக்கிற வீடுகளும் வாய்க்கால்களும் பார்த்தால், கேரளாவுக்கு வந்துவிட்டோமா? என்று தோன்றும். ஆந்திரத்திலே கேரளம் அது! அங்கே, சமுத்திரத்தைக் காட்டிலும் தாழ்ந்த நிலையிலே 'அந்தர் வேதி' என்கிற க்ஷேத்திரம். அங்கே எம்பெருமான் லக்ஷ்மிநரசிம்ஹன் ஆஸ்சர்யமாய் எழுந்தருளியிருக்கிறார்.

108 நரசிம்ஹ யக்ஞத்திலே 98வது யக்ஞம் அந்த க்ஷேத்திரத்திலேதான் நடந்தது. அப்படிப்பட்ட உயர்ந்த இடம் அது. அந்தர் வேதி என்று அதற்குப் பெயர்.

அந்தர்வேதி என்பது யக்ஞ வாடிகைக்கு உள்ளே இருக்கிற இடம்.

பகிர்வேதி என்றால் யக்ஞவாடிகைக்கு வெளிப் புறம்.

அந்தர்வேதியிலே உத்தர வேதி என்பது வடக்குப் பக்கமாய் இருக்கிறது. அந்த உத்தர வேதியிலே வந்து தோன்றினான் பகவான்.

'உதித்து வேதிக்குள்ளே உதித்தார் வந்தார். உம்பர் தரும் கழலுடையார் வந்தார் தாமே' என்றார் ஆழ்வார்!

அந்தர் வேதியிலே நரசிம்ஹன் தோன்றினான். பகிர் வேதியிலே பகவான் விஷ்ணு காட்சியளிக்கிறான்.

அந்தர்வேதியிலே ரித்விக்குகள் எல்லாரும் உட்கார்ந்து கொண்டு யக்ஞம் பண்ணுகிறார்கள். போய் நாம் பார்க்கிறோம். பார்த்தால், பகவத் ஸ்வரூபம் அமூர்த்தமாகக் காட்சி தருகிறது.

அமூர்த்தம் என்று ஏன் பெயர்?

மூர்த்தம், அமூர்த்தம் –

பகவான் மூர்த்தமாகவும் இருக்கிறான்; அமூர்த்தமாகவும் இருக்கிறான். கோயிலில் போனால் விக்ரஹ ரூபியாய் – மூர்த்தமாக – வடிவோடு காட்சி தருகிறான்.

யக்ஞத்திலே மூர்த்தி கிடையாது; வடிவம் கிடையாது. ஆனால், அக்னி ஸ்வரூபமாய், சுற்றிலும் போடப்படும் தர்ப்பமாய், அந்த ஸ்வாஹா சப்தமாய், எல்லாமாகவுமாய் காட்சி தருகிறான் பரமாத்மா.

அதனால்தான் யக்ஞமே அவன் என்று சொன்னது.

யக்ஞசாதன: யக்ஞாந்தக்ருத: என்று சஹஸ்ரநாமத்திலே பின்னாலே வரப்போகிறது.

யக்ஞத்திலே ஹவிஸை ஸ்வீகரிக்கிறவன் அவன். யக்ஞபலப்ரதன் அவன். யக்ஞமே அவன்; யக்ஞ தேவதைகளாய் வந்து, ஹவிஸை ஸ்வீகரிக்கிறவன் அவன், ஹவிஸும் அவன், ரித்விக்குகள் அவன், ஹோமகுண்டம் அவன், எல்லாமே அவன்தான்!

அந்தர் வேதியிலே எம்பெருமான் வாசம் பண்ணுகிறான்; யக்ஞத்திலே பகவான் இருக்கிறான். என்று காட்டித் தரப்படுகிறது.

கிருஹத்துக்கு வரக்கூடிய அதிதிகளிடத்திலே எம்பெருமான் இருக்கிறான்.

அதனால்தான், எம்பெருமானை வேதம் சொல்கிறபோது, மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ, ஆசார்ய தேவோ பவ; அதிதி தேவோ பவ! என்கிறது.

மாதா, பிதா, ஆசார்யனைச் சொல்லி, உடனே அதிதியையும் சொல்கிறது.

அதிதியை, தெய்வமாக நீ நினைக்க வேண்டும். ஏனென்றால் பகவானேதான் அதிதியாய் வருவான் – 'நமக்கு இவன் அன்னமிடுகிறானா இல்லையா?' என்று பார்க்க வருவான். ஆகையினாலே, அதிதிகளாய் வரக்கூடியவர்களை உடனே வரவேற்று உபசரிக்க வேண்டும்.

விருந்தோம்பல் என்று சொல்லி, தாமாக நம் கிருஹத்துக்கு வரக்கூடிய அதிதிகளை உபசரிக்க வேண்டும். அவர்கள் நமக்கு அனுக்கிரஹம் பண்ணுவதற்காகவே வருகிறார்கள்.

மகான்களுக்கு அன்னமிட்டால், அவர்கள் சாப்பிட்டுச் சென்ற சேஷம் இருக்கிறது பாருங்கள்... மிச்சப்படுகிற அன்னம் – அந்த அன்னம், அவர்கள் உண்ட சேஷமாகிறது. அதைச் சாப்பிட்டால் சத்வ குணம் தலைவிரித்தாடும். உயர்ந்த ரீதியிலே, சாத்விக ஆகாரம் எதுவென்றால் பாகவத சேஷம் தான், அதை சாத்விக ஆகாரம் என்று ஆசார்யர்கள் சொல்கிறார்கள். அதைத்தான் பகவானும் துரியோதனனிடத்திலே சொல்கிறான்.

"பீஷ்ம துரோணாதிகளெல்லாம் உனக்காகக் காத்திருக்கிறபோது, என் போன்ற சக்கரவர்த்திகளெல்லாம் இருக்கிறபோது. என்னை விட்டு விட்டுப்போய் விதுரர் கிருஹத்திலே சாப்பிட்டாயா நீ! உன்னுடைய சாமான்ய புத்தி இதிலிருந்து தெரிகிறது!" என்றான் துரியோதனன், பகவானை நோக்கி.

அதற்கு பகவான் பதில் சொல்கிறான்:

'சுத்தம் பாகவதான்னம்
சுத்தம் பாகீரதிஜலம்
சுத்தம் விஷ்ணுபத தியானம்
சுத்தம் ஏகாதசி விரதம்' என்றான்.

ஏகாதசி விரதத்தைக் கடைசியிலேதான் சொன்னான்! எப்போதும் உயர்ந்த விஷயத்தைத்தான் முதலிலே சொல்லுவார்கள். இங்கே முதலில் சொன்னது 'சுத்தம்' பாகவதான்னம் என்பதைத்தான்.

பாகவதோத்தமர்களின் கிருஹத்திலே சாப்பிடுவது ரொம்ப விசேஷம். பாகவதோத்தமர்கள் நம் கிருஹத்துக்கு வந்தால், அவர்களுக்கு அன்னமிட்ட பிறகு நாம் சாப்பிடுவது, அவர்கள் கிருஹத்திலே அவர்கள் அன்னமிட்டால், அவர்கள் உண்ட பிற்பாடு சாப்பிடுவது...

அதனால்தான் பகவான் இன்னொரு வார்த்தையும் சொன்னான் துரியோதனனிடத்திலே:

எம்பெருமான், சர்வலோகத்துக்கும் சக்கரவர்த்தி அவன். சேஷ பர்யங்கத்திலே சர்வ லோகத்துக்கும் அரசனான எம்பெருமான் விஷ்ணு உட்கார்ந்திருக்கிறான். நித்ய யுவா – எப்போதும் மாறாத இளமை பொருந்தியவன் அவன் என்பதை உபநிஷத் நமக்குக் காட்டுகிறது. அவன்தான் ராஜா.

---

"பையன் E.N.T. ஸ்பெஷலிஸ்டாம். காது, மூக்கு, தொண்டையில எந்தக் குறையும் இருக்கக் கூடாதுன்னு நினைக்கிறார்..."

"அதான் வைரத்தோடு, வைரமூக்குத்தி, வைர நெக்லஸ் போடறோம்னு சொல்லிட்டேனே சார்...!"

– சீர்காழி வி. ரேவதி

அப்படிப்பட்ட ராஜாதி ராஜன், துரியோதனனை "ஹே ராஜன்!" என்று அழைத்துப் பேசுகிறான். ராஜாவே இல்லாதவனை ராஜா என்று அழைக்கிறான்! அதனால் அவன் கொஞ்ச நேரம் சந்தோஷம் அடைந்தால் அடையட்டுமே என்றுதான் அப்படி அழைக்கிறான்!

'துரியோதனா!' என்று கூப்பிடாமல் 'ஹே ராஜன்!' என்று அழைத்து அவன் என்ன சொல்கிறான்...?

"எனக்கு நேரடியாய் உன்னிடத்திலே விரோதம் இல்லையென்றாலும் விரோதிகளுடைய கிருஹத்திலே போய்ச் சாப்பிடக் கூடாது. அவர்களை அழைத்து வந்து நம் கிருஹத்திலே அன்னமிடக் கூடாது... இப்போது நீ எனக்கு விரோதியா...? இல்லை!... ஆனால் அந்த பாண்டவர்களை நீ துவேஷிக்கிறாய். என் பஞ்ச பிராணனும் பாண்டவர்கள்தான். நீ நேரிடையாய் என்னை துவேஷித்தால் என்ன, என் பக்தர்களை துவேஷித்தால் என்ன! என்னை நேரடியாய் துவேஷிப்பதைக் காட்டிலும் என் பக்தர்களை துவேஷிப்பது பரம துவேஷம். அதனால் உன் வீட்டிலே நான் சாப்பிடுவதற்கில்லை" என்றான்.

கெட்ட கிருஹத்திலே போய்ச் சாப்பிட்டால் கெட்ட புத்திதான் வரும். ஒரு கிருஹத்திலே ஒருத்தரைக் கூட்டிக்கொண்டு வந்தார் சாப்பிடுவதற்கு... நன்றாகச் சாப்பிட்டார் அவர். சாப்பிட்ட பிறகு கையலம்ப வெள்ளிச் சொம்பைக் கொடுத்தார்கள்.

இவருக்கு வெற்றிலை – பாக்கு தக்ஷிணையெல்லாம் கொடுக்க வேண்டுமென்று வீட்டையுடையவர் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார். ஆனால், கையலம்பப் போனவர் வரவேயில்லை!

அரை மணி காத்திருந்து பார்த்தவர், கையலம்புவதற்கு இத்தனை நாழியா ஆகும் என்று யோசித்தபடி வாசலில் போய் நின்றார்.

அதற்குள் வாசலில் ஒருத்தர் ஓடி வந்து இவரிடம் கேட்டார்:

"சுவாமி! உங்கள் கிருஹத்திலே என்ன விசேஷம்?"

"ஒன்றும் இல்லையே..."

"இல்லை; கோதானம் பண்ணியிருக்கிறீரே, என்ன விசேஷம் என்று கேட்டேன்."

"கோதானமா...?"

"ஆமாம், ஒருத்தர், கையில் வெள்ளிச் சொம்போடு, உங்கள் பசுவையும் கன்றுக் குட்டியையும் பிடித்துக் கொண்டு ஏரிக்கரை மேலே போவதைப் பார்த்தேனே... உங்கள் பசுதானே அது?..."

உடனே நான்கு பேரை அழைத்துக் கொண்டு ஓடிப்போய்ப் பார்த்தால் கையிலே வெள்ளிச் சொம்பை வைத்துக் கொண்டு, கன்றுக்குட்டியும் பசுவுமாய் ஏரிக்கரைமேலே போய்க் கொண்டிருக்கிறார் அவர்!

கையும் களவுமாய் அவரைப் பிடித்துக் கேட்டார்கள். "அன்னமிட்ட வீட்டுக்கே இப்படிப் பண்ணுகிற அளவுக்குத் தப்பான எண்ணமா உனக்கு! இது என்ன அக்கிரமம்?" என்று கேட்டார்கள்.

கேட்டதும் அவர் 'ஓ' என்று அழ ஆரம்பித்து விட்டார்.

"எங்கள் ஊரிலே, எங்கள் கிருஹத்திலே வந்து என்னைப் பற்றிக் கேளுங்கள். இது வரைக்கும் ஒரு தப்பும் நான் பண்ணியதில்லை. இன்றைக்குத் தான் இந்தத் தப்பைப் பண்ணியிருக்கிறேன். ஒரு நாள், ஒரு வேளை உங்கள் கிருஹத்தில் சாப்பிட்டதற்கே, வெள்ளிச் சொம்பைத் திருட வேண்டும் என்று புத்தி ஏற்பட்டுப்போச்சு. இன்னும் நாலு நாள் சாப்பிட்டிருந்தால் என்னென்ன பண்ணுவேனோ" என்றார்!

ஆகையினால், பெரியவர்கள் கண்ட இடத்திலே சாப்பிடமாட்டார்கள். அப்படி அவர்கள் சாப்பிடாததற்கு நாம் தோஷம் சொல்லவும் கூடாது. பரான்ன நியாயம் என்பது ரொம்ப முக்கியம்.

பரமயோக்யதை உள்ளவர்கள் எல்லா இடங்களிலேயும் சாப்பிடமாட்டார்கள். ஆதலால் நம் கிருஹத்திலே அத்தகையவர்கள் சாப்பிட வந்தால் அவ்வாறு அவர்கள் வருவதே பெரிய பாக்கியம் என்கிறது வேதம். அந்த அதிதி ரூபத்தில் பகவான் எம்பெருமானே நம் கிருஹத்துக்குள்ளே வருகிறான் என்கிறது.

(வளரும்)



அஸ்வின்

# அம்மா தபசு

“இனி இது உங்க நிலம். உங்க உரிமை. இதுல வேற யாரும் அத்துமீற உரிமையில்லை. நிலத்துல இறங்குங்கம்மா...”

திண்டுக்கல் பஸ் நிலையத்தில் புறப்படத் தயாராக இருந்த கரூர் பஸ்ஸில் அம்மாவும் நானும் ஏறி அமர்ந்தோம். பஸ் மெதுவாக ஊர்ந்தபடி நகரை விட்டு வெளியே வந்தபின் வேகம் பிடித்தது. ஜன்னல் வழியாகக் காற்று முகத்தில் படபடவென அடித்துக் கொண்டு வர, பயணம் சுகமாக இருந்தது.

அம்மா அமைதியாக வந்தது, எனக்கு ஒரு மாதிரி இருந்தது. நானே அம்மாவிடம் பேச்சைத் துவக்கினேன்.

“ஏம்மா, நாம நாட்ராம்பள்ளியில எங்க தங்கறது?” எனக் கேட்க, ஜன்னல் பக்கம் வேடிக்கை பார்த்தபடி வந்த அம்மா என்னைப் பார்த்து, “வேற எங்க, உன் மாமா வீட்டுலதான்” எனச் சொல்லிவிட்டு மீண்டும் ஜன்னல் பக்கம் பார்க்கத் துவங்கிவிட்டாள்.

நான் மீண்டும், “என்ன, மாமா வீட்டுலயா, அங்க ஏன் தங்கணும்?” எனக் கேட்க, “எல்லாம் காரணமாத்தான். கொஞ்சம் பேசாம வா கப்பு” என அம்மா திரும்பாமலேயே சொல்லவும் நான் அமைதியானேன்.

அம்மாவின் நிலம் நாட்ராம்பள்ளியில் இருந்தது. எங்கள் குடும்பம் திண்டுக்கல் ஆர்.எம். காலனியில் இருந்தது. அந்த நிலம் அம்மாவின் பூர்வீகச் சொத்து. அப்பா, இங்கு ஒரு லாக்கர் கம்பெனியில் மேனேஜராக வேலை பார்த்து வருவதால், எங்களால் அடிக்கடி நிலத்தைப் பார்க்கப் போக முடியாமல் போனது. அம்மாவோ அந்த நிலம் எந்தச் சூழலிலும் விற்கப்படாமல் பரம்பரையாக இருந்து வர வேண்டும், என உறுதியாக இருந்தாள். அதனால் மாமா அந்த நிலத்தைத் தன் பொறுப்பில் பார்த்துக் கொண்டு, அவரால் முடிந்த அளவு நெல்லை, வீட்டுக்கு, ராவுத்தர் லாரியில் அனுப்பிக் கொண்டு இருந்தார். ராவுத்தர் லாரி, அடிக்கடி வாழைக்காய்லோடு அடிக்கப் போகும். குறைந்த வாடகையில் அங்கிருந்து நெல்லைக்கொண்டு வந்து வீட்டு வாசலிலேயே இறக்கிவிட்டுப் போவார். திடீரென நெல் வரத்து நின்றது. அப்பா ராவுத்தரிடம் என்னவென விசாரிக்க, விஷயம் அம்பலமானது. மாமா தமது கடன் பிரச்னைக்காக நிலத்தை விற்றுவிட்டார் என்று. உடனே அப்பா, அம்மா, நான் எல்லோரும் நாட்ராம்பள்ளி போனோம். அப்பாகூட அவ்வளவா சண்டை ஏதும்



போடவில்லை. ஆனால் அம்மா மாமாவிடமும், அத்தையிடமும் சண்டை போட்டதைப் பார்த்த நான், அம்மாவுக்கு இப்படிச் சண்டையெல்லாம் போட வருமா என அதிர்ச்சியுடன் பார்த்தேன்.

அப்போது எனக்கு பன்னிரண்டு வயசு இருக்கும். மாமாவிடம் பணம் கொடுத்து நிலத்தைக் கைப்பற்றியவன், நிலத்தை காலி செய்யமாட்டேன் எனத் தகராறு செய்ய, விவகாரம் கோர்ட்டுக்குப் போனது. அம்மா கோர்ட், கேஸ் என அலைய ஆரம்பித்தாள். ஒரு சில தடவை நானும் அம்மாவுடன் கோர்ட்டுக்குப் போயிருக்கிறேன். விவரம் அவ்வளவாகத் தெரியாத வயதில் அதெல்லாம் எனக்கு ரொம்ப ஜாலியாக இருக்கும். கோர்ட் வாசலில், கடையில் அம்மா எனக்கு சர்பத், ஐஸ் எல்லாம் வாங்கிக் கொடுப்பாள். ஓட்டலில் நெய்ரோஸ்ட் வாங்கிக் கொடுப்பாள். ஆனால் அம்மா வெறும் காபி மட்டும் குடிப்பாள். எனக்கு விபரம் தெரிய ஆரம்பித்த போதுதான் அம்மாவின் அவஸ்தைகள் புரியத் தொடங்கின. இப்படிச் சிரமப்பட்டு, கோர்ட் தீர்ப்பு வந்து 'அம்மாவோட நிலம் அம்மாவிடம் ஒப்படைக்கணும்' எனத் தீர்ப்பு வர ஏழு வருடம் ஆனது. இதுக்கு ஆன செலவுக்கு நிலமே வாங்கி இருக்கலாம். ஆனால் அம்மாவுக்காக அப்பா, கடன் வாங்கி கேஸ் நடத்தினார். இப்ப நிலத்தை ஆர்ஜிதம் செய்ய, அமீனா மூலம் பொசஷன் எடுக்கத் தான் போய்க்கிட்டு இருக்கோம்.

பஸ் அமராவதி பாலத்தைக் கடந்து ஊருக்குள் நுழைந்தது. எனக்கும் பழைய நினைவுகளில் இருந்து விடுவிப்பு ஆனது.

இத்தனை வருஷத்துல ஊரு ஓரளவு மாறித்தான் இருந்தது. பஸ் ஸ்டாப்பில் கீற்றுக் கொட்டகையில் இருந்த கவுண்டர் டீக்கடை, காங்கிரீட் கட்டட ஓட்டலாகியிருந்தது. ஊருக்குள் நிறைய டீ.வி.எஸ்.50களும், பைக்குகளும் பார்க்க ஆச்சரியமாக இருந்தது. ஏனென்றால், முன்பெல்லாம் சைக்கிளே அதிசயம்தான்.

மாமா வீட்டுக்குள் நுழைந்தோம். அவர்கள் வீடு

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை - 6

மட்டும் எந்த மாற்றமும் இல்லாமல் அப்படியே இருந்தது. மாமா எந்த விகல்பமும் இல்லாமல் "அடடே, வா தங்கச்சி. எப்படி இருக்கே? ஊருலே மச்சான் எப்படி இருக்கார்'' எனக் கேட்டுவிட்டு, என்னைப் பார்த்து "என்ன மாப்ளே சுப்பு, இப்ப என்ன படிக்கிறே?'' என்றார். நான், "பி.எஸ்சி. அக்ரி படிக்கிறேன்" என்றேன். எங்கள் பேச்சு சப்தம் கேட்டு, வீட்டுக்குள் இருந்து அத்தை வந்தாங்க. "வாங்க மதினி'' என அத்தை சொல்ல, அம்மாவும் "ம் வர்றேன்'' என ஒற்றை வரி பதில் சொன்னாள்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் சிறுவனாக இருந்தபோது நிலத்துக்காக அம்மா, மாமாவிடமும் அத்தையிடமும் போட்ட சண்டை நினைவுக்கு வந்தது. அப்போது சண்டை போட்ட அம்மா, இப்போது ஏன் இங்கேயே வந்து தங்க வேண்டும் என்று எனக்குக் குழப்பம்.

அத்தை பரக்கப் பரக்க சமையல் செய்து எங்களுக்குப் பரிமாறினார். சாப்பிட்டதும் மாமாவே அம்மாவிடம், "காலையிலேயே தலையாரி வந்துட்டுப் போனான். வி.ஏ.ஓ. கிட்ட சொல்லி ரெடியா இருக்கச் சொல்லு அப்படீன்னுருக்கேன். ரெங்கனை அமீனாவோட ஆபீஸுக்குப் போய் கையோட கூட்டியாரச் சொல்லியிருக்கேன். இப்ப வந்துடுவான்'' என்றார். எனக்குப் புரியவில்லை. நாங்கள் வருவது எப்படி இவருக்குத் தெரியும்? "மச்சான் நேத்து ராத்திரியே போன்ல எல்லாம் சொன்னார்" என அவர் சொல்லவும் புரிந்தது.

அமீனா வந்து நிலத்தைப் பார்வையிட, சர்வேயர் நிலத்தை அளந்து சொல்ல, வி.ஏ.ஓ. ரிகார்டை சரி பார்க்கவும், பின் பேப்பரில் ஸ்டேட்மெண்ட் எழுதி வாங்கிக் கொண்டு அமீனா, "இனி இது உங்க நிலம். உங்க உரிமை. இதுல வேற யாரும் அத்துமீற உரிமையில்லை. நிலத்துல இறங்குங்கம்மா" என சொல்ல, அம்மா என் கையைப் பிடித்துக் கொண்டு வரப்பில் இருந்து வயலில் கால் பதித்தாள். அம்மா முகத்தைப் பார்த்தேன். முகத்தில் புத்துணர்ச்சியும், தெளிவும், மகிழ்ச்சியும் தெரிந்தது. குனிந்து ஒரு பிடி மண் எடுத்து, சேலையில் முடிந்து கொண்டு வரப்பில் ஏறினாள்.

எல்லாம் முடிந்து வீடு திரும்ப பொழுது சாய்ந்துவிட்டது. இன்னும் சில தஸ்தாவேஜுகள் நாளைக்குத்தான் கோர்ட்டில் போய் வாங்கணும். வீட்டுக்குள் நுழைந்ததும் அத்தை சுடச்சுட காபி கொண்டு வந்து வைத்தார். கூடவே பக்கோடா. சாப்பிட்டு காபி குடித்துவிட்டு, முற்றத்தில் வந்து அமர்ந்தோம். நானும் அம்மாவும் மட்டும் இருந்ததால் நான் அம்மாவிடம், "ஏம்மா உன் மனசுல என்ன நெனச்சிக்கிட்டு இருக்கே. அப்ப சண்டை போட்ட, கோர்ட், கேஸுன்னு ஆகி இப்ப இங்கேயே வந்து தங்கி இருக்கோம்னா என்ன அர்த்தம்?'' எனக் கேட்க, அம்மா, "சுப்பு, அண்ணன் மேல கோபம் இருந்துச்சு. இப்ப இல்லை. அவர் எங்கிட்ட ஒரு வார்த்தை கேட்டிருக்கலாம். அவராவே செஞ்சதுதான் எனக்குத் தாங்கல'' என்றாள்.

''என்னை மன்னிச்சிடும்மா'' குரல் கேட்டு நாங்கள் திரும்பிப் பார்த்தோம். மாமா வந்து அம்மா அருகே அமர்ந்தார். "எனக்கு அப்படி ஒரு நிர்ப்பந்தம். அகலக் கால் வைச்சேன். விழுந்திட்டேன். ஆனாலும் உன்னைக் கேட்காமல் வேறொருத்தன்கிட்ட நிலத்தைக் கொடுத்துப் பணம் வாங்கினது தப்புதான்'' என்று தழுதழுத்தார். அவரைச் சமாதானம் செய்து முடிக்க பெரும்பாடாகிவிட்டது. இப்போது, ஒரு ஏக்கர் தென்னந்தோப்பு குத்தகைக்கு எடுத்துப் பார்த்து வருகிறார். வேறு வயல் ஏதுமில்லை. அறுபது ஏக்கர் நஞ்சை, புஞ்சை என இருந்துவிட்டு இப்போது சொந்த வயலின்றி இருப்பதை நினைக்கையில் எனக்கே சங்கடமாக இருந்தது. மாமா,

"நேத்து பாங்க்ல பணம் எடுக்கப் போனப்ப தடுமாறி கீழே விழுந் திட்டியாமே, ஏன்.?"

"பேலன்ஸ் இல்லாததால தான்!"

- சத்யா முருகவேல்



தமது நண்பருடன் சேர்ந்து ஐம்பது ஏக்கர் நிலத்தை அடமானம் வைத்து, காங்கேயத்தில் ஆயில் மில் ஆரம்பிக்க, ஆரம்பித்த வேகத்திலேயே தொழில் அனுபவமின்மையால் தொழில் முடங்க, கடன்தான் மிச்சமானது. புதுத் தொழில் ஒரு வருடத்தில் அவரது நிலையைத் தலைகீழாக மாற்றியது.

அன்று இரவு அம்மாவும், நானும் முற்றத்தில் படுத்திருந்தபோது அம்மா மெதுவாக என்னைக் கூப்பிட்டாள்.

"சுப்பு"

"என்னம்மா?" என்றேன்.

"நான் ஒண்ணு சொன்னா தப்பா நினைக்கமாட்டியே?"

"ம்... சொல்லும்மா."

"நிலத்தை, உன் மாமாவிடமே கொடுத்திடலாம்னு முடிவு பண்ணிட்டேன்" என்றாள்.

நான் ஒன்றும் புரியாமல் அம்மாவைப் பார்த்தேன்.

"உன் மாமா ரொம்ப நல்லவருடா. எனக்கு அம்மா இல்லாத குறையைப் போக்கினவரே அவர்தான். எனக்கு அண்ணனா மட்டுமில்லாம, அம்மாவாகவும் இருந்து என்னை ஆளாக்கினார். நீ பிறந்தபோது உனக்கு ஏதோ கோளாறுன்னு டாக்டர்கள் சொன்னாங்க. உடனே மாமாதான் உன் வைத்தியச் செலவு முழுசையும் பார்த்துக்கிட்டார். இன்னைக்கு அவர் இருக்கற நிலையைப் பார்க்க நெஞ்சு தாங்கலை சுப்பு" எனச் சொல்லி அழுதாள். மாமா, அவர் பையன் ரெங்கனைக் கூட பிளஸ்டூவுக்கு மேலே படிக்க வைக்க முடியவில்லை என்பது எனக்குத் தெரியும். அம்மா தொடர்ந்தாள்.

"மாமாவோட நேரம் இப்படி ஆயிட்டார். நல்லா வாழ்ந்தவர். இனியாவது அவரும் அவர் குடும்பமும் நல்லா இருக்கணும். இப்ப இந்த நிலம் அவருக்குக் கிடைச்சா மிகப் பெரிய பலமா அந்த குடும்பத்துக்கு இருக்கும். அவரோட கைராசிக்கு மண்ணெல்லாம் பொன்னா மாறி, அவரோட நிலையும் நல்ல வளமா இருக்கும்னு நம்பறேன். அவர் நல்லா இருந்தா அதுவே எனக்குப் போதும்" என்றாள்.

"அப்புறம் ஏன் சண்டை போட்ட? கோர்ட், கேஸ்னு போனே?" என்றேன்.



"கொள்ளையடிச்ச பொருட்களை இரண்டாப் பிரிக்கும்போது, திடீரென்று போலீஸ் வந்துட்டா என்ன செய்யறது..?"

"மூன்றாப் பிரிக்க வேண்டியதுதான்..."

- நாமக்கல் பாலு

"அப்ப நான் நிலத்துமேலே உயிரையே வச்சிருந்தேன். என்னோட நிலம் பறி போயிடுமோங்கற பயம், கவலை. இப்படிப் பண்ணிட்டாரேன்னு கோபம். ஆனா இப்ப அவரோட நிலைமை தெரிஞ்சப்புறம் என் மனத்தை மாத்திக்கிட்டேன். மண்ணுக்குள்ளே போற நாம மண் மேலே அதிக பாசம் வைக்கக்கூடாதுன்னு உணர்ந்துட்டேன் சுப்பு. அதனால நிலத்தை உன் மாமாவுக்கே தத்தம் பண்ணிட முடிவு பண்ணிட்டேன். அப்படி நான் செய்யலைன்னா நான் நன்றி கெட்டவளாயிடுவேன் சுப்பு" என சொல்லிவிட்டு அமைதியாகப் படுத்தாள்.

அம்மா முன்பு ஒரு முறை சொன்னது ஞாபகம் வந்தது. "சுப்பு, இந்த நிலம் நம்ப பரம்பரைச் சொத்து. எந்தக் காலத்திலும் இதை வித்துடக் கூடாது. உன்னை விவசாயப் படிப்புப் படிக்க வைக்கிறதுக்குக் காரணமே, நீ வேற ஏதாவது படித்துத் தொழில்னு போய், நிலத்தைப் பார்க்காமப் போயிடுவியோன்னுதான். அதனால தயவு செய்து உன் காலத்திலே நிலத்தை வித்துடாதே" எனச் சொன்னது நினைவுக்கு வந்தது. வயலில் எடுத்த மண்ணை, மாமா வீட்டு வாசல் ஓரத்தில் போட்டதும் ஞாபகம் வந்தது.

திரும்பி அம்மாவைப் பார்த்தேன். கண்மூடி அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். கண் விளிம்பில் ஒரு துளிநீர் பனித்துளி போல் தெரிந்தது. நிலா வெளிச்சம் அம்மா முகத்தில்பட, முகம் வெள்ளியாய் ஜொலித்தது. அந்த ஜொலிப்பில் ஒரு மனநிறைவு தெரிந்தது. ●

## வட்டமேஜை

# விருப்பமும் கனவும்!

✉ 'டான்ஸி' 'ஜெ'யின் திடீர் பல்டி' என்ற தலைப்பிலான செய்தி படித்தேன். 'ஜெ' நிலத்தை ஒப்படைக்கத் தயாராக இருப்பதால் உச்ச நீதிமன்றம் வழக்கை சீரியஸாக அணுக வேண்டியதில்லை என சு.சாமி மனு செய்யப்போவதாக, எங்கள் தலைவரைக் கொச்சைப் படுத்தி செய்தி வெளியிட்டுள்ளீர்கள். இது மிகுந்த வருத்தத்தையும் வேதனையையும் ஏற்படுத்தியுள்ளது.

டான்ஸி வழக்கினைப் பொறுத்தவரை டாக்டர் சுவாமி சென்னை உயர்நீதி மன்றத்திலும், உச்ச நீதிமன்றத்திலும் 'ஜெ' மீது தெரிவித்த குற்றச்சாட்டுகளில் தமது தரப்பு வாதங்களை மிகக் கடுமையாகவும், திறமையாகவும் எடுத்துரைத்துள்ளார் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

சந்திரலேகா,
(தலைவர்),
சென்னை-4, ஜனதாகட்சி.

✉ கலைஞருக்குச் சாதகமாகப் பத்திரிகை நடத்துவது என்று நீங்கள் முடிவு செய்திருந்தால் நல்லது! செய்யுங்கள். ஆனால் இந்துக்களின் பேரொளியாக விளங்கும் ஸ்ரீஜெயேந்திரரைக் கேலி செய்திருப்பது, கண்டிக்கத்தக்கது. இதெல்லாம் 'கல்கி'க்குத் தேவையா?

கே.என். சுப்ரமணியன்,
இ-மெயிலிலிருந்து.

✉ காஞ்சிப் பெரியவரும், அழகப் பெரியவரும் செய்து கொள்ளும் அர்ச்சனையை, கார்ட்டூன் அழகாக, அசத்தலாக, வார்த்தையேதும் இன்றி, படம் பிடித்துக் காட்டியது!

அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

✉ தலையங்கம் அருமை. பல வகைகளிலும் நன்கு அலசி ஆராய்ந்து எழுதப்பட்டது. தேர்தலில் ஜெயிக்கும் கட்சி தீவிரவாதத்தை பூண்டோடு ஒழிக்க வேண்டும் என்பதே பாரத மக்களின் விருப்பமும் கனவும்.

சிதம்பரம்,
ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ மேஜர் ராகவனின் கூற்று நியாயமானதே! சியாச்சின் விவகாரத்தில், நாம் தேவையே இல்லாமல் டென்ஷனாகிக் கொண்டிருப்பதோடு, ஒரு நாளைக்கு மூன்று கோடி செலவு செய்து கொண்டிருப்பது அநியாயத்தின் உச்சக் கட்டம்!

திருச்சி-21,
ஆர். அப்துல் சலாம்.

✉ இந்தியா, பாகிஸ்தான், மலேசியா, அமெரிக்கா மற்றும் எகிப்து பற்றிய ஐந்து ஒரு பக்கக் கட்டுரைச் செய்திகள் அனைத்தும் மிகவும் அருமை!

காரைக்கால்,
நவோதயா செந்தில்.

✉ வால்மீகி ராமாயணம், அயோத்தியா காண்டம் 100வது ஸர்க்கத்தில் ஸ்ரீராமன் பரதனுக்கு ராஜநீதியை உபதேசிக்கிறார். 340வது சுலோகத்தில், "எந்தத் திருடனாவது திருடும்போது தடையத்துடன் கண்டுபிடிக்கப்பட்டு, நன்றாக விசாரித்த பின், அவன் திருடின சொத்தைக் கொடுத்து விட ஒப்புக் கொண்டால் அதை அநியாயமாக வாங்கிக் கொண்டு தண்டனை இல்லாமல் விடுபடுகிறானா?" என்று கேட்கிறார். ஏனோ, இது இப்பொழுது ஞாபகம் வருகிறது.

பாலக்காடு,
கே.எஸ். விசுவநாதன்.

✉ 'டாப்டென் கலெக்டர்கள்' மிகவும் பாராட்டப் பட வேண்டிய கட்டுரை. மாவட்ட ஆட்சியர்கள் மக்களுக்கு என்னென்ன செயல்கள் செய்கிறார்கள் என தெரிந்து கொள்ளும் வண்ணம் சிறப்பாகத் தொகுத்ததற்கு நன்றி!

சென்னை - 41,
ஆர்.கே. திருப்பதிரங்கன்.

✉ 'மதிக்காவிட்டால் மதம் மாறுவோம்!' படித்தேன். கடவுளின் விஷயத்தில் ஜாதி மோதல்கள் நடந்து வருவது ஒட்டு மொத்த தமிழகத்துக்கே தலைகுனிவு.

திருவாரூர்,
எஸ். பாலச்சந்தர்.

✉ 'துரையின் மரணம்' நெஞ்சை நெகிழ வைத்த ஆழமான சிறுகதை.

மேலகிருஷ்ணன்புதூர்,
கே.எல். சுபாக்கனி.



# தேவ மருந்து – 11



சென்ற வாரம் 'வாத பாகம்' அட்டவணை தரப்பட்டிருந்தது. குணங்களை ஆராய்ந்து, மதிப்பெண் குறித்து வைத்திருப்பீர்கள். இந்த வாரம் 'பித்த பிரக்ருதி'களுக்கான அட்டவணை தரப்பட்டுள்ளது. உண்மையாக எடை போட்டு, நேர்மையாக மதிப்பெண்களைக் குறிக்கவும்.

| | எனக்குப் பொருந்தாது | எப்போதாவது பொருந்தும் | சில சமயம் பொருந்தும் | அனேகமாகப் பொருந்தும் | மொத்த மதிப்பெண் |
|---|---|---|---|---|---|
| மதிப்பெண் | 0 | 1 | 2 | 3 | |
| **பாகம் 2. பித்த பிரக்ருதி** | | | | | |
| 1. உடல் நன்கு கட்டமைந்தது. | | | | | |
| 2. சராசரி உயரம். | | | | | |
| 3. உடல் அமைப்பு சாதாரணமானது. | | | | | |
| 4. நினைத்தால் என் எடையை கூட்டவோ குறைக்கவோ முடியும். | | | | | |
| 5. என் பார்வை கூர்மையானது. கண்கள் இலேசான பழுப்பு அல்லது சாம்பல் நிறம். | | | | | |
| 6. சருமத்திலும் தலை முடியிலும் எண்ணெய் பசை இருக்கிறது. | | | | | |
| 7 நான் நல்ல நிறம். வெயிலில் அலைந்தால் சருமம் சிவந்து விடுகிறது. | | | | | |



# "என் இனிய பித்த மக்களே!"

டாக்டர் எல்.மகாதேவன்

| | | | | |
|---|---|---|---|---|
| 8. தலைமுடி இலேசாக, அழகாக இருக்கிறது. சீக்கிரம் நரைத்து விடுகிறது. | | | | |
| 9. நல்ல காற்றோட்டமான குளிர்ந்த இடம் பிடிக்கும். | | | | |
| 10. பசியுள்ளபோது உணவு கிடைக்காவிட்டால் எரிச்சலும், கோபமும் அடைகிறேன். | | | | |
| 11. எளிதாக மலம் கழிக்கிறேன். தினசரி ஒன்றிரண்டு தடவை, மிருதுவான எண்ணெய் பசையுடன் மலம் வெளியாகிறது. | | | | |
| 12. நல்ல ஜீரண சக்தி உண்டு. | | | | |
| 13. திட்டமிட்ட நடைமுறையை விரும்புகிறேன். | | | | |
| 14. உணர்ச்சிகள் சிதறிப் போகாமலிருக்க உடல் பயிற்சிகள் உதவுகின்றன. | | | | |
| 15. விளையாட்டுப் போட்டிகளில் பங்கெடுக்க விருப்பமுண்டு. | | | | |
| 16. எண்ணங்களை பிறருடன் பகிர்ந்து கொள்வேன். | | | | |
| 17. அழுத்தமான சூழ்நிலையில் கோபமும் எரிச்சலும் ஏற்படுகிறது. | | | | |
| 18. அழகிய கனவுகள் காண்கிறேன். அவை நினைவில் இருக்கின்றன. | | | | |
| 19. என் கருத்துகளையும் உணர்ச்சிகளையும் அழுத்தமாக வெளியிடுவேன். | | | | |
| 20. இனிப்பு, துவர்ப்பு, கசப்பு சுவையுள்ள உணவு பிடிக்கும். | | | | |
| 21. உடல் நலமில்லாதபோது உஷ்ணம் அதிகரிக்கிறது. சிவந்த தடிப்புகள் தெரிகின்றன. | | | | |
| 22. வாதத்தைப் போல் இல்லையென்றாலும் தூக்கமின்மைக் காணப்படும். | | | | |
| 23. நல்ல காரியங்களுக்கு தாராளமாக செலவிடுவதும், அவசியமான பொருட்களை வாங்குவதும் நல்லது என நினைக்கிறேன். | | | | |
| 24. நகங்கள் மிருதுவாக ஆனால் வலுவாக இருக்கின்றன. | | | | |
| 25. சீக்கிரம் வியர்த்து விடுகிறது. | | | | |
| 26. வாய்ப்புண் அதிகம் வருகிறது. | | | | |
| 27. கைகளும் கால்களும் சற்று சூடாகவே இருக்கின்றன. | | | | |
| 28. மிதமான உடல் உறவுக் கொள்கிறேன். | | | | |
| 29. நாடித்துடிப்பு பொதுவாக இருக்கிறது. | | | | |
| 30. மன நிலையை ஸ்திரமாக வைத்துக் கொள்ள விரும்புகிறேன். | | | | |
| மொத்த மதிப்பெண் | | | | |

அடுத்த வாரம், கப பிரக்ருதிகளுக்கான அட்டவணை தரப்படும். தயாராக இருங்க.

**கேள்வி : எல்லா நோய்களையும் ஆயுர்வேதம் குணப்படுத்துமா?**

**- கே.பி. பவித்ரா, தருமபுரி.**

பதில் : விபத்து, ஒரு சில இருதய நோய்கள், அடங்காத இரத்த அழுத்தம், ஒருசில ஹார்மோன் சம்பந்தப்பட்ட நோய்கள், அபண்டிசைடிஸ் போன்ற வியாதிகளுக்கு ஆங்கில மருத்துவமே சிறந்தது. ஆனால் ஆயுர்வேத சாஸ்திரப்படி கிரமமான முறையில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டால் நோய்கள் எதுவும் அண்டாது. எந்த மருத்துவ முறையுமே தேவையிருக்காது.

# பொய்யில் பூத்த நிஜம்

**"நீ மீராவைக் கல்யாணம் செய்துக்கிட்டா, நா ரொம்ப சந்தோஷப்படுவேன்."**

"உங்கிட்ட கொஞ்சம் பேசணும்" என்றான் சுதாகர் அலுவலகத்து லிஃப்டில் சந்தித்தபோது.

"பகல் முழுவதும் எனக்கு மீட்டிங் இருக்கு" என்றான் ராஜா.

"லஞ்சும் வெளியிலே. சாயங்காலம் பீச்சுப் பக்கம் போகலாமா?"

"ஃபைன்" என்றான் சுதாகர். மாலை ராஜாவின் அறைக்கு வந்து அழைத்துக் கொண்டு போவதாகச் சொல்லிவிட்டு அவன் விரைந்தபோது, அவன் எதைப் பேச விரும்புகிறான் என்கிற யோசனையுடன் ராஜா தன் அறைக்குச் சென்று அமர்ந்து கொண்டான். அறைக்குச் சென்ற சில நிமிடங்களிலேயே மீட்டிங்கிற்குச் செல்ல வேண்டியிருந்ததால் அதைப் பற்றின யோசனை விலகிக் கொண்டது. மற்ற மாநிலங்களிலிருந்து பல நிறுவனங்களிலிருந்து வந்திருந்த கார்ப்பொரேட் தலைவர்களின் கூட்டம் அது. கூட்டம் நடக்கவிருந்த கானிமரா ஹோட்டலுக்கு அவன் சென்றபோது, ஏற்கெனவே பலர் அங்கு வந்திருந்தார்கள். அவன் உள்ளே நுழைந்து, எல்லாரிடமும் தன்னை அறிமுகம் செய்து கொண்டு கை குலுக்கினான். கடைசியாக அவன் கை குலுக்கிய நபர் அகலமாகப் புன்னகைத்தார். "நாம் ஏற்கெனவே அறிமுகமானவர்கள்" என்றார்.

அவனுக்கு இலேசாகத் தடுமாற்றம் ஏற்பட்டது.

"ஸாரி" என்றான் அவன். "அது கடந்த ஐந்து ஆண்டுகளில் ஏற்பட்ட அறிமுகம் என்றால் எனக்கு ஒரு பிரச்னை இருக்கிறது."

"அதுவும் எனக்குத் தெரியும்" என்று அவர் புன்னகை செய்தார். "தில்லியில் ஏஸர் கம்பெனியில் வேலை பார்த்தாய். நான் அதன் மார்க்கெட்டிங் மானேஜர், ராஜீவ் சுக்லா."

"ஓ, அப்படியா?" என்றபோது ஓர் இயலாமை அவனை ஆட்கொண்டது.

"மறந்தவை எல்லாம் இப்பவும் கொஞ்சம்கூட நினைவுக்கு வருவதில்லையா?"

சிதறல்களாக பிம்பங்கள் மனத்திரையில் நிழலாடி அகன்றன. ஒரு கிருஷ்ண விக்ரகம் 'டாட்டா' என்றது. "இல்லை" என்றபோது அவருக்கு சகுந்தலாவைப் பற்றித் தெரிந்திருக்கலாம் என்று தோன்றிற்று. அவராகவே அதைப் பற்றிப் பேசலாம் என்று எதிர்பார்த்தான்.

"ரொம்ப விசித்திரமான கேஸ் இல்லை?" என்றார் ராஜீவ்.

'என்ன செய்வது?' என்பது போல ராஜா தோளைக் குலுக்கினான்.

"அந்தக் கம்பெனியில்



உனக்கு நல்ல எதிர்காலம் இருந்தது" என்றார் ராஜீவ். "நீ பயந்து கொண்டு ஓடி வந்து விட்டாய்."

"ஓரளவுக்கு அது உண்மைதான்'' என்று ராஜா ஒப்புக் கொண்டான். "அந்தச் சமயத்தில் ரொம்ப அரண்டு போய்விட்டேன்."

"யு நோ ஸம்திங்?" என்றார் ராஜீவ்.

''நீ அங்கேயே இருந்திருக்க வேண்டும். மெல்ல மெல்ல பழைய நினைவு வந்திருக்கும். ஒரு புதிய ப்ரொஜெக்டை நீ திட்டமிட ஆரம்பித்திருந்தாய். மிக நல்ல திட்டம் என்று ஜிஎம் ரொம்ப நம்பிக்கையோடு காத்திருந்தார். இரவு பகல் பாராமல் உழைத்தாய். அதுவே உனக்கு அந்த ஹார்ட் அட்டாக்கைக் கொடுத்திருக்கலாம். ஆனால் உன்னுடைய மறதியோடு திட்டமும் இப்பக் காணாமல் போய்விட்டது."

"ஏன்?"

"அது உன் கம்ப்யூட்டரில் உனது ஃபைலில் இருந்தது. உன்னுடைய பாஸ்வர்டு யாருக்கும் தெரியாது. இப்போது உனக்கும் ஞாபகமிருக்காது. ரொம்பப் பெரிய நஷ்டம் என்கிறார் ஜிஎம்."

"ஐயாம் ஸாரி" என்றான் அவன் எதற்கு மன்னிப்பு கேட்கிறோம் என்று புரியாமல். சம்பந்தமில்லாமல் வேறு கோணத்தில் சிந்தனை எகிறிற்று. 'சகுந்தலாவைப் பற்றி ஏதேனும் சேதி தெரியுமா?' என்று கேட்க நினைத்து சட்டென்று சுதாரித்துக் கொண்டான்.

''உன்னுடைய எதிர்காலப் பிளான் என்ன? இங்கேயே இருக்கத் தீர்மானித்து விட்டாயா?"

"இப்போதைக்கு இங்கே தான். வாழ்க்கை தடுமாற்றமில்லாமல் போகிறது."

"ஆனால் பாவம்'' என்று அவர் ஆரம்பித்தார். அவன் காத்திருந்தான். அதற்குள் கூட்டம் ஆரம்பித்துவிட்டதற்கான அறிவிப்பு வரவே "பிறகு பார்ப்போம்" என்று ராஜீவ் சுக்லா நகர்ந்தார்.

அதற்குப் பிறகு அவருடன் தனியாகப் பேச முடியாமல் போனது. மதிய உணவுக்குப் பிறகும் கூட்டம் தொடர்ந்தது. அங்கிருந்தே விருந்தினர்கள் விமானத்தைப் பிடிக்கக் கிளம்பினார்கள். ராஜீவ் சுக்லா அவனைத் தேடிக் கொண்டு வந்து தன்னுடைய விசிட்டிங் கார்டைக் கொடுத்தார். ''தொடர்பு வைத்துக் கொண்டிரு. நினைவு திரும்பினாலும் திரும்பாவிட்டாலும்" என்றார். ''உன்னிடம் அக்கறைக் கொண்டவர்களை நீ ஒரேயடியாய்ப் புறக்கணித்துவிடக் கூடாது."

'வேறு எதையாவது மனத்தில் வைத்துக் கொண்டு இவர் பேசுகிறாரோ' என்று அவன்

சந்தேகப்பட்டான். அவனுடைய அந்தரங்க விஷயங்களை வெளிப்படையாகப் பேச அவர் தயங்கியதாகத் தோன்றிற்று. அவர் கேட்டிருந்தால், தனக்கு பதில் சொல்லத் தயக்கமிருந்திருக்காது என்று தனக்குள் சொல்லிக் கொண் டான். 'நீங்கள் சொல்வது சரி. அந்த ஐந்து ஆண்டுகள் என்பது இப் போது ஒரு காணாமல் போன ஃபைல். சிதறல்களாக சில பிம்பங்கள் தோன்றி னாலும், அவை என் வாழ்வோடு ஒட்டா தவையாகப் படுபவை. சென்ற ஜென்மத்து ஞாபகம் போல. எப்பொழுதோ பார்த்த சினிமாக் காட்சி போல. இப்போது நான் வாழும் வாழ்க்கையோடு, என் உணர்வு களோடு சம்பந்தமில்லாமல் எட்டி நின்று என்னை சங்கடப்படுத்துபவை. என்னைக் குற்றவாளி ஆக்குபவை. அந்த சங்கடத்தி லிருந்து, அந்தக் குற்ற உணர்விலிருந்து, என்னை நான் விடுவித்துக் கொள்ள முயற்சி செய்கிறேன் – நிரந்தரமாக விடுவித்துக் கொள்ள.'

அன்று மீராவுடன் அந்தப் பஞ்சாபி உணவகத்தில் சாப்பிடும்போது எதிர்பா ராமல் அவனைத் தாக்கிய பிம்பம் அன்று முழுவதும் அவனை அலைக்கழித்தது. ஆனால் அதற்குமேல் அதை ஊடுருவ அவனால் முடியவில்லை. அந்தரங்க உணர்வுகளோடு ஒட்டாமல் அது நழுவிற்று.



''தினமும் டி.வி. மெகா சீரியல்களைப் பார்த்துவிட்டு அழறா என் மனைவி.''

''இதுக்கு நீ ஏன்டா அழாதகுறையா அலுத்துக்கறே?''

''இதுக்கு மாசா மாசம் கேபிள் டிவிக்கு இருநூறு ரூபாய் அழ வேண்டி இருக்கேன்னு தான்!''

– லலிதா செல்லப்பா

அந்த நினைவிலிருந்து விடுபடுவதற்காகவே அவன் மீராவுடன் தினமும் எங்காவது செல்லும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண் டான். அவள் தெளித்த உற்சாகத்தில் நனை வது தெம்பை அளித்தது. அத்தனை பெரிய ஏமாற்றத்தையும் துக்கத்தையும் விழுங்கிக் கொண்டு அவளால் எப்படி இப்படி உற்சாக மாக வளைய வர முடிகிறது என்று ஆச்சரி யமாக இருந்தது.

அது ஒரு 'தெரபி' என்று அவள் சொன் னாள். வரவழைத்துக் கொள்ளும் உற்சாகம். அதுவே பழக்கமாகிவிடும் அளவுக்கு. அது ஒரு சுய ஏமாற்றல் என்று அவன் நினைத்துக் கொண்டான். ஒரு நாள் அது எந்த ரூபத்தி லாவது வெடிக்கலாம். வியாதியாகப் பரிணமிக்கலாம். அது பொய்யான வாழ்க்கை என்று தோன்றிற்று. அப்படிப் பட்ட வாழ்வை வாழ இஷ்டப்படாத தால்தான், தில்லியிலிருந்து கிளம்ப, தான் முடிவு எடுத்ததாக இப்போது சமாதான மேற்பட்டது. ஆனால் அதன் எச்சங்கள், வாழ்நாள் முழுவதும் தன்னை அரை குறையாக ஹிம்சைப்படுத்தாமல் இருக்க ஏதாவது செய்தாக வேண்டும். அப்படிப் பட்ட எத்தனத்தில்தான் மீராவும் இருப்ப தாகப் பட்டது.

அவன் அலுவலகத்துக்குத் திரும்பியதும், அன்று முடிக்க வேண்டிய முக்கியமான வேலை இருப்பதை உணர்ந்து, அதில் ஆழ்ந்த சமயத்தில் அன்றைக்கு வந்த தபாலை ப்யூன் வைத்துவிட்டுச் சென்றான். கம்ப்யூட்டரின் மானிட்டரில் பார்வையைப் பதித்தபடியே ஓரக் கண்ணால் வந்திருந்த தபாலின் மேல் பார்வையைப் பதித்தான். ஒரு கூரியர் தபால் இருந்தது. அனுப்பியது விவேக் குப்தா என்று தில்லி விலாசம் இருந்தது. ஒரு விநாடி விவேக்கின் அமைதியான முகம் எதிரில் நின்றது. 'நான் உன்னுடைய நண்பன். அது உனக்கு நினைவிருக்கணும்' என்று அவன் அன்று தளபதி ரஜினிகாந்த் ஸ்டைலில் ஆஸ்பத்திரி வார்டில் அவனுடைய கையைப் பிடித்துச் சொன்னது நினைவுக்கு வந்தது. அவர்களிடையே இருந்த நட்பை, ராஜா மறந்துபோனதில் அதிகத் துக்கமடைந்த வனாக விவேக் தென்பட்டது பசுமையாக நினைவில் இருந்தது.

"உன்னிடம் அக்கறை கொண்டவர்களை நீ புறக்கணிக்கக் கூடாது."

"நான் என்ன செய்வேன்" என்ற சுய பச்சாதாபம் அவனை ஆட்கொண்டது.

நட்பும் சிநேகமும், நெருக்கமான உறவுகளும் உயிர்ப்புடன் இருப்பதற்கான இழை அறுந்து விட்டது. அல்லது காணாமல் போய் விட்டது. தேடி மீட்கும் வஸ்துவாக அது தோன்றவில்லை. சினிமாக் காட்சிபோல ஒன்றன்பின் ஒன்றாக நினைவுகள் திரும்பும் என்ற நம்பிக்கை அவனுக்கு இல்லை. நினைவு என்பதும், உணர்வு நிலை என்பதும் வேறு வேறு. சரித்திர நிகழ்வு போல நினைவு வந்தால் போதாது, உணர்வைத் தட்டி யெழுப்பும் நினைவாக இருக்க வேண்டும். அது ஏற்படாதவரை, அவனோடு சம்பந் தப்படாதவை அவை.

அவன் அவசரமாக வேலையை முடித்து கம்ப்யூட்டரை மூடிவிட்டு, விவேக்கின் உறையைப் பிரித்தான். இரண்டு மூன்று புகைப்படம் இருப்பது தெரிந்தது. இலேசாக ஒன்றை இழுத்தபோது குழந் தையை வைத்துக் கொண்டு சகுந்தலா நின்றி ருந்தாள், பளிச்சென்ற சிரிப்புடன். குழந் தையின் வாயில் கேக் துண்டு. அவன் அதை முழுவதும் எடுக்காமல் உறைக்குள் தள்ளி னான். அடி வயிறு இலேசாகத் துவண்டது. பிறந்த நாள் கொண்டாட்டம். குழந்தைக்கு ஒரு வயது. 'பிளாக்மெயில் பண்ணப்பார்க் கிறார்கள்' என்று மெலிதாகச் சீற்றம் ஏற் பட்டது. உறையை மீண்டும் திறக்கக் கை தன்னிச்சையாகச் சென்றபோது சுதாகர் வந்து நின்றான். உறையை அவசரமாகத் தனது கைப்பெட்டியில் வைத்துவிட்டு நிமிர்ந்து, "போலாமா?" என்றான் ராஜா புன்னகையுடன்.

"என்னுடைய வண்டியிலே போகலாம். பழனியைப் பின்னாலே வரச்சொல்லு" என்றான் சுதாகர்.

"ஏதோ அந்தரங்கமான பேச்சு" என்கிற இலேசான வியப்புடன் அவன், பழனியைத் தொடரும்படி சொல்லிவிட்டு சுதாகரின் வண்டியில் அமர்ந்தான்.

"மீட்டிங் எப்படியிருந்தது?" என்றான் சுதாகர்.

"நல்லா போச்சு. அங்கே நா டில்லியிலே வேலை பார்த்த கம்பெனியிலேயிருந்து ஒருத் தர் வந்திருந்தார்."

"உனக்கு அடையாளம் தெரிஞ்சுதா?"

"கொஞ்சங்கூட ஞாபகம் வரலே" என்றான் ராஜா தனக்குள் பேசிக் கொள் பவன் போல. "ஏதோ புது பிராஜெக்ட்



" 'வரப்போகிற சட்டமன்றத் தேர் தலில் ஆயிரம் இடங்களைக் கைப்பற்று வோம்'னு தலைவர் பேசுறாரே... எப்படி நடக்கும்?"

"ஆயிரம் இடங்கள்னு அவர் சொன்னது எம்.எல்.ஏ. சீட் இல்லை. வாக்குச்சாவடிங்க!"

– வளர்மதி ஆசைத்தம்பி

பண்ணிக்கிட்டிருந்தேனாம், என் பாஸ்வர்ட் யாருக்கும் தெரியாததினாலே அது என் கம்ப்யூட்டர்லேயே மாட்டிக்கிட்டதாகச் சொன்னார். எனக்கு சுத்தமா நினைவில்லே!"

"அநியாயம் இல்லே?"

"நான் இதப்பத்தியெல்லாம் கவலைப் படக் கூடாதுன்னு முடிவுக்கு வந்துட்டேன் சுதாகர். அது ஏதோ போன ஜென்மம்னு வைச்சுக்க வேண்டியதுதான். மனுஷன் திருப்பித் திருப்பிப் பிறக்கறான்னு நாம நம்பறோம். அது உண்மையோ பொய்யோ தெரியாது. பிந்தின ஜன்மத்து நினைவு களைப் பத்தி நாம கவலைப்படறோமா? பட்டா அது முட்டாள்தனம். அதோட நாம உணர்வுபூர்வமா சம்பந்தப்படுத்திக்க முடி யாது. அந்த நினைவுகள்னாலே நமக்கு லாபமில்லே."

"குட்! என்றான் சுதாகர்." உன் மனசு தெளிவாயிருக்கணும். அதுதான் முக்கியம்."

காந்தி சிலையைத் தாண்டி வண்டியை சுதாகர் நிறுத்திய பிறகு, இருவரும் இறங்கி கடலை நோக்கி நடந்தார்கள். சென்னை நகரத்தைக் காலி செய்து, ஜனங்கள் இங்கு வந்து விட்டது போல கூட்டம் இருந்தது. சந்தடியற்ற இடத்தைத் தேடிச் செல்கையில் சுதாகர் அலுப்புடன் சொன்னான் _ "எந்த இடம் கிடைச்சாலும் அதை ஆக்ரமிக்கத்

தயாரா இருக்கோம். எந்த ஊருக்குப் போனாலும் இதே கதைதான் — ஆனா இதை ஒரு வகையிலே முன்னேற்றத்தின் அடையாளம்னு சொல்லலாம். கையிலே இப்பக் காசு இருக்கு. மொத்தக் குடும்பத்துக்கும் வெளியிலே போகணும், வெளியிலே சாப்பிடணும்னு ஆசை இருக்கு. அதை நிறைவேற்ற முடியுது."

ராஜா பதில் சொல்லாமல் புன்னகையுடன் நடந்தான். கையில் காசு இருந்தாலும் முன்பு கணவனும் மனைவியும் குழந்தைகளுடன் இப்படி வெளியில் போவதோ, ஹோட்டலில் சாப்பிடுவதோ சரளமாக இருக்கவில்லை என்று நினைத்துக் கொண்டான். அவன் ஒரு நாள் கூட அப்பா அம்மாவுடன் பீச்சுக்கு வந்ததாக நினைவில்லை. இத்தனைக்கும் பணத்துக்கு ஒன்றும் பஞ்சமில்லை. வீட்டில் எப்போதுமே வண்டி இருந்திருக்கிறது. ஊருக்கு வந்த விருந்தாளிகளுடன்தான் அவன் ஊர் சுற்றிப் பார்த்திருக்கிறான். இதையெல்லாம் சுதாகரிடம் சொன்னால் அவன் புரிந்து கொள்ள மாட்டான் என்ற தயக்கம் ஏற்பட்டது. சுதாகரின் வீடு இறுக்கமற்ற வீடு. எந்த அழுத்தமும் சுமையாக உட்காரவிடாத சரளம் கொண்ட மனங்கள் அங்கு. எந்த இழப்பையும் சிரித்தே சமாளிக்கத் தெரிந்த வெள்ளை மனங்கள்.

கரைக்கு அண்மையாக இருந்த ஒரு மேடான பகுதியில் இருவரும் அமர்ந்தார்கள். மணல் ஈரமாக இருந்தது. தண்ணென்ற அதன் சுகம் இருவரும் கீழே விரித்த கைக்குட்டையைத் தாண்டி உடலை ஸ்பர்சித்தது. இரண்டு நாட்களில் பௌர்ணமியாக இருக்க வேண்டும். நிலா வந்து விட்ட எக்களிப்பில் அன்றே பௌர்ணமி என்ற மயக்கத்தில் அலைகள் நுரை கக்கி ஆர்ப்பரித்தன.

"நா காத்துக்கிட்டிருக்கேன், சுதாகர், என்னவோ பேசணும்னு என்னைக் கூப்பிட்டே!" என்றான் அவன் மெல்ல.

சுதாகர் இலேசாகப் புன்னகைத்தான்.

"சொல்றேன்" என்றான். "எங்கப்பா அந்தக் காலத்து மனுஷன். இரண்டு மூணு நாளா ஒரு விஷயத்தை ரொம்பத் தீவிரமா பேசிகிட்டிருக்கார். எதுவுமே எதேச்சையா நடக்காதுங்கறது அவருடைய சித்தாந்தம். உங்கிட்ட மீரா தன் கதையைச் சொல்லியிருப்பான்னு நினைக்கிறேன்.

"சொன்னாங்க. அதையெல்லாம் மறந்து உற்சாகமா இருக்கப் பழகியிருக்கிறதாவும் சொன்னாங்க."

"அசாதாரணப் பெண் அவ. சந்தேகமில்லே. ஆனா எங்க அப்பா அந்தப் பிள்ளை காணாம போனதெல்லாம் எதேச்சையானது இல்லேன்னு நம்பறார்."

"எப்படி?"

"அதான் சொன்னேனே. அவருடைய நம்பிக்கை அது. எல்லாமே ஒரு திட்டப்படி தான் இயற்கையிலே நடக்கிறது என்கிறார்."

"சரி, அதிலே நா எங்க வர்றேன்?"

"கேளு. அவருடைய லாஜிக் இது. நீ மீராவுடைய வாழ்க்கையிலே நுழையணும்னு விதிச்சிருக்கலாம், அதனாலேதான் உனக்கு விபத்து ஏற்பட்டு சென்னைக்கு வந்து சேர்ந்தே. மீராவுடைய சிநேகிதன் காணாமப் போனான், உன்னையும் எங்க எல்லாருக்கும், மீராவுக்கு உள்பட பிடிச்சுப் போச்சுங்கறார்."

ராஜாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பிறகு சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

"நல்ல அத்தைப் பாட்டிக் கதையா இருக்கே இது? எங்க அம்மாவுக்குதான் அப்படியெல்லாம் யோசனை வரும்னு நினைச்சேன்? நடக்கற விஷயத்துக்கெல்லாம் காரணம் கற்பிச்சுக்கிட்டே போனம்னா ஆண்டவனைவிட ரொம்பப்பெரிய சூழ்ச்சிக்காரன் இருக்க முடியாது!"

## அட! அலெக்ஸ்

நடிகர் அலெக்ஸ் இப்போது மேஜிக் நிபுணராகவும் புது அவதாரம் எடுத்திருக்கிறார்.

கொச்சின் மேஜிக் நிபுணர் எம்.பி. சேது மாதவனிடம் முறைப்படி மேஜிக் கற்றுக் கொண்டாராம். ஏன்? நடிக்கிற பிழைப்பு சரிபட்டு வரலையா என்ன?

"அதெல்லாம் இல்லை. பி.சி. சர்க்கார் மாதிரி பெரிய மேஜிக் சக்கரவர்த்திகள் நடத்துகிற மெகா மேஜிக் ஷோக்களுக்கு ஐந்நூறு முதல் இரண்டாயிரம் ரூபாய் வரை கட்டணம் வசூலிக்கிறார்கள். இதுபோன்ற மெகா ஷோக்களை ஏழை எளிய மக்கள் பார்க்க முடிவதில்லை. அவர்களும் இந்தக் கலையை பார்த்து ரசிக்க வேண்டும் என்று விரும்பினேன். அதனால் விரும்பி மேஜிக் கற்றுக் கொண்டேன்" என்கிறார் அலெக்ஸ். உடல்

ராஜா பெரிதாகச் சிரித்துத் தொடர்ந்தான். "உலகத்தை ரட்சிக்கிறதை விட, சூழ்ச்சி செய்றதுக்கே அவனுக்கு நேரம் பத்தாதது."

சுதாகர் சிரித்தான். "எங்கப்பா ஆண்டவனைப் பத்திப் பேசறதில்லே. இயற்கை அப்படி நடக்கிறது என்கிறார். அதனுடைய சிக்னல்களை நாம புரிந்து கொள்ளணும் என்கிறார். அமெரிக்காவிலே இப்பப் பிரபலமாயிட்ட சினிமா டைரக்டர் நைட் சியாமளன் இருக்கானே, அவன் கூட இதைத்தான் 'சைன்ஸ்' படத்திலே சொல்றான்னு மீரா சிரிச்சா."



ஊனமுற்றோர், மனநலம் குன்றியவர்கள் கருணை இல்லங்களுக்கு நிதிதிரட்ட மேஜிக் ஷோ நடத்தி உதவப் போகிறாராம்.

– ஜெ

ராஜா குழப்பத்துடன் அவனைப் பார்த்தான். "மீராவும் இதை நம்பறாங்களா?"

"மீரா என்ன நம்பறான்னு எனக்குத் தெரியாது. ஆனா உன்னை அவளுக்குப் பிடிச்சிருக்கு. பிடிக்கலேன்னா உன்னோட வெளியிலே வர்றதுக்கெல்லாம் சம்மதிச்சிருக்கமாட்டா."

ராஜாவுக்கு மெலிதாக அதிர்ந்தது. அவளுடன் வெளியில் சென்றதை இவர்கள் அவனது சாதகமான பதிலாக நினைப்பார்கள் என்று தோன்றிற்று.

"மீராவை உனக்குப் பிடிச்சிருக்கா?"

"சுதாகரின் நேரிடையான கேள்விக்கு என்ன பதில் சொல்வது என்று அவன் தடுமாறினான்.

"பிடிச்சிருக்கு பிடிக்கல்லேங்கற கேள்வி இல்லே இது. நா அந்த மாதிரியான எண்ணத்தோட பழகல்லே."

சுதாகர் சிரித்தான். "அந்த எண்ணத்தோட யாரும் பழகறதில்லே, சினிமாக் கதையிலே வர மாதிரி. ஒருத்தர் தோழமையிலே மனசுக்கு சந்தோஷமேற்படுதா என்கிறது தான் முதல்படி. மத்ததெல்லாம் பின்னால வரும்."

திடீரென்று ஒரு பெரிய அலை சிறிக் கொப்பளித்துக் கொண்டு அவர்களை நோக்கி வந்தது. நீரை வாரி இறைத்தது. அதில் விவேக் குப்தா அனுப்பிய குழந்தையேந்திய சகுந்தலாவின் புகைப்படமும் மிதந்து வந்தது. பிறகு, வந்த மாத்திரத்தில் பின்னால் நகர்ந்து மணலில் மெல்லிய கோடுகளை வரைந்தது. சுதாகர், இன்னும் பேசிக் கொண்டிருந்தான்.

"அப்பா சொல்றமாதிரி ஆச்சரியமாத்தான் இருக்கு. நீயும் பழைய வாழ்க்கையை மறந்து நிம்மதியா வாழறது எப்படிங்கற துடிப்பிலே இருக்கே. நீ அஞ்சு வருஷ ஞாபகத்தைத் தொலைச்சே. அவ நாலு வருஷத்து சினேகிதனைத் தொலைச்சு, அதை மறக்கற எத்தனத்திலே இருக்கா. நீ கல்யாணமாகாதவன் – இதைவிடப் பொருத்தம் எப்படி இருக்க முடியும்?"

ஏக இரைச்சலுடன் அலைகள் சுழன்று சுழன்று நுரைத்து, கரையை நோக்கிவர ஆரம்பித்தன. அதன் தாக்கத்தில் தான் புதையுண்டு போகலாம் என்கிற பீதி ஒரு விநாடி தோன்றிற்று.

"எனக்கு ஒண்ணும் சொல்லத் தெரியல்லே சுதாகர்."

"டேக் யுவர் டைம்" என்றான் சுதாகர் கருணையுடன். "நீ மீராவைக் கல்யாணம் செய்துக்கிட்டா, நா ரொம்ப சந்தோஷப்படுவேன்."

ராஜா தலையைக் குனிந்து கொண்டான். மல்லிப்பூவின் மணம் ஏதோ ஒரு பயணத்துக்கு அழைப்பது போல் இருந்தது.

"என்ன மல்லிப்பூ வாங்கினயா என்ன?"

"ஆமாம். பாவம், ஒரு சின்னப்பெண் ரொம்பக் கெஞ்சினா. நீ எடுத்துட்டுப் போ" என்று பையை நீட்டினான்.

(தொடரும்)

சி:எம்:

# இது என்ன கலாட்டா?

அட! நாற்காலியில் ஒய்யாரமாக உட்கார்ந்து கொண்டு இந்தக் குரங்கு என்ன செய்கிறது?

கீதை உபன்யாசம் கேட்கிறது என்றால் ஆச்சரியமாக இருக்கிறதா?

டேராடூனில், சின்மயா மிஷினின் ஆசிரமம் ஒன்று இருக்கிறது. அங்கே ஹாலில் ஏராளமான பக்தர்கள் பக்தியுடன் அமர்ந்து, பகவத் கீதை குறித்து ஹிதேஷ் சைதன்யா என்னும் பிரம்மச்சாரி நிகழ்த்திய உபன்யாசத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது, அந்த மண்டபத்தினுள் திடீரென்று ஒரு குரங்கு வந்தது. அதைத் தொடர்ந்து அங்கு என்ன நிகழ்ந்தது என்பதை விபரமாக சின்மயா மிஷினின் 'தபோவன பிரசாத்' இதழில் எழுதியிருக்கிறார் அவ்வமைப்பைச் சேர்ந்த கர்னல் கே.சி.கோலி. அதன் சுவையான சில பகுதிகள் இதோ :

மண்டத்தினுள்ளே நுழைந்த குரங்கு, ஒரு பக்தர் கொடுத்த வாழைப் பழத்தை வாங்க மறுத்து, அங்கே போடப்பட்டிருந்த நாற்காலி ஒன்றில் ஏறி அமர்ந்து கொண்டது. உபன்யாசம் செய்தவர் முகத்தைப் பார்த்தபடியே சிறிது நேரம் அமர்ந்து கொண்டிருந்தது. அதன்பின் நாற்காலியை விட்டு இறங்கி முதல்வரிசைக்குச் சென்று, எந்தவித சலசலப்பையும் ஏற்படுத்தாமல், ஒரு சிறுமியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டது.

சிறிது நேரத்துக்குப்பின் மேடைக்குச் சென்று உபன்யாசம் செய்து கொண்டிருந்த பிரம்மச்சாரியின் அருகில் உட்கார்ந்து கொண்டிருந்துவிட்டு, மேடையில் வைக்கப்பட்டிருந்த லக்ஷ்மி - நாராயணன் சிலைகளையும், சுவாமி சின்மயானந்தாவின் படத்தையும் குனிந்து வணங்கிவிட்டு அருகில் வைக்கப்பட்டிருந்த தேனில் கொஞ்சம் எடுத்து ருசி பார்த்தது.

அடுத்து, அதன் கவனத்தைக் கவர்ந்தது அங்கே வைக்கப்பட்டிருந்த லட்டு. ஒரு லட்டை எடுத்து வாயில் அடக்கிக் கொண்டது. லட்டு பிரசாதம் அதற்கு ரொம்பப் பிடித்துவிட்டது போலும். இன்னும் சில லட்டுகளை எடுத்துச் சாப்பிட்டது.

அதன்பின் மண்டபத்தில் காட்டப்பட்ட வீடியோ படத்தை அரையிருட்டில் அமர்ந்து ஆர்வமாகப் பார்த்தது.

உபன்யாசம் முடிந்தவுடன், பிரம்மச்சாரி ஹிதேஷ் சைதன்யா, குரங்குக்கு உணவு வழங்கினார். சாப்பிட்டு முடித்தவுடன், பக்கத்தில் இருந்த பிரம்மச்சாரியின் அறைக்குச் சென்று அவரது படுக்கையில் சிறிது நேரம் படுத்துக் கொண்டிருந்துவிட்டு, எழுந்தபோது, அங்கே இருந்த சாக்லெட் பொட்டலம் அதன் கண்ணில் பட்டது.

ஒரே ஒரு சாக்லெட்டை எடுத்து, காகிதத்தைப் பிரித்து, சாக்லெட்டை வாயில் போட்டுக் கொண்டது. அதன்பின் கொஞ்ச நேரம் அங்கேயே விளையாடிக் கொண்டு இருந்துவிட்டு, மரத்தின் மேல் ஏறி, மறைந்தது.

அடுத்த நாளும் கீதை உபன்யாசத்தின்போது அந்தக் குரங்கு வந்தது.

அதற்குப் பின், அந்தக் குரங்கு இன்றுவரை வரவில்லை.



**பசும்பொன் தேவரின் கட்டுரைகள் -**
கே. ஜீவபாரதி

'கண்ணகி' இதழில் தேவர் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு.

*குமரன் பதிப்பகம், 3, முத்துகிருஷ்ணன் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.50.*

**அம்மா -**
சுந்தரபாண்டியன்

சிறுகதைகள், ஒவ்வொரு சிறுகதையும் புதிய அனுபவத்தைக் கொடுக்கின்றன.

*காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, ட்ரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 24. விலை ரூ.30.*

**எனக்கு நானே எழுதிக் கொண்டது -**
இயக்குனர் மகேந்திரன்

தனக்கு நேர்ந்த அனுபவங்களை, தத்துவம், கவிதைபோல எழுதியிருக்கிறார் ஆசிரியர்.

*அனு பப்ளிகேஷன்ஸ், எண் 1, மேயர் சிவராஜ் தெரு, ராயப்பேட்டை, சென்னை - 14. விலை ரூ.75.*

**வானவில் பூங்கா -**
பாடலாசிரியர் பா. விஜய்

வார இதழ் ஒன்றில் வெளியான கவிதை, கட்டுரைகள். அழகான படங்களுடனும் வடிவமைப்புடனும் வெளிவந்துள்ளது.

*குமரன் பதிப்பகம், 3, முத்து கிருஷ்ணன் தெரு, சென்னை - 17. விலை ரூ.90.*

**தமிழில் யாப்பிலக்கண வளர்ச்சி -** முனைவர் ய. மணிகண்டன்

தமிழிலக்கண மரபில் தொன்மையும், வளமையும், தொடர்ச்சியும் கொண்ட யாப்பிலக்கண ஆய்வு நூல் இது.

*விழிகள் பதிப்பகம், 8, (எம்.139) 7ம் குறுக்குச் சாலை, திருவள்ளுவர் நகர், திருவான்மியூர் விரிவாக்கம், சென்னை - 41. விலை ரூ.125.*

**வானத்து வார்ப்புகள் -** குடந்தை கீதப்பிரியன்

வானொலியில் வெளியான ஆசிரியரின் நாடகங்கள்.

*சுஜாதாதேவி, 28/1, மூன்றாவது குறுக்குத் தெரு, கண்ணப்ப நகர், திருவான்மியூர், சென்னை - 41. விலை ரூ.30.*

**சுருங்கும் புவி இறுகும் பிடி -**
மைதிலி சிவராமன்

உலக மயமாக்கலின் விளைவால் பெண்கள் ஏற்கும் அவதிகள் குறித்த தெளிவான கட்டுரைகள்.

*சவுத் விஷன், 6, தாயார் சாகிப் 2வது சந்து, சென்னை - 2. விலை ரூ.30*

**மனச் சந்திப்பு -**
முக்தா சீனிவாசன்

பல்வேறு பத்திரிகைகளில் வெளியான ஆசிரியரின் இருபத்தாறு சிறுகதைகளின் தொகுப்பு.

*கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.40.*

# புக் பேங்க்!















சாருகேசி

# "லஞ்சம் கொடுக்க வேண்டாம்!"

"ஊழலை ஒழிப்பதில் நாம்தான் முன்னுதாரணமாக இருக்க வேண்டும்."

"என்னுடைய முக்கியமான வேலை, தனித் தனித் தீவுகளாக இருக்கும் அரசாங்கத்தின் பல துறைகளை ஒருங்கிணைத்து, பணிகளை நடத்திக் கொண்டு போவதுதான். பல அரசுத் துறைகளும் ஒன்றாகச் சேர்ந்து ஒரு குழுவாக மாவட்ட அளவில் செயல்பட்டு, மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்பதுதான் முக்கியக் குறிக்கோள்" என்று ஒரு சின்ன முன்னுரை தந்தார் காஞ்சிபுரம் கலெக்டர் க. ராஜாராமன்.

"ஒவ்வொரு மாவட்டத்திலும் சில முன்னுரிமைத் திட்டங்கள் இருக்கின்றன. உங்கள் ப்ரையாரிடி என்னென்ன?"

"ஒன்று கல்வி. இன்னொன்று சுகாதாரம்" என்றார் ராஜாராமன் மிகத் தெளிவாக. "மத்திய அரசும், தமிழக அரசும் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் 'எல்லோருக்கும் கல்வி' இயக்கத்தில் என் முழுக் கவனமும் இருக்கிறது. சமுதாயத்தின் ஈடுபாடு இதில் குறைவாக இருப்பதை உணர்கிறேன். 1500 கிராமக் கல்விக் குழுக்கள் உருவாக்கி, இதைச் செயல்படுத்த எண்ணியிருக்கிறேன். சமூகத்தில் கல்வி முக்கிய இடத்தைப் பிடிக்கிற அளவுக்கு அந்த இயக்கத்தைப் பலப்படுத்த விரும்புகிறேன்!"

என்ன செய்திருக்கிறார் கலெக்டர்? பார்ப்போம்:

ஒருங்கிணைந்த குழந்தைகள் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் 400 அங்கன்வாடிகளுக்குக் கட்டடமே இல்லை. தனிப்பட்ட அக்கறை எடுத்துக்கொண்டு, பஞ்சாயத்து யூனியன்களிலும், மாவட்ட பஞ்சாயத்துக்களிலும் இரண்டு கோடி ரூபாய் செலவழித்து 130 கட்டடங்களைக் கட்டி முடித்திருக்கிறார்கள். 1500 அங்கன்வாடி மகளிருக்குத் தனிப் பயிற்சி அளித்து, சுய



• க. ராஜாராமன்



• திருநாகேஸ்வர சுவாமி கோயில் குளம்



• சுத்தப்படுத்தப்பட்ட குளம்

• செங்கல்பட்டு மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில்....





உதவிக் குழுக்கள் வாயிலாக அவர்கள் வறுமைக் கோட்டைத் தாண்ட வைத்திருக்கிறார்.

கிராம சுகாதார நர்ஸ், மகளிரை நேரில் சந்தித்து, மகப்பேறு தொடர்பான விழிப்புணர்ச்சியை உண்டாக்கும் வகையில் தேவையான தகவல்களைத் தெரிவிக்கச் செய்திருக்கிறார்.

384 துணை சுகாதார நிலையங்கள், வசிக்கவே தகுதி அற்ற நிலையில் இருந்தன. இவற்றில் 65ஐச் செப்பனிட்டு, கிராம சுகாதார நர்ஸ் அங்கேயே தங்கும்படி செய்திருக்கிறார். கிராம அளவிலேயே ஆரோக்கியத்துக்கு முதலிடம் தந்துவிட வேண்டும், என்பதில் குறியாக இருக்கிறார். "பெண்களே தான் குடும்பக் கட்டுப்பாட்டு அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டும் என்று ஆண்கள் ஒதுங்கி விடக் கூடாது. அவர்களின் சக்திக்கோ, ஆண்மைக்கோ எந்தக் குறைபாடும் வராது என்று பிரசாரம் செய்கிறோம். நாங்கள் எடுத்துக் கொண்ட முயற்சியின் காரணமாக 55 ஆண்கள் அறுவைச் சிகிச்சை செய்து கொண்டார்கள். செங்கல்பட்டு மருத்துவமனைக்குப் போனபோது, பெண்கள் கட்டில் இல்லாமல், எங்கே பார்த்தாலும் தரையில் படுத்துக் கிடந்ததைப் பார்த்த போது வேதனையாக இருந்தது. 31 லட்ச ரூபாய் உடனே ஒதுக்கீடு செய்தோம். 100 கட்டில்கள் வாங்கினோம். பல்ஸ் ஆக்ஸிமீட்டர், மொபைல் எக்ஸ்ரே கருவி எல்லாம் வரவழைத்தோம். ஸ்டெரிலைசேஷன் வார்டுகளில் டி.வி வாங்கி வைத்தோம்."

## நிர்வாகத்தில் மனிதாபிமானம்

உடல் ஊனமுற்றோரின் சர்வே எடுத்து, பல்வேறு வயதைச் சேர்ந்த 30,400 பேரின் பட்டியலைத் தயாரித்திருக்கிறார்கள். இவர்களின் பிரச்னைகளை அறிந்து இவர்களுக்கு உதவ, எல்லா அதிகாரிகளுக்கும் பயிற்சிப் பட்டறை - ஒர்க்ஷாப் நடத்தியிருக்கிறார்கள். எல்லா அரசு அலுவலகங்களிலும், பள்ளிகளிலும் உடல் ஊனமுற்றோர் எளிதாக உள்ளே வர வசதியாக, படிக்கட்டுகள் இல்லாத தளம் (ramp) அமைத்து வருகிறார். தொகுப்பு வீடுகளில் 8 சதவிகிதம் உடல் ஊனமுற்றோருக்காகவே ஒதுக்கியிருக்கிறார். மத்திய அரசின் நேஷனல் டிரஸ்ட் மூலம் இரண்டரை லட்ச ரூபாயும், தொழில் துறையினரிடம் 14 லட்ச ரூபாய் நன்கொடையும் பெற்று, மனவளர்ச்சி குன்றியோர், ஆட்டிஸம் நோயினால் பாதிக்கப்



• பட்டு சுற்றுலா விழா

கள் இருக்கின்றன. இவற்றை உபயோகிக்கிற நிலையில் எப்போதும் வைத்திருக்க வேண்டுமானால் விவசாயிகளே இவற்றுக்குச் சொந்தக்காரர்களாக இருப்பது அவசியம். நானூற்றுச் சொச்சம் குளம் குட்டைகள் இருக்கின்றன. இவற்றைச் சமுதாயத்தின் பயனுக்குக் கொடுப்பதுதான் முறை. தண்ணீர் உபயோகிப்பாளர் சங்கங்கள் உருவாக்கி அவர்களே அவற்றைப் பராமரிக்கலாம். இது போன்ற சங்கங்கள் மதுரையில் இருப்பதாகவும், வருடத்துக்கு, ஏக்கருக்கு நூறு ரூபாய் வசூல் செய்கிறார்கள் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். பொதுப்பணித் துறையின் கட்டுப்பாட்டில் உள்ள ஆற்றுப் பாசன நீரைச் சாராத 234 ஏரிகளில் ஏரிப் பாசன சங்கம் அமைக்கப்பட்டு, உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டு, பல சங்கங்கள், பாராட்டும் வகையில் ஏக்கருக்கு நூறு ரூபாயை வசூலித்துத் திறம்படச் செயல்படத் தொடங்கியுள்ளன."

விவசாயிகளின் ஒத்துழைப்பையும், கண்காணிப்பையும் பெறும் நோக்கத்தோடு கலெக்டர் ஒரு செய்திமடலே வெளியிடுகிறார். விவசாயத்தையே நம்பி வாழும் ஓழம்பி கிராமப்பாசன மேம்பாட்டுத் திட்டத்தை 'ஒரு வெற்றிக் கதை' என்று பாராட்டியிருக்கிறார்!

பட்டோருக்கு, பகல் நேரப் பாதுகாப்பு மையம் - டே கேர் சென்டர் ஆரம்பித்திருக்கிறார். கில்டு அஃப் சர்வீஸ் அமைப்பின் மேற்பார்வையில் இது நடைபெறுகிறது. அதன் தலைவர் என்ற முறையில் ஆட்சியர் செயல்பட, அவர் மனைவி கல்யாணி ராஜா ராமன், அன்றாடப் பணிகளில் மிகுந்த அக்கறை காட்டி வருகிறார். "மிகுந்த மனத் திருப்தி அளிக்கும் பணி" என்கிறார் கல்யாணி.

## தெப்பக்குளங்களில் தண்ணீர்

காஞ்சிபுரம் குமர கோட்டத்தில், தெப்பக்குளத்தை சுமார் 30 வருடங்களுக்குப் பிறகு, மழைநீர் சேமிப்பு முறையைக் கையாண்டு நீர் முழுதும் தெப்பக்குளத்தில் சேருமாறு அமைத்திருக்கிறார். பலன் - பக்கத்தில், மேற்கு ராஜ வீதியில் கிணறுகளில் இரண்டடி நீர் ஏறியது! வரத ராஜபெருமாள் கோயில், மங்கள தீர்த்தம், அஷ்டபுஜம் தெப்பக்குளம், பவள வண்ணர் தெப்பக்குளம், புண்ய கோடீசுவரர் தெப்பக் குளம், சிங்கப் பெருமாள் கோயில் தெப்பக்குளம், கச்சபேசுவரர் தெப்பக்குளம் என்று கிட்டத்தட்ட, பத்து தெப்பக்குளங்கள் பழுது பார்க்கப்பட்டு மழை நீர் தேக்கி வைத்துக் கொள்ளும் அளவுக்கு மாற்றி அமைத்திருக்கிறார். ரோட்டரி கவர்னர் பாலாஜி ஒன்றரை லட்சம் ரூபாய் நிதி திரட்டிக் கொடுத்து உதவினாராம்.

## பாசன ஏரிகள் பராமரிப்பு

"மாவட்டத்தில் நிறைய பாசன ஏரி

## உன்னால் முடியும் பெண்ணே!

சுய உதவிக் குழுக்கள் கூட்டமைப்பு மட்டும் 112 இருக்கின்றன. இவர்கள் மூலமாக, பள்ளிக்கூடம் போகும் வயது வந்த குழந்தைகளை பள்ளிகளில் சேர்க்க ஊக்கமும் உற்சாகமும் தருகிறார் ராஜாராமன். 'குறிப்பாக, ஊனமுற்ற மற்றும் தொழிலில் ஈடுபடும் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்க உதவுங்கள்' என்று வேண்டுகோள் விடுக்கிறார். சுய உதவிக் குழு மகளிருக்காக வெளியிடப்படும் 'உன்னால் முடியும் பெண்ணே' செய்தி மடலில் வெளியிடப்பட்டிருக்கும் ஓர் அறிக்கை:

"அன்பார்ந்த சுய உதவிக்குழு சகோ

தரிகளே!

எந்தச் சூழ்நிலையிலும், யார் கேட்டாலும், லஞ்சம் கொடுக்காதீர்கள். அப்படி யாராவது கேட்டால், மாவட்ட ஆட்சியருக்குத் தொலைபேசியில் உடனே தொடர்பு கொண்டு தெரிவிக்கவும்."

இதைச் சுட்டிக் காட்டியதும், "ஊழலை ஒழிப்பதில் நாம்தான் முன்னுதாரணமாக இருக்க வேண்டும். லஞ்சத்தில் ஈடுபடுவோரின் மனச்சாட்சியைத் தொட வேண்டும். எங்கே ஊழல் தொடங்குகிறது? விழாக்களுக்குச் செலவு செய்யும்போது, அதை எப்படியாவது வசூலித்துவிட வேண்டும் என்று இது ஆரம்பிக்கிறது. நான் இந்த மாதிரி விழாக்களுக்கு எனக்கு ஒதுக்கப்பட்ட நிதியிலிருந்துதான் செலவிடுகிறேன். வெளியே போனால், மதிய உணவுக்கு நானே பணம் கொடுத்து விடுகிறேன்!" என்றார் ராஜாராமன், இயல்பாக.



"தலைவர் எதுக்கு கட்சியை தாய் கட்சியோட இணைக்கணும்னு சொல்றார்?"

"கட்சித் தலைமையைவிட கோஷ்டித் தலைவரா இருக்கிறதுலதான் சுவாரஸ்யம் அதிகமாம்!"

- எஸ். தமிழ்மணி

அண்ணா முதலமைச்சராக இருந்தபோது சொன்னது எனக்கு இன்னும் நினைவிருக்கிறது!"

## அதிகாரிகளும், பொதுமக்களும்

"அதிகாரிகளுக்கு நவீன நிர்வாகத் துறையில் பயிற்சிகள் கொடுப்பதில் எனக்கு விருப்பம் அதிகம். கிட்டத்தட்ட உயர் அதிகாரிகள் எல்லோரும் ஈமெயில் ஐடி வைத்திருக்கிறார்கள். மக்களின் சேவை ஒன்றையே மனத்தில் கொண்டு, வெளிப்படையான - டிரான்ஸ்பரன்ட் நிர்வாகம் செய்து வருகிறோம். மக்கள் பிரச்னைகளை எப்படிக் கையாள வேண்டும் என்று அதிகாரிகள் அறிந்து கொள்ளுவது அவசியம். அதே போல, தங்களுக்கு வேண்டியதைச் செய்து கொள்ள, அரசாங்கம் ஓர் உதவிகரமான அமைப்பே என்ற எண்ணம் மக்களிடையே உருவாக வேண்டும். அரசாங்கம் ஒரு ஃபெஸிலிடேட்டர்!"

"அப்படியானால் ஊழியர்களை எந்த அளவுக்குத் தயார் செய்கிறீர்கள்?"

"பார்ட்டிசிபேட்டரி லேர்னிங் அன்ட் ஆக்ஷன் (PLA) என்ற அமைப்பில், ஊழியர்களின் செயல் திறனை மேம்படுத்தப் பயிற்சி கொடுத்து வருகிறோம். இதுவரை 150 ப்ளூ லெவல் ஊழியர்களுக்குப் பயிற்சி முடிவடைந்துவிட்டது. இந்தப் பயிற்சிக்குப் போகும்போதெல்லாம் நானும் பொதுமக்களோடு ஒருவனாகத் தரையில்தான் உட்கார்ந்து கொள்ளுகிறேன். 'மக்களிடம் போய், அவர்களோடு இருந்து உழையுங்கள்' என்று

## சுற்றுலா வளர்ச்சியில்...

மாவட்டத்துக்கு ராஜீவ் காந்தி தேசிய குடிநீர்த் திட்டத்தின்படி 40 கோடி ரூபாயும், முழுச் சுகாதாரத் திட்டத்தின் கீழ் 20 கோடி ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளன. (இதையும் பொதுமக்களிடம் தமது செய்திமடலில் தெரிவிக்கிறார் கலெக்டர்!) இவை மிகப் பெரிய திட்டங்கள்.

அதேபோல் சுற்றுலா வளர்ச்சியில், மகாபலிபுரம் மேம்பாட்டுக்கு 8 கோடி ரூபாயும், கைலாச நாதர் கோயில் உட்பட இங்கே சுற்றுலா வளர்ச்சிக்கு 80 லட்சம் ரூபாயும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. 'ஸில்க் ஃபெஸ்டிவல்' எனப்படும் பட்டு விழாவை ஏற்பாடு செய்து, உள்நாட்டு, அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகளை ஈர்த்து வருகிறார். இதை ஒரு கலாசார விழாவாகவே நடத்துகிறார்.

உழைக்கும் சிறார் நிலையை மாற்றியமைக்க, ஸ்விஸ் டெவலப்மென்ட் அமைப்பின் 30 லட்ச ரூபாய் நிதி உதவியோடு, மாற்று முறைகள் கற்பிக்க அக்கறை காண்பிக்கிறார்...

இவற்றை எல்லாம் எடுத்துச் சொல்ல, கலெக்டர் முதலில் நமக்கு ஒதுக்கிய நேரம் 15 நிமிடங்களே. ஆனால் பேட்டி முடியும் போது சரியாக ஒரு மணி நேரம் ஓடிப் போனதே தெரியவில்லை!

# சுகமான தேடல்கள்



அன்னையிடம்
தெய்வீகம் தேடுகிறேன்
தந்தையிடம்
பண்பினைத் தேடுகிறேன்

ஆசிரியரிடம்
மெய்ஞானம் தேடுகிறேன்
தெய்வத்திடம்
நிம்மதியைத் தேடுகிறேன்

தென்றலில்
வாசம் தேடுகிறேன்
உயிர்க்காதலியிடம்
சுவாசம் தேடுகிறேன்

மூங்கிலில்
இசையைத் தேடுகிறேன்
கார்முகிலில்
வான்மழை தேடுகிறேன்

வீணையில் விரல்களின்
அபிநயம் தேடுகிறேன்
பார்வைகளில்
பௌர்ணமி தேடுகிறேன்

சிநேகிதியிடம்
பிரியங்கள் தேடுகிறேன்
சிநேகிதனிடம்
நன்றியைத் தேடுகிறேன்

தேடுங்கள்... இன்னமும்
தேடுங்கள்... கிடைக்கின்றவரை!

தேடல் ஒரு தவம்
கிடைத்தால் அது வரம்
தேடல் என்பது சுகமானது!

முரளி கௌசிகன்

**சீ**ங்கவரி ஏதும் கட்டாமல் இறக்குமதி செய்யப்பட்ட செய்திச் சரக்கு!

• நாம் வீட்டில் நாய், பூனை வளர்ப்போம். இதோ தாய்லாந்தில் வசிக்கும் பத்து வயதுப் பையன் வாட்டனா தோங்ஜன் வீட்டில் முதலை வளர்க்கிறான். மூன்று வருடங்களுக்கு முன், உள்ளூர் ஏரி அருகில் கண்டெடுத்த முதலைக்குட்டியை வீட்டுக்குக் கொண்டு வந்தார் வாட்டனாவின் தந்தை. இப்போது அந்த முதலைக்குட்டி ஒரு மீட்டர் நீளத்துக்கு வளர்ந்துவிட்டது. எடை நாற்பது கிலோ. தினமும் மீன்களைச் சாப்பிடக் கொடுக்கிறார்கள். இவர்கள் வீட்டில் வளரும் இரண்டு நாய்களோடு, 'கெங்' என்ற பெயருடன் முதலையும் வளைய வந்து கொண்டிருக்கிறது. தினமும் முதலைக்கு 'ஈ காட்டு' என்று பல்துலக்கி விடுவது வாட்டனா பயல்தானாம்.

• செலீனா லிங். இவர் தம் காதலரைத் திருமணம் செய்து கொள்ளத் திட்டமிட்டு, அருகிலுள்ள கத்தோலிக சர்ச்சில் பதிவு செய்து கொண்டார். ஆனால் திருமண நாளுக்கு ஒரு மாதம் முன்பு, "உங்கள் திருமணத்தை, எங்கள் சர்ச்சில் நடத்துவதற்கு இல்லை" என்று சொல்லி விட்டார்கள். அதற்கு அவர்கள் கைவிரித்து சொன்ன காரணம், செலீனா, குடும்பக் கட்டுப்பாடு, கருக்கலைப்பு குறித்து, ஆலோசனைகள் வழங்கும் மையத்தில் பணி புரிகிறார். அது, மதக் கோட்பாடுகளுக்கு எதிரானது என்பதுதான்.



• ரஷ்ய ராணுவ மையங்களில் சிகரெட் சப்ளை நிறுத்தப்பட்டு விட்டது. சிகரெட் பிடிக்க வேண்டும் போல இருந்தால் இதைச் சாப்பிடுங்கள் என்று லாலிபாப் சப்ளை நடக்கிறது!



• ஜப்பானிய பாதுகாப்பு அறை.

• லண்டனைச் சேர்ந்த பால் லிஞ்ச் ஒரு சாதனையாளர். ஆம். தரையில் ஒரே ஒரு விரலை ஊன்றியபடி 124 தடவை தண்டால் எடுத்து, கின்னஸ் புத்தகத்தில் இடம் பிடித்தவர். (அவர் 125வது தடவை முயற்சித்தபோது, விரலில் எலும்பு முறிவு ஏற்பட்டு விட்டதாம்!) விஷயம் அது வல்ல, அவர் அண்மையில் லண்டனிலிருந்து, ஸ்காட்லாந்துக்குப் போக விமான நிலையத்துக்கு வந்தார். ஆனால் தமது பாஸ்

# "கல்யாணமா... நோ... நோ!"

**கௌதம் ராம்**



போர்ட்டை மறந்து வீட்டில் வைத்துவிட்டு, வந்துவிடவே, பிரச்னையாகி விட்டது.

விமான நிலைய அதிகாரிகள், அவரது புகைப் படம் கொண்ட வேறு ஏதாவது அடையாளம் காட்டினால் கூடப் போதும் என்றவுடன், தம் பையைத் திறந்து உள்ளே வைத்திருந்த கின்னஸ் சாதனைப் புத்தகத்தில் இடம் பெற்றிருந்த தம் புகைப்படம் ப்ளஸ் விவரங்களைக் காட்டினார். புகைப்படத்தில் இருப்பது அவர் தான் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டபின், அதிகாரிகள் அவரைப் பயணம் செய்ய அனுமதித்தனர்.

இன்னும் ஒரு உலக சாதனை புரிய ஸ்காட்லாந்து போய்க் கொண்டிருந்த அவருக்கு, வாழ்த்துச் சொன்னார்கள் அதிகாரிகள்.

''உங்க பையனுக்கு ஆனாலும் ரொம்பதான் குசும்பு சார்!''

''ஏன்?''

'' 'காட்டில் வசிக்கிற எவையேனும் நான்கினைப் பற்றிச் சொல்'னு கேட்டதுக்கு 'வீரப்பன், அதிரடிப்படை, கர்நாடக போலீஸ் நாகப்பா'ன்னு பதில் தர்றான் சார்!''

- பாஸு



• நம் ஊர் வங்கிகளில், பாதுகாப்புப் பெட்டக அறை உள்ள தல்லவா? அது போல, வீடுகளுக்கு 'பாதுகாப்பு அறை' வடிவமைத்து விற்கிறது ஜப்பானின் மிஸவா ஹோம்ஸ் என்ற நிறுவனம். ஆனால் இந்த அறைகள், விலையுயர்ந்த பொருட்களைப் பாதுகாக்க அல்ல. வன்முறையும், கொலை கொள்ளைகளும் அதிகரித்து வரும் இந்தக் காலத்தில், ஏதாவது ஆபத்து என்றால், இந்த அறைக்குள் போய், கதவை மூடிக் கொண்டு, பாதுகாப்பு தேடலாம்.

• 'சாத்தான் பாறை' என்று இந்த இரு பாறைகளுக்கும் பெயர். ஆஸ்திரேலியாவில் இருக்கிறது. எந்த நேரமும் உருண்டு, கீழே இருப்பவர்களை நசுக்கிவிடுமோ என்று பயமுறுத்திக் கொண்டிருப்பதால் இந்தப் பெயர். ஆனால் மலைப் பகுதியில், ஸ்டிராங்காகவே பல்லாண்டுகளாக இவை உட்கார்ந்திருக்கின்றன. ஆஸ்திரேலியாவுக்கு வரும் சுற்றுலாப் பயணிகள் இங்கே வந்து, படத்திலிருப்பவரைப்போல, இரு கைகளாலும் பாறைகளை ஒரே நேரத்தில் உருட்டித் தள்ளுவது போல புகைப் படம் எடுத்துக் கொள்கிறார்கள்.

## அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார்; நடக்கும்!

### அக்டோபர் 9 முதல் 15 வரை

**மேஷம் :** கிரக சஞ்சாரம் இந்த வாரம் உங்களுக்குச் சாதகமா இருக்கறதால நல்ல திருப்பம் உண்டாகும். பல வழிகள்ல இருந்து வந்த தொல்லைகள் விலகும். பொருளாதாரம் திருப்திகரமா இருக்கும். வரவேண்டிய பாக்கித் தொகை வந்து சேரும். குடும்பத்துல ஒற்றுமை நிலவும். இதுவரை தாமதமாகி வந்த சுபகாரிய முயற்சிகள் இப்ப நடக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பெண்களுக்கு உற்சாகமான மனநிலை உண்டாகும். நகை, நட்டு என்று பர்ஸ் எகிறலாம். காண்ட்ராக்ட்ஸ், சிமெண்ட்ஸ், இயந்திரம், தோல் பொருள் தொடர்பான துறைகளில் ஆதாயம் கிடைக்கும்.

**ரிஷபம் :** இந்த வாரம் சரளமான பணவசதி கிடைக்கும். அலுவலகப் பணியாளர்களுக்குச் சில பிரச்னைகள் குழப்பங்கள் வந்து நீங்கும். இதனால கலங்க வேண்டாம். சிலருக்குக் கூடுதல் பொறுப்புகள் உண்டாகும். உங்க திறமையால எந்தக் காரியத்தையும் வெற்றிகரமாக முடிச்சிடுவீங்க. அதனால பெயர், புகழ். அதிகரிக்கும். குடும்பத்துல சந்தோஷம் கொப்பளிக்கும். யாருக்கும் நீங்க ஜாமீன் போட வேண்டாம். என்னதான் எண்ணி எண்ணி செலவழிச்சாலும் செலவு கட்டுக்கடங்காது.

**மிதுனம் :** உங்களோட புத்திசாலித்தனம் இந்த வாரம் வெளிப்படப் போகுது. சிலர் எதிர்பாராத பயணம் மேற்கொள்ள வேண்டிவரலாம். அதனால நல்ல திருப்பம் உண்டாக வாய்ப்பிருக்கு. உத்தியோகத்தில் முன்னேற்றம் உண்டு. சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் ஆகியவை உண்டாகும். புதிய முயற்சிகள் வெற்றி தரும். வியாபாரிகளுக்கு முன்னேற்றம் உண்டு. கொடுக்கல், வாங்கல் லாபம் தரும். வெளிநாட்டுத் தொடர்புடைய தொழில்களால் ஆதாயம் நிச்சயம். சிலருக்கு இதுவரை தாமதமடைந்த திருமணம் இப்போது நடக்க வாய்ப்பிருக்கு. நண்பர்கள் உறவினர்கள் ஓடோடி வந்து உதவுவாங்க. பெண்களுக்குப் புதிய பொருள் சேர்க்கை நிகழும்.

**கடகம் :** இந்த வாரம் பணவசதிக்குப் பஞ்சமில்லை. எதிர்ப்புகள் விலகும். மனத்தில் துணிச்சலும் தன்னம்பிக்கையும் கூடும். இதுவரை தாமதமாகிவந்த காரியங்கள், இடையூறு நீங்கி அனுகூலம் உண்டாகும். உங்க திறமை, புத்திசாலித்தனம் வெளிப்படும். பதவி உயர்வு, இடமாற்றம் ஆகியவை எதிர்பார்த்தபடி நன்மையில் முடியும். வேலை இல்லாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். சிலர் வெளிநாடு போவதற்கான சூழ்நிலை ஏற்படும். சுயமாகத் தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. கணவன் மனைவிக்குள் மகிழ்ச்சியும் அமைதியும் உண்டாகும்.

**சிம்மம் :** இந்த வாரம் எல்லா காரியமும் உங்களுக்குச் சாதகமா இருக்கும். பொருளாதாரம் அபிவிருத்தி அடையும். பணம் பல வழிகள்ல இருந்து வரும். சிலர் எதிர்பாராத பயணம் மேற்கொள்ள சந்தர்ப்பம் வரலாம். அலுவலகப் பணியாளர்கள் அனுகூலமான திருப்பத்தைப் பெறுவாங்க. சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் ஆகிய நல்ல பலன்கள் உண்டு. புதிய முயற்சிகள் கைகூடும். மதிப்பு அந்தஸ்து உயரும். வேலை சம்பந்தமாகச் சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. புத்தகம், பத்திரிகை, மருத்துவம் போன்ற இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். புதியவர்கள் அறிமுகம் கிடைக்கும். அதனால் சிலருக்கு ஆதாயம் உண்டு.

**கன்னி :** இந்த வாரம் நீங்க தொடங்கப் போகும் புதிய முயற்சிகள் வெற்றி பெறும். மறைமுக நேர்முக எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. வெளியூர் மற்றும் வெளிநாட்டிலிருந்து நீங்க எதிர்பார்த்துக்கிட்டிருக்கிற நல்ல செய்தி இப்போ வந்து மகிழ்ச்சி தரப் போகுது. அலுவலகத்தில் ஆரோக்கியமான

சூழ்நிலை உருவாகும். குடும்பத்துல ஒற்றுமை நிலவும். திருமணம் போன்ற சுபகாரிய முயற்சிகள் கூடிவர வாய்ப்பிருக்கு. கருத்து வேறுபாடு காரணமாக முறைத்துக் கொண்டிருந்தவர்கள் இப்போ ஒன்று கூடுவாங்க. அழகு சாதனப் பொருட்கள், ஜவுளி, கம்ப்யூட்டர், அலங்காரப் பொருட்கள் ஆகிய இனங்கள் ஆதாயம் கொண்டு வரும்.

**துலாம் :** இதுவரை இழுத்தடித்துக் கொண்டிருந்த பிரச்னை இப்போ முடிவடையும். நண்பர்கள், உறவினர்கள் ஓடோடி வந்து உதவுவாங்க. மதிப்பு, அந்தஸ்து எல்லாம் உயரப் போகுது. எடுத்த காரியங்களில் வெற்றி உண்டு. அப்பப்போ இருந்துவந்த சிறு சிறு தொல்லைகள் இப்போ காணாமப் போகும். அலுவலகத்தில் மேலதிகாரிகள் பாராட்டு உண்டு. பெண்களுக்கு இது சந்தோஷமான வாரம். பணவசதி பலவழிகள்ல வரும். வியாபாரிகள் புதிய தொழில் தொடங்க வாய்ப்பிருக்கு.

**விருச்சிகம் :** இந்த வாரம் மனசுல உற்சாகம் கரைபுரளப் போகுது. புதிய முயற்சிகள்ல வெற்றி உண்டு. தெய்வீக ஈடுபாடு கூடும். அலுவலகத்தில் சகஜமான நிலை இருக்கும். சிலருக்குப் பாராட்டு, புகழ் உண்டு. எவ்வளவு கஷ்டமான வேலையையும் உங்க திறமையில நிறைவேற்றிடுவீங்க. சிலருக்கு வெளிநாடு போகும் எண்ணம் நிறைவேறும். புதியவங்க அறிமுகம் ஏற்படும். அதன் மூலமா ஆதாயம் உண்டு. அரசியல்வாதிகள் மதிப்பு அந்தஸ்து உயரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். ரியல் எஸ்டேட் பிஸினஸ் ஆதாயம் தரும்.

**தனுசு :** இந்த வாரம் மனசுல தன்னம்பிக்கையும் உறுதியும் ஏற்படும். எந்தக் காரியத்தையும் தலைகீழா நின்னாவது முடிச்சிடுவீங்க. வேலை இல்லாம இருந்தவங்களுக்கு, அதுக்கான வாய்ப்புத் தேடி வரும். சுயமா தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. அலுவலகப் பணியாளர்கள் சிலருக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரும். கடுமையான உழைப்பின் காரணமாகப் பெயர் புகழ் கூடும். வியாபாரிகளுக்குக் கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். ஆடை ஆபரணங்கள், பொன், வெள்ளி நவரத்தினம், எலக்டிரிகல், கம்ப்யூட்டர், மருத்துவம் ஆகிய இனங்களில் லாபம் உண்டு. மனை, நிலம், வீடு வாங்கும் முயற்சிகள் கை கூடும்.

**மகரம் :** இதுவரை மனத்தை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்த குழப்பம் நீங்கும். இதனால் மனத்தில் அமைதி ஏற்படும். பணத்துக்குப் பஞ்சமில்லை. உங்கமேல விரோதமா இருந்தவங்க மனம் மாறுவாங்க. அலுவலகத்தில் இனிமையான சூழல் நிலவும். புதிய வேலை முயற்சியில் இருக்கறவங்களுக்கு வெற்றி உண்டு. வேலை விஷயமா சிலர் வெளியூர் பயணம் போக வாய்ப்பிருக்கு. குடும்பத்துல கணவன் மனைவிக்குள்ள இருந்த 'கர்புர்' விலகும். மகிழ்ச்சி நிலவும்.

**கும்பம் :** இந்த வாரம் எந்தச் சிக்கலான காரியமென்றாலும் சாமர்த்தியமா முடிச்சிடுவீங்க. இதனால பாராட்டு, புகழ் கிடைக்கும். முகத்துல வசீகரம் கூடும். சரளமான பணவசதி கிடைக்கும். அலுவலகத்தில் சுதந்திரமா செயல்பட வாய்ப்புக் கிடைக்கும். சிலருக்குப் புதிய பொறுப்புகள் பதவிகள் வந்து சேரும். வெளியூர் பயணம் மேற்கொள்ள வேண்டி வரும். எதிர்பார்த்திருந்த நல்ல தகவல் இப்போது வந்து சந்தோஷப்படுத்தும். வெளிநாட்டுத் தொடர்பால் பலன் உண்டு. குடும்பத்துல சுப காரிய நிகழ்ச்சிகள் நடப்பதற்கான சூழல் ஏற்படும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் உண்டு. பெண்கள் உடல் நலன்லே கவனம் வைப்பது நல்லது.

**'பட்டிமன்ற புகழ்' பாரதியின் கணவர் பாஸ்கருக்கு (மீனம்) பண வசதி சரளமாகுமாமே!**



**மீனம் :** மனசுல உற்சாகம் கூடும். சந்தோஷமான சம்பவங்கள் நடக்கப் போகுது. சரளமான பணவசதி. எடுத்த காரியத்தில் வெற்றி ஆகியவை உண்டாகும். எதிர்ப்புகள் மாயமாகும். இதனால புது தெம்பு ஏற்படும். இதுவரை தாமதமாகி வந்த பதவி உயர்வு, இடமாற்றம் இப்போ வந்து சேரும். இதன் காரணமா வெளியூர் போக வாய்ப்பிருக்கு. வீடு, வாகனம், மனை வாங்க வாய்ப்பிருக்கு. இயந்திரம், மருத்துவம், தோல் பொருள், எலக்ட்ரானிக்ஸ் துறைகள்ல ஆதாயம் உண்டு.

ராகவன் தம்பி

# சாகசபதி!

**"ஒவ்வொரு இதயத்திலும் மனித நேயமும், சகோதரத்துவமும் ததும்பியதைக் கண் கூடாகப் பார்த்து நெகிழ்ந்துபோனேன்."**

அபாயம் நிறைந்த ஆபரேஷன்கள் இவருக்குச் சர்க்கரைப் பொங்கல் மாதிரி! காந்திநகர் அக்ஷர் தாம் கோயிலில் நுழைந்த பயங்கரவாதிகளைச் சுட்டுக் கொன்று வீரச் செயல் புரிந்த பிரிகேடியர் ராஜ் சீதாபதி, தமிழர்!

சென்னை, ஹிந்து உயர்நிலைப் பள்ளியிலும், தாம்பரம் கிறிஸ்துவக் கல்லூரியிலும் படித்தவர். ராஜ் சீதாபதியின் தந்தை ராணுவத்தில், மருத்துவராகப் பணியாற்றியவர் என்பதால், தாமும் பூனா தேசிய ராணுவக் கல்லூரியில் சேர்ந்து மிலிட்டரி சயின்ஸ் பட்டம் பெற்றார். ஆராய்ச்சி பட்ட மேற்படிப்புக்காக, ராஜ் சீதாபதி தேர்ந்தெடுத்த தலைப்பு: இந்தியாவில் பயங்கரவாதத்தின் எதிர்காலம்.

1970ல் இந்திய ராணுவத்தில் சேர்ந்த இவர், மறு வருடமே, இந்திய பாகிஸ்தான் போரில் பங்கேற்றிருக்கிறார். இது தவிர, பயங்கரவாதிகளுக்கு எதிராக இவர் பங்கேற்ற ஆபரேஷன்கள் எண்ணற்றவை.

ஜம்மு காஷ்மீரின் குப்வாராவிலும், உல்ஃபாக்களுக்கு எதிராக வடகிழக்கு மாநிலங்களிலும், பஞ்சாப் தீவிரவாதிகளை நசுக்கிய ஆபரேஷன்களிலும் ராஜ் பரபரப்பாகச் செயலாற்றியிருக்கிறார். அவற்றையெல்லாம் பாராட்டித் தரப்பட்ட வீர மெடல்களும், உயரிய விருதுகளும் இவரை அலங்கரிக்கின்றன.

ஒவ்வொரு ராணுவ வீரனும் மிகவும் பெருமைப்பட்டுக் கொள்ளும் 'விசிஷ்ட் சேவா' பதக்கமும் பெற்றிருக்கும் இவரது கழுத்தில் குஜராத் கோயில் ஆபரேஷனும் ஒரு வெற்றிமாலையாகவே விழுந்திருக்கிறது.

"எப்படி ஸார் அந்த அனுபவம்?" என்று கேட்டால், சாதனை என்கவுன்டர் பற்றிப் படு கேஷுவலாக பதில் வருகிறது.

"இருபத்து நான்காம் தேதி மாலை, நான் என் வீட்டில் டென்னிஸ் விளையாடிக் கொண்டிருந்தேன். என்னுடைய மொபைல் தொலைபேசியில் ஓர் அழைப்பு. அழைத்தவர் என்னுடைய டைரக்டர் ஜெனரல்.

"சுவாமி நாராயண் மந்திரில் பயங்கரவாதிகள் ஊடுருவிட்டார்கள். பலரைச் சுட்டுக் கொண்டு, கோயில் வளாகத்திலிருந்து பக்தர்களை, பிணைக் கைதிகளாக வைத்திருக்கிறார்கள். உடனே மீட்டாக வேண்டும்" என்று ஆணையிட்டார். இது மாதிரியான எமர்ஜென்ஸி தகவல்கள் கிடைக்கும்போது, நாங்கள் தயாராகிக் கிளம்ப, எங்களுக்குக் கொடுக்கப்படும் நேரம் முப்பதே நிமிடங்கள்தான். எந்த நேரத்திலும் வெளிக் கிளம்பத் தோதாக, ஒரு தோள் பையை எப்போதும் தயாராக வைத்திருப்போம். இதற்கு 'அலர்ட் பேக்' என்று பெயர். உடனே

அதைத் தூக்கிக் கொண்டு கிளம்பிவிட்டேன். உடனடியாக ஐம்பது வீரர்கள் கொண்ட குழுவுடன் விமானப்படை விமானம் மூலம் காந்திநகர் கிளம்பினோம். தில்லிக்கும் அகமதாபாத்துக்கும் இடையே உள்ள பயண நேரம் தொண்ணூறு நிமிடங்கள். கிடைத்த இந்த இடைவெளியில், அங்கு செயல்படுத்த வேண்டிய திட்டங்களைப் பற்றி என்னுடைய குழு வீரர்களுக்கு விளக்கினேன். டெல்லியிலிருந்து கோயில் நிலவரம் பற்றிய தகவல்கள் கிடைத்துக்கொண்டே இருந்தன.



• ராஜ் சீதாபதி



• நாராயண்கோயில்

"இரவு பத்து மணிக்கு காந்திநகர் அடைந்தோம். அங்கு கூடியிருந்த பொதுமக்கள் எங்களை வாழ்த்தியனுப்பினார்கள். குஜராத் மாநில டி.ஜி.பி, ஐ.ஜி மற்றும் மாநில கமாண்டோ தலைவர் ஆகியவர்கள் எங்கள் குழுவினை ஆலயத்தில் உள்ள ஓர் அறைக்குள் அழைத்துச் சென்று பயங்கரவாதிகள் பதுங்கியிருக்கும் இடங்கள் குறித்து விளக்கினார்கள். செயல்பட வேண்டிய திட்டங்கள் குறித்து எங்கள் கமாண்டோக்களுக்கு மூன்று முக்கியமான விஷயங்களைத் தெளிவுபடுத்தினேன். பக்தர்களைப் பத்திரமாக மீட்க வேண்டும். ஆலயத்துக்கு எவ்விதமான சேதாரமும் நேரக் கூடாது. மூன்றாவதாக, பயங்கரவாதிகளை வெளியே வரவழைத்து, தாக்குதல் மேற்கொள்ள வேண்டும்.

"இதையடுத்து, இரவிலும் பார்க்கக்கூடிய பைனாகுலர் பொருத்தப்பட்ட இயந்திரத் துப்பாக்கிகளுடன் எங்கள் கமாண்டோக்கள் பயங்கரவாதிகளின் நடமாட்டத்தைத் தீவிரமாகக் கண்காணிக்க ஆரம்பித்தனர். ஆனால் திடீரென்று அவர்கள் எங்களை நோக்கி குண்டு மழை பொழியவே, நாங்கள் பதிலடி கொடுக்க ஆரம்பித்தோம். அவர்கள் இருந்த இடம் இருண்டு கிடந்ததால், எங்களால் அவர்கள் இருக்குமிடத்தைத் துல்லியமாக அறிய முடியவில்லை.

"விடியற்காலை,வெளிச்சக் கதிர்விழ ஆரம்பித்ததும் நாங்கள் பயங்கரவாதிகளைச் சுடத் தொடங்கினோம். அவர்களும் எங்களை நோக்கிச் சரமாரியாகச் சுட்டார்கள். இதில் எனக்கு முன்னால் சென்று கொண்டிருந்த எங்கள் கமாண்டோ கழுத்தில் குண்டடிபட்டு அதே இடத்தில் வீர மரணம் அடைந்தார். நான் மெள்ள முன்னேறினேன். அப்போது மாடியிலிருந்து ஒரு பிணம் என் முன்னால் விழுந்தது. அப்பிணத்தை, சோதித்துப் பார்க்க, நான் குனிந்தபோது, என்னை உரசிக் கொண்டு, ஒரு குண்டு பாய்ந்தது. எனக்கு வலப்புறத்தில் சுமார் இருபத்து ஐந்து மீட்டர் தூரத்தில் அவர்கள் இருப்பது எனக்கு தெரிந்துவிடவே, சற்றும் தாமதிக்காமல், அவர்கள் இருந்த இடத்தை நோக்கிச் சுட்டுக்கொண்டே முன்னேறினோம். இருவர் குண்டடிபட்டுச் சரிந்தார்கள்" என்று வீரச் செறிவுடன் விவரித்தார்.

அடைபட்டுக் கிடந்த பக்தர்களைப் பத்திரமாக வெளியேற்றியபோது, வாழ்த்தொலியும், அழுகையுமாக அந்த இடமே கொண்டாடியதாம்.

" துணைப் பிரதமர் தொடர்பு கொண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்தார். இந்த ஆபரேஷனின் போது நான் மிகவும் மகிழ்ச்சியும் பெருமையும் அடைந்த விஷயம் என்னவென்றால், அங்குள்ள சமூக சேவை மையங்கள் காட்டிய அதிக அக்கறைதான்! ஒவ்வொரு இதயத்திலும் மனித நேயமும், சகோதரத்துவமும் ததும்பியதைக் கண் கூடாகப் பார்த்து நெகிழ்ந்து போனேன்" என்கிறார் அலர்ட்பேக்கைத் தயார் நிலையில் வைத்து, அடுத்த சாகசத்துக்காகக் காத்திருக்கும் ராஜ் சீதாபதி.

வண்ணப்படம் : யோகா


பக்கத்துக்குப் பக்கம் பரவசம்!
தீபாவளி ஜோக்ஸ்... சம்திங் ஸ்பெஷலாச்சே!
சரி... சீக்கிரமா வாங்குங்க. க்யூ நிக்குதில்லே!
பார்க்க, படிக்க, பாதுகாக்க அட்டகாச பொக்கிஷம்!
விலை ரூ.70/-
உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்
கூரியர் அல்லது தபாலில் பெற ரூ.100 அனுப்பவும்

# சுண்டல்

பள்ளிக்கூடம் விட்டு வந்த பின்பும், விடுமுறை நாட்களிலும் மெரினா பீச்சில் சுண்டல் விற்கிறான் கிருஷ்ணமூர்த்தி. நொச்சிக் குப்பத்தைச் சேர்ந்த பையன். ஏழாங்கிளாஸ் படிக்கிறான். இவனது அம்மா, வேர்க் கடலை விற்கிறார்.

இரண்டு ரூபாய்க்கு மெரினா ஸ்பெஷலான தேங்காய், மாங்காய், பட்டாணி சுண்டல் வாங்கி மென்றபடியே, சுண்டல் வியாபாரம் செய்ய என்னென்ன டெக்னிக்குகளை கிருஷ்ணமூர்த்தி கையாள்வான் என்று கேட்டபோது, எம்.பி.ஏ வகுப்பு எடுக்கிற தோரணையுடன் பேச ஆரம்பித்தான்.

"நான் நேரா சுண்டல் விற்க வந்துடலை சார்! முதல்ல தண்ணீர் பாக்கெட் விற்றேன். வேர்க்கடலை விற்றேன். அப்புறம்தான் சுண்டல் விற்க அனுப்பினாங்க. ஒரு கையில் சுண்டல் பாத்திரம். இன்னொரு கையில் முறுக்கு டின். இரண்டையும் தூக்கிக்கிட்டு பீச்சுல சுத்தி வரணுமில்ல. எனக்கு பீச்சுல அஞ்சாறு வருஷ அனுபவம் சார்!

"சுண்டல் முறுக்கு விற்க, ஒவ்வொருத்தரு. ஒவ்வொரு விதமான டெக்னிக் பண்ணணும். பசங்களுடன் பீச்சுக்கு வர்ற புருஷன், பெண்டாட்டி என்றால் போதும். குழந்தைகள், சுண்டல், முறுக்கு வாங்கித் தரச் சொல்லிக் கேட்பாங்க.

"பெரும்பாலான காதல் ஜோடிகள், தாமாகவே சுண்டல் வாங்கி விடுவாங்க. இல்லன்னா கொஞ்ச நேரம் அங்கே நின்னாலே போணி ஆகிவிடும்.

"வயசானவங்கன்னா, 'ஐயா! இந்தச் சுண்டலை விற்றாத்தான் எங்களுக்கு வருமானம். வாங்கிக்குங்க!'னு சொல்வேன். பரிதாபமாக ஒரு பார்வை பார்த்தால் கூட பலன் கிடைக்கும்.

"நல்லா ருசியா இருக்கும்! சுத்தமா தயார் பண்ணினது சார்! முறுக்கு நல்லா கரகரன்னு இருக்கும்" என்று சரக்கு பற்றிச் சொல்வேன்.

"முதல் போணி சார்!"னு சொல்லியே பலரிடமும் விற்பது உண்டு.

"சிலபேர், விற்காமல் மீதியான சுண்டலை, தண்ணீரில் அலசிவிட்டு, மறுநாள் புது சுண்டலாக்கி விற்பார்கள். ஆனால் நாங்க அப்படிச் செய்ய மாட்டோம். எந்நேரம் ஆனாலும் விற்காம இவன் வீட்டுக்கு வர மாட்டான்'' என்கிறார், கிருஷ்ணமூர்த்தியின் அம்மா செல்லம்மா!



ன்பே சிவம்! சிவமே செல்வம்!



# பசிப்பிணி போக்கும் அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில்
# தீபாவளி அமாவாசையன்று
# அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புனித க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...**

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்டின் நான்காம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை தீபாவளித் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

கயிலாயத்தில் எம்பெருமானின் ஜடாமுடியிலிருந்து பெருகும் கங்கை குளிர் காரணமாகப் பனியில் வாடுகிறாள். சிவபெருமானின் ஆணைப்படி காசி சென்று ஸ்ரீ அன்னபூரணியை உத்தரவாஹினியாகப் பாய்ந்து வணங்கி, அம்பிகையின் அருள் அக்னியால் நிவாரணம் பெறுகிறாள். சிவபெருமான் உலக ஜீவராசிகளின் நலம் கருதி அப்போது ஸ்ரீ அன்னபூரணியிடம் அன்னம் யாசித்துப் பெறுகிறார். இதன் மூலம் பிரபஞ்சம் முழுமைக்கும் உணவுபடைக்கும் தாயாக ஸ்ரீ அன்னபூரணி காசியில் கொலுவீற்றிருக்கிறாள். ஒவ்வொரு தீபாவளி அமாவாசையன்றும் அன்னாபிஷேகம், லட்டு தேர், அன்னக்கூடு போன்றவை காசியில் மிக விசேஷமாக நடத்தப்படுகிறது. ஸ்ரீ அன்னபூரணி அருளால் வாழ்நாள் முழுவதும் உணவுத்தட்டுப்பாடின்றி ஆரோக்கியமாக வாழ அனைவரையும் தீபாவளித்திருநாளில் 'ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்' மூலம் அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கின்றோம்.

- ★ தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ★ ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்தநாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பும் காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு வருடமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்நிதிகளில் முகவரித்தும் மற்றும் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பாகவத் கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

**காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.**

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000/- அனுப்பும்போது யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ.5000/= அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை பத்து ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்குப் பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

**அன்னதான சேவையில் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப் பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.**


*Cheque/D.D/M.O அனுப்ப வேண்டிய முகவரி:*

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail:siva siva@vsnl.net


தீபாவளித்திருநாளில் (அமாவாசையில்) அடியார்களுக்கு அமுதளிப்பது சிவனுக்குச் செய்யும் ஜீவசேவையாகும்!

# பொம்மை

"ஹலோ! வெங்கி - மங்கி இருக்காங்களா?"

"எஸ்... வெங்கிதான் பேசறேன்."

"நான் 'மங்கி'கிட்டே பேசணுங்க"

"இருங்க.. போனை குடுக்கறேன்"

"ஹாய்! மங்கி! எப்படி இருக்கீங்க?"

"நல்லா இருக்கேன்!"

"நீங்க எப்படி வெங்கி கூட ஜோடி சேர்ந்தீங்க?"

"அது ஒரு சுவாரசியமான கதை! நான் உருவானது அமெரிக்காவில். வெங்கி, அங்கே ஒரு கம்பெனியில் ஸ்பெஷலாகச் சொல்லி, பிரத்யேக ரப்பரில் என்னை உருவாக்கி, ஒரு நண்பர் மூலமாக சென்னைக்குக் கொண்டு வரச் செய்தார். கடந்த இரண்டு வருஷங்களாக நான் வெங்கியை, என்னுடைய புரோகிராம்களுக்கு அழைத்துக் கொண்டு போய், அவருக்குப் பேரும், புகழும் வாங்கிக் கொடுத்துக்கிட்டு இருக்கேன்!"

"நீங்க, எங்கே போனாலும், வெங்கி தோளில் உட்கார்ந்துகொண்டே போயிடுவீங்களா மங்கி?"

"புரோகிராம்னாதான் என்னை ஆசையா தூக்கி, தோளில் வைச்சுக்குவாரு. மற்றபடி, ஊருக்கு எங்கே போனாலும், ஒரு சூட்கேஸில் அடைச்சு எடுத்துக்கிட்டுப் போயிடுவார்!"

"தனியா சூட்கேஸ் உள்ளே இருக்கிறபோது பயமா இருக்குமா?"



"பயமா? நீங்க ஒண்ணு! வெளிநாடு போகிறபோது, விமான நிலைய அதிகாரிங்க, பெட்டியை ஸ்கேன் பண்ணறப்போ குழம்பிப் போயிடுவாங்க. திறந்து காட்டச் சொல்வாங்க. சூட்கேஸைத் திறந்து காட்டினா, என்னைப் பார்க்கிறப்போ கொஞ்சம் அதிர்ச்சியடைவாங்க! இது பொம்மை குரங்குன்னு சொன்னாலும், சந்தேகப்படுவாங்க."

"அட! ரொம்ப சுவாரசியமா இருக்கே..."

"உடனே வெங்கி, நான் ஒரு வென்டிரிலாக்குவிஸ்ட் கலைஞன்! இது என் பார்ட்னர்" என்று சொன்னாலும் நம்ப மாட்டாங்க. இவரு, போட்டோ ஆல்பத்தை எடுத்துக் காட்டுவாரு. அவங்க, 'எங்கே! இப்போ கொஞ்ச நேரம் பேசிக் காட்டுங்க'ன்னு சொல்லுவாங்க. இவரும், நானும் பேசுவோம்! ரொம்ப ரசிச்சு, பாராட்டுவாங்க."

"சின்னப் பசங்க எல்லாம் உங்களைப் பார்த்தா ரொம்ப பயப்படுவாங்களா?"

"சின்னப் பசங்களை விடுங்க. தாஜ் ஓட்டலில் ஒரு பர்த்டே பார்ட்டி. நானும் வெங்கியும் போயிருந்தோம். ஒரு லேடி, எங்க கிட்டே வந்து, 'இது பொம்மைதானே!'ன்னு கேட்க, வெங்கி, சட்டென்று என் முகத்தைத் திருப்ப, நான் அந்த லேடியை ஒரு லுக் விட்டேன். 'நிஜக் குரங்கா?'ன்னு பயந்து அலறிட்டாங்க தெரியுமா?"

"உனக்கு பிரெண்ட்ஸ் உண்டா?"

"ம்... வெங்கியோட பொண்ணு, நிரஞ்சனாதான் என் குளோஸ் பிரெண்ட்! மங்கி அண்ணன்னுதான் என்னைக் கூப்பிடுவா நிரஞ்!"

# பாட்டு

''சென்னை பல்கலைக்கழக இசைத் துறையில் நாட்டுப்புறப் பாடல்கள் குறித்து ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த மாணவன் நான். அப்போது தென்னிந்தியா முழுவதிலுமிருந்து பதினேழு பல்கலைக் கழகங்கள் பங்கேற்ற 'யூனிஃபெஸ்ட் '90' என்ற கலைவிழா நடைபெற்றது. அதில் சென்னை பல்கலைக் கழகத்தின் சார்பில் பாட்டுப் போட்டியில் பங்கேற்க விரும்பி, அதற்கான தகுதித் தேர்வில் கலந்து கொண்டேன். ஆனால் நான் தேர்ந்தெடுக்கப்படவில்லை. இதில் எனக்கு ஏக வருத்தம்.

அந்த கலைவிழா ஒருங்கிணைப்பாளர்களுள் என் எம்.பி.ல் வழிகாட்டியாக இருந்த பேராசிரியரும் ஒருவர். அவரிடம், எப்படியாவது, மேடையில் இரண்டு நிமிடமாவது பாட எனக்கு வழி செய்யும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டேன். அவர் 'அதெல்லாம் சாத்தியமில்லை' என்று மறுத்துவிட்டார்.

கலைவிழா தொடங்கி, மாலை நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அடுத்து, ஆந்திரா பல்கலைக்கழக குழு, மேடை ஏற வேண்டும். அவர்கள் மேக்-அப் போட்டுக் கொண்டிருந்ததால், மேடைக்கு வர, சற்றுத் தாமதமானது. இது தான் தருணம் என்று, என் பேராசிரியரிடம், ''ஆடியன்ஸ் பொறுமை இழந்து கலாட்டா பண்ணுவதைத் தடுக்க, நான் மேடை ஏறி, ஆந்திரா கலைக்குழு வரும் வரை, பாடி சமாளிக்கிறேன்' என்றதும், அவரும் மேடை ஏற அனுமதி கொடுத்தார்.

மைக்கைப் பிடித்தேன். ''தஞ்சாவூரு மண்ணை எடுத்து, தாலி ஒண்ணு செய்யச் சொன்னேன்! வாடாதே! வசந்த மல்லிகை ரோசாவே!'' என்று பாட ஆரம்பித்ததுதான்! மொத்த ஆடியன்சும், கைதட்டி, ரசிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

பத்து நிமிடங்கள் கழித்து, ஆந்திரா பல்கலைக் கழகக் குழு மேடைக்கு வந்தபோது, நான் பாட்டை முடித்துக் கொண்டேன். ஆனால் பார்வையாளர்கள் 'ஒன்ஸ் மோர்' என்று கூச்சலிட்டனர். வேறு வழியின்றி, மறுபடியும் பாடினேன்.

மறுநாள் காலை, நான் மறுபடி மேடை ஏறிப்பாட வேண்டும் என்று ஏகோபித்த கோரிக்கை. மாலை நல்ல கூட்டம். மிகவும் ரசித்து, பாட்டைக் கேட்டார்கள். அதேபோல மூன்றாம் நாளும் பாட அழைக்கப்பட்டேன்.

மாலையில் பரிசளிப்பு விழா. என்னைப் பற்றி ஏகமாகப் புகழவே, சிறப்பு விருந்தினராக வந்திருந்த பேராசிரியர் அன்பழகன், என் பாடலைக் கேட்க விரும்பினார். மறுபடியும் பாடினேன். அன்று எனக்கு சற்றும் எதிர்பாராத விதமாய் 'மேன் ஆஃப் தி யூனிஃபெஸ்ட்' என்ற பட்டத்தையும் அளித்து சந்தோஷத்தில் திக்குமுக்காடச் செய்துவிட்டார்கள்!'' என்று தன் வாழ்க்கையில் திருப்பு முனை ஏற்படுத்திய பாடலை நினைவு கூர்கிறார் கிராமியப் பாடகர் புஷ்பவனம் குப்புசாமி.



# படிக்கட்டு



அம்மாப்பட்டி என்ற குக்கிராமத்தைச் சேர்ந்தவர். இன்று வாஷிங்டன் நகரில் உள்ள சர்வதேச காவல் துறைத் தலைவர்கள் கழகம் வழங்கும் சர்வதேச சமுதாயக் காவல் பணிக்கான விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். சில நாட்களுக்கு முன்பு, இங்கிலாந்து மகாராணியின் விருதும் அவருக்குக் கிடைத்தது. அவர் கி.ராதாகிருஷ்ணன், ஐ.பி.எஸ். தமிழக காவல் துறையின் லஞ்ச ஒழிப்பு மற்றும் கண்காணிப்புப் பிரிவின் ஐ.ஜி.

கடந்து வந்த வாழ்க்கைப் படிக்கட்டுகளை நினைவு கூர்கிறார் ராதாகிருஷ்ணன்.

"ஏழை விவசாயக் குடும்பம் எங்களுடையது. எட்டாம் வகுப்பு வரை படித்து விட்டு, பின் அரசாங்க ஹைஸ்கூலில் எஸ்.எஸ்.எல்.சி. தமிழ் மீடியத்தில் படித்துவிட்டு, கல்லூரிக்குப் போனவுடன் எல்லாம் ஆங்கிலம்! நகர்ப்புற சூழ்நிலைக்குத் தெரியாத காட்டில் இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தியது. குடும்பத்தில் ஒரே பட்டதாரி நான்தான்.

"படிப்பில் என்றைக்கும் நான் சோடை போனது இல்லை. கஷ்டப்பட்டுப் படித்து முதல் மார்க் வாங்க வேண்டும் என்ற துடிப்புதான் பல்கலைக்கழக ரேங்க் வாங்க அடிப்படைக் காரணம்.

"கல்லூரிநாளில், கெமிஸ்ட்ரியில் மேற்கொண்டு ஆராய்ச்சியில் ஈடுபட வேண்டும் என்பதே என் விருப்பமாக இருந்தது. எம்.எஸ்.ஸி பரீட்சை முடித்த கையோடு குடும்பத்துக்கு உதவும் நோக்கத்துடன், பள்ளி ஆசிரியர் ஆனேன்.

"கல்லூரியில் படித்த போது, எங்கள் கல்லூரியின் முன்னாள் மாணவரான பாலசந்திரன் என்பவர் ஐ.ஏ.எஸ். எழுதி, தேர்வாகி, மே.வங்காளத்தில் ஐ.ஏ.எஸ். அதிகாரியாய்ப் பணிபுரிவதை அடிக்கடி சொல்லி, 'உனக்கும் நல்ல திறமை இருக்கிறது. உன்னாலும் ஐ.ஏ.எஸ். பரீட்சையில் பாஸ் பண்ண முடியும்' என்று என் ஆசிரியர்கள் ஊக்கம் அளித்தார்கள். அதன்படி சிவில் சர்வீஸ் பரீட்சை எழுதி, இந்தியக் காவல் பணிக்குத் தேர்வு செய்யப்பட்டேன்.

முதல் போஸ்டிங் ராமநாதபுரத்தில் எஸ்.பி. தொடர்ந்து, தமிழகத்தின் பல்வேறு பகுதிகள், பல்வேறு பொறுப்புகள். அத்தனையிலும், என்னால் மிகச் சிறப்பாக என்ன செய்ய முடியுமோ, அதை நான் செய்திருக்கிறேன். ராமநாதபுரத்தில் இருந்த போது, உலகச் சந்தையில் பத்து கோடி மதிப்புள்ள ஆயுதங்களை, விடுதலைப் புலிகள் கையிலிருந்து பறிமுதல் செய்தேன். சிவகங்கையில் இருந்தபோது, கள்ளச் சாராயத்தை முற்றிலும் ஒழித்தேன். கோவை தொடர் வெடிகுண்டு சம்பவத்தைத் தொடர்ந்து, மக்களையும், போலீசையும் இணைத்துச் செயல்பட்டேன். (கல்கி கூட 'கோவை ஹீரோ' என்று கவர் ஸ்டோரி போட்டதே!) தர்மபுரியில் நக்ஸலைட்களை ஒடுக்கியது. இப்படி நிறைய சொல்லலாம்..."

பேட்டி, தொகுப்பு :
**எஸ்.சந்திரமௌலி**

**ஜி.பி.சதுர்புஜன்**

# அம்மா என்றாலே இப்படித்தானா?

**கா**லை ஏழரை மணி அவசரம்.

சித்தார்த் வேண்டா வெறுப்பாக தோசையை விண்டு கொண்டிருந்தான். ஒவ்வொரு விள்ளலுக்கும் ஆயிரம் யோசனை. அம்மாவின் மேல் கோபம் கோபமாக வந்தது அவனுக்கு.

"எத்தனை தோசை சாப்பிட்டே?"

"ஒண்ணுதாம்மா"

"ஒண்ணு எப்படி போதும்? கிளாசில் போய் உட்காந்த உடனே பசி வயித்தைக் கிள்ள ஆரம்பிக்கும். இதெல்லாம் பத்தவே பத்தாது. மூன்று தோசையாவது சாப்பிடணும், ஆமா.!"

ஒரே பிள்ளையானாலும் வசந்திக்குக் கண்டிப்பு என்றால் கண்டிப்புதான்.

முறைத்த அம்மாவை திரும்ப முறைத்தான் சித்தார்த்.

'ஏன் இந்த அம்மா காலை வேளையில சாப்பிடறதுக்கு இப்படி ஒரு கெடுபிடி பண்ணறா..?'

வேறுவழியில்லாமல், வேண்டா வெறுப்பாக மீதி தோசைகளை வாயில் அடைத்துக் கொண்டு, புத்தக மூட்டையைத் தூக்கிக் கொண்டு வேன் சத்தம் வந்த திசையில் காற்றாய்ப் பறந்தான்.

தன்னுடைய செய்கையை, தானே திரும்பிப் பார்த்துக் கொண்டாள் வசந்தி.

அவளுக்குப் பழைய ஞாபகங்கள் எல்லாம் வந்தன.



**அ**வள் ஸ்கூல் கிளம்பு கையில் சாப்பிடும்போதும் அவளுடைய அம்மாவும் இப்படித்தான். ஒரே கண்டிப்பு.

"போதும் சாப்பிட்டது. எத்தனை தோசை தின்பேடி காலை வேளையிலே? அடுத்தவளுக்கு வேண்டாமா? தோசை வார்த்து வார்த்து கையே வலிக்கிறதே! போதும், இத்தோட நிறுத்திக்கோ!"

ஏழு குழந்தைகளில் வசந்தி கடைக்குட்டியாக வந்து பிறந்திருந்தாலும், அவள் அம்மாவும் இப்படித்தான். ஒரே கண்டிப்பு!

அந்த கண்டிப்போடு பசியின் ஞாபகமும் பசுமையாய் இருப்பது வேடிக்கைதான் என்று நினைத்துக் கொண்டாள் வசந்தி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd.
Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

